# சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திற்கான முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**மு.சித்ரா தேவி** எம்.ஏ., எம்.எட்., எம்.பில்.,

பதிவு எண்: P 4194

ஆய்வு நெறியாளர்

முனைவர் **கெ.செல்லத்தாய்**, எம்.ஏ. எம்.பில்., பிஎச்.டி

துறைத் தலைவர் & இணைப் பேராசிரியர்






தமிழியற்புலம்

**மதுரை காமராசர் பல்கலைக்கழகம்**

(ஆற்றல்சார் பல்கலைக் கழகம்)

மதுரை - 625 021


மார்ச் - 2020

**முனைவர் கெ. செல்லத்தாய் எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி**
துறைத் தலைவர் & இணைப் பேராசிரியர்
எஸ்.பி.கே. கல்லூரி
அருப்புக்கோட்டை- 626 101.

# ஆய்வு நெறியாளர் சான்றிதழ்

மதுரை காமராசர் பல்கலைக் கழக தமிழ்த்துறையில் பகுதி நேர ஆய்வாளராக மதுரை காமராசர் பல்கலைக் கழத்தில் முனைவர் பட்ட ஆய்விற்காக **"சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்"** எனும் தலைப்பில் தன்னியலாக ஆய்வு செய்து ஆய்வேட்டினை அளித்துள்ளார். இந்த ஆய்வேடு இதற்கு முன்பு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்று சான்றளிக்கிறேன்.

**ஆய்வு நெறியாளர் கையொப்பம்**

**(முனைவர் கெ.செல்லத்தாய்)**

**இடம் : மதுரை**

**நாள் :**

**திருமதி. மு.சித்ரா தேவி எம்.ஏ., எம்.எட்., எம்.பில்.,**
பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை-625 021.

## ஆய்வாளர் உறுதிமொழி

**”சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்”** எனும் தலைப்பில் முனைவர் பட்டம் பெறுவதற்காக மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெற்ற இந்த ஆய்வேடு சொந்த முயற்சியில் உருவாக்கப்பெற்றதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப்பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

**ஆய்வாளர் கையொப்பம்**

**(மு.சித்ரா தேவி)**

**இடம் : மதுரை**
**நாள் :**

**நன்றியுரை**

**"சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்"** எனும் பொருண்மையில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு அனுமதி அளித்த மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணை வேந்தர் மற்றும் ஆட்சி குழுவினர் அனைவருக்கும் என் நன்றியை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் கல்விப் பணிக்கும் ஆய்வுப் பணிக்கும் வாய்ப்பு வழங்கிய மதுரை காமராசர் பல்கலைக்கழக உறுப்புக் கல்லூரிக்கு என்றென்றும் நன்றியுடையேன்.

தமிழாய்வுத் துறையில் ஆய்வை மேற்கொள்ள வாய்ப்பளித்த கல்லூரி மேனாள் முதல்வர் முனைவர் **வெ.மகேந்திரன்** அவர்களுக்கும், இந்நாள் முதல்வர் முனைவர் **ம.முத்துக்குமார்** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வின் தொடக்கம் முதல் நிறைவு வரை அனைத்துப் பணிகளிலும் இன்முகத்தோடும் மன மகிழ்ச்சியோடும், விந்தோம்பல் பண்போடும் என்னை வழி நடத்தியதோடு என்னுடைய பல்வேறு செயல்பாடுகளுக்கு உறுதுணையாக இருந்திடும் என் ஆய்வு நெறியாளர் எஸ்.பி.கே.கல்லூரி தமிழ்த்துறை தலைவர் பேராசிரியர் முனைவர் **கெ.செல்லத்தாய்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

ஆய்வை குறித்த காலத்தில் நன்கு முடிக்க ஆர்வம் கொடுத்த பேராசிரியர் முனைவர் **து.வெள்ளைச்சாமி** அவர்களுக்கும், என் உடன்பிறவா சகோதரர்கள் **ரா.குருநாதன்,** முனைவர் **ஆ.முனியாண்டி** அவர்களுக்கும், என் நண்பர்கள் பேரா.முனைவர்.**வீ.முருகானந்தம்,** முனைவர் **மணி** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

நட்பு என்ற முறையில் தோளோடு தோள் கொடுத்து உதவிய தோழிகள் **பேரா.காயத்ரி, பேரா.அனீஸ்ரீ, பேரா.செல்வி, பேரா.முருகஜோதி, பேரா.முத்துமாரி, பேரா.ராஜலட்சுமி** அவர்களுக்கும், என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கல்விப் பணியிலும் ஆய்வுப் பணியிலும் நான் ஈடுபட முழுமுதற் காரணமாக விளங்கிய எனது தந்தையார் திருமிகு.**சி.முருகன்** (த.மி.வா) அவர்களுக்கும், தாயார் திருமதி. **தங்கமணி** அவர்களுக்கும், எனது இரண்டாவது பெற்றோரான மாமா மூத்த வழக்கறிஞர் திருமிகு.**க.பால்ராஜ் பி.ஏ.,பி.எல்.,** அவர்களுக்கும், அத்தை திருமதி.**பா.முனியம்மாள் பி.எஸ்.சி.,** அவர்களுக்கும் திருமிகு.**க.ராமகிருஷ்ணன்** -திருமதி.**ரா.மாரியம்மாள்** அவர்களுக்கும் எனது உடன்பிறந்த சகோதரர் **மு.மணிகண்டராஜா பி.இ** அவர்களுக்கும், அவரது துணைவியார் **ம.உமாமகேஸ்வரி பி.பார்ம்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

என் வாழ்வின் உயர்வுக்கு உற்ற துணையாய், முனைவர் பட்ட ஆய்வில் முனைந்து செயல்பட வைத்து, இவ்வாய்வுப் பணியில் ஈடுபட்ட காலங்களில் ஏற்பட்ட இன்னல்களில் என்னோடு உறுதுணையாக இருந்து என் வளர்ச்சிக்குப் பெரும்பங்கு வகித்து எல்லாவகையிலும் என்னுடன் பங்கேற்று உதவி வருகிற என் கணவர் திரு. **க.பா.ராஜேஷ் கண்ணன் எம்.ஏ., பி.எல்.,** அவர்களுக்கும் எனது அன்புக்கண்மணிகள் **கரிஷ்மா ராஜேஷ், பா.ரா.ஹரிகரபாலன், மு.அமுதரசி** ஆகியோர்களுக்கும் என் உள்ளார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எனது ஆய்விற்குத் தேவையான நூல்களைத் தேடி எடுத்துத் தந்துதவிய **பேரா.முனைவர் ம.பெரியசாமி** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களைக் கொடுத்துதவிய மதுரை காமராசர் பல்கலைக் கழக நூலகம், மற்றும் பல்வேறு நூலகத்திற்க்கும் அதில் பணியாற்றி வருகிற அனைத்து நூலகர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

எனது ஆய்வேட்டினைச் சிறப்பாக கணினியில் தட்டச்சு செய்து கொடுத்த சாத்தூார் **கே.பி.ஆர் கணினி உலக** நிறுவனத்தார்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

(மு.சித்ரா தேவி)
(ஆய்வாளர்)

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| இளம் | - | இளம்பூரணர் |
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| உ.வே.சா | - | உ.வே.சாமிநாதையர் |
| கலி | - | கலித்தொகை |
| தொல் | - | தொல்காப்பியம் |
| தொ. ஆ | - | தொகுப்பு ஆசிரியர் |
| நச் | - | நச்சினார்க்கினியர் |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| பேரா | - | பேராசிரியர் |
| பொருள் | - | பொருளதிகாரம் |
| மு.நூ | - | முற்காட்டிய நூல் |
| மொ.பெ.ஆ | - | மொழி பெயர்ப்பு ஆசிரியர் |
| வ.எண் | - | வரிசை எண் |
| N | - | Number |
| P | - | Page |
| PP | - | Pages |

## உள்ளுரை

# முன்னுரை

## ஆய்வுப் பொருள்

**“சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்”** என்னும் பொருளில் இவ்ஆய்வு அமைகின்றது. இவ்ஆய்வு, சங்கத்தொகை நூல்களான அகநானூறு, கலித்தொகை ஆகியவற்றில் அமைந்த பாடல்களின் உள்ளடக்கச் செய்திகளையும், அடிக் கருத்துக்களையும் காலப் பின்னணியில் விளக்கம் செய்வதாக அமைகின்றது. மேலும் அப்பாடல்களில் அமைந்த முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் ஆகிய இம்மூன்றும் இவ் ஆய்வில் ஒப்பு நோக்கப்படுகின்றன.

## ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியங்கள் மனித வாழ்வின் பல்வேறு தளங்களையும், சூழல்களையும் எடுத்துக்காட்டும் காலக் கண்ணாடியாக விளங்குகின்றன. ஐந்திணை ஒழுக்கங்களையும், பண்டையக் காலப் பண்பாட்டுச் சிறப்புக்களையும் பல அரிய வாழ்வியல் மெய்மைச் சிந்தனைகளையும் விளக்குகின்றன. தமிழ் மக்களின் நாகரிகம் பற்றி அறிய விரும்புவோருக்குச் சான்றாதாரமாக, செய்தி ஊற்றாக அமைவது சங்க இலக்கியங்கள் ஆகும். பழந்தமிழரின் வாழ்வில் இயற்கை பின்னிப் பிணைந்துள்ளன. சங்க இலக்கியத்தின் எச்சமாக இயற்கையை இன்று போற்றுதல் ஒவ்வொரு தனிமனிதனின் கடமை ஆகும். சங்க இலக்கியங்கள் வழி அறியலாகும் பருவங்களையும், அப்பருவங்களில் தமிழர் தம் களவு, கற்பு ஆகிய அகத்திணை ஒழுக்கங்களை இத்தொகை நூல்கள் வெளிப்படுத்துகின்றன. பருவநிகழ்வுகள் காதலர்களின் ஒழுக்க நிகழ்வுகளுக்கும், உணர்வுகளுக்கும், பின்புலமாக அமைகின்றமையையும் இந்நூற்பாடல்கள் புலப்படுத்துகின்றன. அவற்றை எடுத்துக்காட்டி விளக்குவதே இவ்ஆய்வு நோக்கமாகக் கொண்டுள்ளது.

**ஆய்வு தலைப்பு**

**“சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்”** என்பதே ஆய்வுத் தலைப்பாக அமைகின்றது.

**கருதுகோள்**

சங்க இலக்கிய நூல்களான அகநானூறு, கலித்தொகையில் பண்டையத் தமிழ் மக்களின் காதல், வீரம் சார்ந்த நிகழ்வுகளையும், பருவ நிகழ்வுகளையும், பருவ நிகழ்வுகளை பின்புலமாக கொண்டு வாழ்ந்த சங்க கால மக்களின் வாழ்க்கை முறைகளையும், சமுதாய நிகழ்வுகளையும் உள்ளடக்கமாகக் கொண்டு அமைந்துள்ளன. அவற்றை நுணுகி ஆராய்ந்து கண்டறிந்து புலப்படுத்துவது இவ் ஆய்வின் கருதுகோள் ஆகும்.

**ஆய்வு அணுகுமுறைகள்**

இலக்கியங்களை ஆய்வு செய்யப் பல்வேறு அணுகுமுறைகளை ஆய்வாளர்கள் பயன்படுத்துவதுண்டு. இவ்ஆய்வு உள்ளடக்கப் பகுப்புமுறைத் திறனாய்வாக (Content Analysis) அமைகின்றது. இவ் ஆய்வில் விளக்க முறைத் திறனாய்வும் (Descriptive Criticisn), பகுப்புமுறைத் திறனாய்வும்(Analytical Criticism) பின்பற்றப்பட்டுள்ளன. தேவையான இடங்களில் உளவியல் அணுகுமுறையும் (Psychological Approach), ஒப்பியல் அணுகுமுறையும் (Comparative Approach) பின்பற்றப்பட்டுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள்**

அறிஞர் வ.சு.ப மாணிக்கம் தம் ‘தமிழ்க் காதல்’ நூலில் சங்க அகப்பாடல்கள் அனைத்தையும் ஒரு சேர நோக்கித் தமிழ் அகமரபுகளை

விளக்கம் செய்திருக்கிறார். அறிஞர்கள் சிலர் சங்க அகநூற்பாடல்களைத் தனித்தும், அகத்திணைகளின் அடிப்படையில் சங்கப்பாடல்களைத் தொகுத்தும், அப்பாடல்களில் காணலாகும் முதல், கரு, உரிப்பொருள்களை ஆராய்ந்திருக்கின்றனர். தொல்காப்பியப் பொருளதிகார இலக்கியக் கொள்கைகளின் அடிப்படையில் சங்க அகப்பாடல்களின் தொகை நூல்களைச் சிலர் ஆராய்ந்திருக்கின்றனர். 'பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை' தொடர்பான அறிஞர் மு.வரதராசன் மற்றும் அறிஞர் தனிநாயக அடிகளார் ஆகியோரின் நூல்களும், 'சங்க இலக்கியத்தில் மரபும் திறனும்' குறித்த அறிஞர் தமிழண்ணல் அவர்களின் நூலும் சங்க இலக்கிய ஆய்வில் சிறந்தனவாகக் குறிக்கத்தக்கன. சங்க இலக்கியத்தில் நிலம் பற்றியும், காலம் பற்றியும் 'பழந்தமிழ் அகப்பாடல்களில் நிலமும் பொழுதும்' தொடர்பாக பானு நூர்மைதீன் அவர்களால் எழுதப்பட்ட நூல்கள் மற்றும் 'சங்கப் பாடல்களில் கால நிகழ்வும் காதல் வாழ்க்கையும்' என்னும் முனைவர் பட்ட ஆய்வும், வழிகாட்டுதலாக இன்னும் சில நூல்களும், ஆய்வேடுகளும் எடுத்துக்கொள்ளபட்டது.

**ஆய்வு எல்லை**

எட்டுத் தொகை அகநூல்களில் குறிப்பிடத்தக்க நூலான **"அகநானூறு, கலித்தொகை"** மட்டுமே ஆய்வு எல்லைக்கு உட்படுத்தப்படுகின்றது.

**முதன்மைச் சான்று**

எட்டுத்தொகை அகநூல்களான அகநானூறு, கலித்தொகையில் கடவுள் வாழ்த்து நீங்கலாக (549) ஐநூற்று நாற்பத்து ஒன்பது பாடல்கள் முதன்மை ஆதாரமாக அமைகின்றன.

**துணைமைச் சான்று**

இவ்ஆய்வு தொடர்பான ஆய்வேடுகள், திறனாய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், சொற்பொழிவுகள், விளக்கவுரை நூல்கள், இலக்கிய வரலாற்று நூல்கள், அகராதிகள், கலைக் களஞ்சியங்கள், ஆராய்ச்சிக் குறிப்புகள், அறிஞர்களின் ஆராய்ச்சி முன்னுரைகள் ஆகியன இவ்ஆய்விற்குத் துணைமை ஆதாரங்களாகக் அமைகின்றன.

**ஆய்வின் அமைப்பும் பகுப்பும்**

**"சங்க அகஇலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்"** என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு முன்னுரை மற்றும் முடிவுரை நீங்கலாகக் கீழ்க்காணும் ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டு ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

ஆய்வு முன்னுரை

1. கார்காலமும் மாந்தர்கள் நிலையும்
2. பனிக்காலமும் மாந்தர்கள் நிலையும்
3. வெயில்காலமும் மாந்தர்கள் நிலையும்
4. பகற்பொழுதும் மாந்தர்கள் நிலையும்
5. மாலைப்பொழுதும் மாந்தர்கள் நிலையும்
6. இரவுப்பொழுதும் மாந்தர்கள் நிலையும்

ஆய்வு முடிவுரை

**"ஆய்வு முன்னுரையில்"** ஆய்வுப் பொருள், ஆய்வு நோக்கம், ஆய்வு தலைப்பு, கருதுகோள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லை, முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள், ஆய்வின் அமைப்பும் மற்றும் பகுப்புகள் குறித்து விளக்குவதாக அமைக்கப்பட்டுள்ளன.

**“கார்காலமும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் முதலாம் இயலில் கார்கால நிகழ்வு, தலைவன் தலைவியர் சேர்ந்திருத்தலின் மகிழ்வு, கார்காலத்தில் தலைவியின் பிரிவாற்றாமை, மயில் அகவும் கார்காலம், தண் பெயல் பொழிந்த காலம், கார் பயம் பொழிந்த நீர்திகழ் காலை, ஈன்று நாள் உலந்த வாலா வெண்மழை, ஏறுடைப் பெருமழை, தலைவி தன்னைத்தானே ஆற்றவித்தல், பஞ்சியின் வெண்மழை, பெய்து புறந் தந்த பொங்கல் வெண்மழை, தலைவியைத் தோழி ஆற்றுவித்தல், தலைவனின் பாசறைப் புலம்பல், பாசறைக்கண் மாலைப்பொழுதில் மழை, கமஞ்சூல் மாமழை, காண்தகு புறவு கார், தீம்பெயற் கார், படு மலைப்பொழிவு, கார்கவின் கொண்ட காமர் காலை, தேர்ப்பாகனுக்குத் தலைவன் தன் ஆற்றாமை கூறுதல், தேரை விரைந்து செலுத்த வேண்டுதல், தன் வரவைத் தலைவிக்குக் கூறச் சொல்லுதல், கார் கண்டு தேரைச் செலுத்தச் சொல்லுதல், தேர்ப்பாகன் ஆற்றுவித்தல், துணை தரு தண் கார், ஆர்பெயல் உதவிய கார் என்ற நிலைகளில் அகநானூறு, கலித்தொகை பாடல்களில் காணலாகும் கார்கால நிகழ்வுச் செய்திகள் விரிவாகவும் விளக்கமாகவும் ஆராயப்பெற்றுள்ளன.

**“பனிக்காலமும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் இரண்டாம் இயலில், பனிக்கால நிகழ்வும், அந்நிகழ்வில் தலைவன், தலைவியர் நிலை, தலைவியின் ஆற்றாமை, பனிகடி கொண்ட பண்புஇல் வாடை, கடிதுவந்து இறுத்த கண்இல் வாடை, அறன் இன்று அலைக்கும் ஆனா வாடை, கோடைப் பூளையின் வாடை, தலைவன் நெஞ்சிற்குக் கூறிப் பிரிவு விலக்கல், புலம்போடு வந்த பொழுது கொள் வாடை, தளிமழை பொழிந்த தண்வரல் வாடை, தலைவன் பிரிவை அறியும் தலைவியின் நிலை, தலைவனின் பாசறைப் புலம்பல், தலைவன் வரைவு நீடித்த காலத்து தலைவியின் நிலை, சிதர் சினை தூங்கும் அற்சிரம், புலம் புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம், வடந்தை தூக்கும் வருபனி அற்சிரம், வயங்கு கதிர் கரந்த வாடை வைகறை, வாடை தூக்கும் வருபனி

அற்சிரம், தோழி ஆற்றுவித்தல், தோழி, தலைவன் வரைவுரைத்தல் ஆகியன குறித்த செய்திகளும் எடுத்துக்காட்டப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

**“வெயில்காலமும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் மூன்றாம் இயலில் இளவேனில் இயல்பு, அழல் போன்ற வெங்கதிர், நெருப்பு எனச் சிவந்த உருப்பு, அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில், பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிறு, பகல் செய் பல்கதிர்ப் பருதி, தெறுகதிர் ஈரம் நைத்த நீர்அறு நனந்தலை, தலைவனைத் தோழி செலவழுங்குவித்தல், தலைவியைத் தலைவன் உடன்மறுத்துச் செல்லுதல், தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுதல், வேனில் நீடிய வேய் உயர் நனந்தலை, வேனில் நீடிய வான் உயர் வழிநாள், அலங்கு கதிர் வேய்ந்த அழல் திகழ் நனந்தலை, வேனிற் பாதிரிக் கூனி மாமலர், ஒருதனி நெடுவீழ் உதைத்த கோடை, கடுவெயில் திருகிய வேனில் வெங்காட்டு, அழல்கான்று திரிதரும் அலங்கு கதிர், தோழி ஆற்றுவித்தல், விளங்கு பகல் உதவிய பல்கதிர் ஞாயிறு, காடுகவின் அழியும் கோடை, குயில் குரல் கற்ற வேனில், பருவங் கண்டு ஆற்றாதிருத்தல், தலைவனைத் தோழி இயற்பழித்தல், தலைவி ஆற்றியிருத்தல், நற்றாய் புலம்பல், முகை தலை திறந்த வேனிற், தெறுகதிர் உலைஇய வேனில் வெங்காட்டு, அழல் எறி கோடை, தலைவன் வரவினைத் தலைவிக்குக் கூறுதல் குறித்த செய்திகள் எடுத்துக்காட்டப்பட்டு விளக்கப்படுகின்றன.

**“பகற்பொழுதும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் நான்காம் இயலில் வைகறை, நண்பகல், விடியல், எற்பாடு பொழுதுகளில் காதலர் நிலை விளக்கப்படுகின்றது. தோழி தலைவனுக்கு வாயில் மறுத்தல், தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுதல். தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறுதலர், தலைவனை வரைவு கோடல், தோழி உடன்போக்கு மறுத்தல், பரத்தமைப் பரிவு, தலைவியின் ஆற்றாமை; தோழி செலவழுங்குவித்தல், தலைவியை இற்செறித்தல், உடன்போக்கு, தலைவியின் ஆற்றாமை,

தோழி ஆற்றுவித்தல், தலைவன் வரவு கூறுதல் ; தலைவன் வரைவு நீட்டித்தல், தலைவி தன் நெஞ்சிற்குக் கூறுதல், தோழி ஆற்றுவித்தல், தலைவன் புலம்பல் குறித்ததான வைகறை, காலை, நண்பகல், எற்பாடு என நான்கு பொழுதுகளில் நிகழும் காதலர்தம் ஒழுக்கம் இவ்இயலில் எடுத்துக்காட்டி விளக்கப்பட்டுள்ளது.

**“மாலைப்பொழுதும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் ஐந்தாம் இயலில், மாலைப்பொழுதின் துன்பம், புன் கண் மாலை, ஒரு வழித்தணத்த காலத்தில் தலைவியின் ஆற்றாமை, பகற்குறி, இரவுக்குறி மறுத்தல், வரைவு நீட்டித்த காலத்து வருத்தம், வன்பொறை எதிரழிந்து கூறுதல், செலவுக் குறிப்பறிந்து தலைவி கூறுதல், தலைவன் நெஞ்சொடு கிளத்தல், நனை நகு மாலை, புலம்பு கொள் மாலை, எல்லை போகிய புல்லென் மாலை, பழங் கண் மாலை, உடன்வருவென் என்ற தலைவிக்குத் தலைவன் கூறுதல் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல், பருவ வரவு கண்ட தலைவியின் ஆற்றாமை, வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுதல் ஆகிய செய்திகள் விரிவாக விளக்கப்படுகின்றன.

**“இரவுப்பொழுதும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் ஆறாம் இயலில், தலைவனைப் பகலில் வரக் கூறுதல், தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறுதல், தலைவன் சிறப்புறத்தானாகத் தலைவி கூறுதல், துன்பம் தரும் யாமம், தொழில் மழை பொழிந்த கானாட் கங்குல், வான் எனப்பூத்த பானாட் கங்குல், வான் உமிழ் நடுநாள், மயங்குதுளி பொழிந்த பானாட் கங்குல், படுமழை பொழிந்த பானாட் கங்குல், இரை நசைஇப் பிரிக்கும் அரைநாட் கங்குல், யாமே அன்றியும் உளர் கொல் பானாள், புயல் ஏறு உரைஇய வியல் இருள் நடுநாள், அடுபுலி வழங்கும் ஆர்இருள் நடுநாள், ஏனலும் இறங்கு பொறை உயிர்த்தன பானாள், உரவு மழை பொழிந்த பானாட் கங்குல், கணமழை

பொழிந்த கான்மடி இரவு, முன்னிலைப் புறமொழி, இருகுறி மறுத்தல், தோழி தலைவனை வரைவு வேண்டல், தலைவி தலைவனை வரைவு கடாதல், தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்குதல், தோழி செலவழுங்குவித்தல், தலைவன் பிரிவைத் தோழி கூறுதல், தலைவியின் ஆற்றாமை, பாம்பு மதன் அழியும் பானாட் கங்குல், மன் உயிர் மடிந்த பானாட் கங்குல், துளி தலைக்கொண்ட நளிபெயல் நடுநாள், தோழி ஆற்றுவித்தல், தலைவன் வரவுரைத்தல் ஆகிய செய்திகள் விளக்கமாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

**"முடிவுரையில்" "சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்"** என்னும் பொருண்மையில் அமைந்த இவ்ஆய்வின் கருதுகோளை மெய்ப்பிக்கும் வகையில் இயல்கள் தோறும் தொகுக்கப்பெற்ற ஆய்வு முடிவுகள் முடிவுரை பகுதியில் வகுத்தும், தொகுத்தும் தருவதோடு, தொடர்ந்து மேற்கொள்ளப்பட வேண்டிய பிற ஆய்வாளருக்கான களம் சுட்டி அமைகின்றது.

**துணை நூற்பட்டில்**

துணை நூற்பட்டியலில் ஆய்வுக்குத் துணையாக அமைந்த முதன்மை, துணைமை ஆதார நூல்கள், கட்டுரைகள், அகராதிகள், நிகண்டுகள், கலைக்களஞ்சியங்கள், ஆங்கில நூல்கள் ஆகியவை அகரவரிசைப்படி தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்பு**

இவ் ஆய்வோடு தொடர்புபட்ட பின்னிணைப்பில் அகநானூறு மற்றும் கலித்தொகை நூல்களில் அமைந்த காலம், பொழுது தொடர்புபட்ட பாடல்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

# இயல் - 1

## கார்காலமும் மாந்தர்கள் நிலையும்

### முன்னுரை

சங்க அகப்பாடல்களில் பருவங்கள் முக்கிய இடம் வகிக்கின்றன. அகம் என்பது உள்ளம், இல்லறம் என இரண்டாக குறிப்பிடப்படுகின்றது. அகப்பாடல்களில் களவு வாழ்க்கை, கற்பு வாழ்க்கை என இரண்டாக பிரிக்கப்பட்டுள்ளது. களவு வாழ்க்கை என்பது தலைவன், தலைவி இருவரும் யாருக்கும் தெரியாமல் உள்ளக்கிடக்கையின் உணர்வுகளைப் பரிமாறிக் கொள்வதாகும். கற்பு வாழ்க்கை என்பது ஊரறிய உறவுகளை வைத்துத் திருமணம் செய்துகொண்டு வாழ்வதாகும். இத்தகு வாழ்க்கை முறையில் களவு காலத்தில் தலைவன் வரைவு நீட்டிப்பு செய்வான். கற்பு காலத்தில் தூது, பொருள், போர்க்காரணமாகத் தலைவியைப் பிரிய நேர்கின்றபோது, இல்லறம் வருவதற்கு காலதாமதம் ஆகும்பொழுது பிரிவாற்றாமையினால் இருவரும் மனவேதனைப்படுவது இயல்பு. அத்தகு சூழ்நிலையில் காலத்தையும், பொழுதையும் கண்டு தங்களுடைய ஆற்றாமைகளை தீர்த்துக்கொள்வதும் உண்டு. சிலநேரங்களில் பொழுதே அவர்களுக்கு மிகுந்த துன்பம் தருவதாக அமையும். அவர்கள் இயற்கையையும், தாவர, விலங்குகளின் செயல்பாடுகளையும் கண்டு புலம்புவதும் உண்டு. தலைவன், தலைவி இருவரின் வாழ்வியல் பின்னணிகளில் பருவங்கள் முக்கியப் பங்கு வகுக்கின்றன. அப்பருவ மாற்றத்தால் துன்பப்படும் தலைவிக்கு தோழி ஆறுதல் கூறுவதும், தலைவன் தானாகப் பாசறையில் புலம்பிக்கொள்வதும், வினை முடித்துவரும் தலைவன் வரும் வழிகளில் இயற்கையின் மாற்றத்தைக் கண்டு தேரை விரைவில் செலுத்துமாறு வினவுவதுமான இன்னபிற செயல்கள் நடைபெறுவதற்கு முக்கிய காரணியாக இருப்பது பருவங்கள் ஆகும். இப்பருவங்கள் ஆறு பெரும்பொழுதுகளாகவும், ஆறு

சிறுபொழுதுகளாகவும் உள்ளன. பெரும்பொழுதுகளில் முதலில் கார்கால நிகழ்வில் தலைவன், தலைவியின் நிலை குறித்து அகநானூறு, கலித்தொகை பாடல்கள் கூறும் கருத்துக்கள் பற்றி இவ்ஆய்வில் காண்போம்.

**கார்காலத் தொடக்கம்**

கார்காலம் முல்லைத் திணைக்குரிய காலம். மழை பெய்கின்ற காலத்தைக் குறிப்பது. ஆவணி, புரட்டாசி மாதங்கள் மழையின் தொடக்கக் காலம் ஆகும். உயிரினங்களின் பரிணாம வளர்ச்சிக்குரிய காலம் கார்காலமாகும். ஆதலால்தான் கார்காலத்தை முதலில் வைத்தனர்.

மழை பெய்து, ஓய்ந்து, வாடை காற்று வீசுகிறது. பூமி குளிர்ந்து பனி வீசுகிறது. பின்பு இளவேனில் பிறந்து கோடையாக வெப்ப சலனம் ஏற்பட்டு மறுபடியும் மழைக்காலம் தொடங்குகிறது. இப்பருவங்கள் ஒவ்வொரு சுழற்சி முறையை தன்னகத்தே கொண்டு இயங்கிக்கொண்டிருக்கின்றன. இச்சுழற்சியைப் புறக்காரணியாக இருந்து இடையூறு செய்யாதவரை இயற்கை தன் நிலையிலிருந்து மாறுவதில்லை.

சங்க இலக்கியங்களில் காணலாகும் அகப்பாடல்களில் குறிப்பாக முல்லைத் திணைப் பாடல்களை,

**"காரும் மாலையும் முல்லைக்குரிய"** [1]

**(அகம்: நூற்:952)**

என்பனார் புலவர். கார்காலமும், மாலைப் பொழுதும் குறிக்கப்பட்டு அவற்றின் பின்னணியில் தலைவன், தலைவி, தோழி ஆகிய அகமாந்தர்களின் உணர்வுகள் பேசப்படுகின்றன.

கார்காலத்திலும், கார்காலத்து மாலைப் பொழுதிலும் தலைவன், தலைவி ஆகிய இருவரின் சேர்ந்திருத்தலாலான மகிழ்வும், பிரிந்திருத்தலாலான துன்பமும் அகநானூறு, கலித்தொகை பாடல்களில் எடுத்துக்காட்டி விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

**கார்கால நிகழ்வு**

சங்க பாடல்களில் கார்கால வருகை கார்காலத்தின் சிறப்பு, கார்காலத்து நிகழ்வுகள், கார்காலத்தில் மாந்தர்கள் நிலை முதலியன கூறப்படுகின்றன. இவற்றில் வினை காரணமாகப் பிரிகின்ற தலைவன் குறித்த பருவத்தில் வருவதாகக் கூறுதல் என்ற நிலையிலும், அப்பருவம் வந்த பொழுதும் தலைவன் வராத நிலையினைக் கூறுதல் நிலையிலும், அப்பருவம் வந்த பொழுதில் தலைவன் வந்த நிலையினைக் கூறுதல் நிலையிலும், அப்பருவம் வரும் முன்னே தலைவன் வந்த நிலையிலும், வினையின் பொருட்டுச் சென்ற தலைவன் மீண்டும் வரும்பொழுது பாகனிடம் கூறும் நிலையிலும், வரைவின் பொருட்டுப் பொருளீட்டச் சென்றவன் குறித்த பருவத்து வராத நிலையிலும், மழையைக் குறை கூறும் நிலையிலும், சேர்ந்திருப்போர் மழையை வாழ்த்தும் நிலையிலும், தலைவன் கூற்றாகவும், தலைவி கூற்றாகவும், தோழி கூற்றாகவும், பாணன் கூற்றாகவும் சங்கப் பாடல்களில் கார்கால நிகழ்வுகள் கூறப்படுகின்றன.

**கார் காலமும் தலைவி நிலையும்**

கார்காலம் தலைவன் தலைவி, இருவரும் சேர்ந்திருக்க வேண்டிய காலம். இக்காலம் போர் காரணமாகவோ, பொருள் காரணமாகவோ பிரிந்து செல்லும் தலைவன் மீண்டும் வருவதற்குரிய காலமாக உள்ளது. இக்காலத்தில் தலைவன் வந்துவிட்டால் தலைவிக்கு மகிழ்ச்சி தரும் காலமாகும். வரவில்லை என்றால் துன்பம் மிகுந்த காலமாகும். தாவரங்கள் மழையில் மலர்ச்சியுடனும், நீரால் நிலம் குளிர்ச்சியுடன்

இருக்கக்கூடிய காலமாகும். இக்காலத்தில் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு அனைத்துமே துன்பம் தருகின்றன. இதில் அதிகமாக மாலைப்பொழுது மற்றும் இரவுப்பொழுதில் பெய்யும் மழை ஆகியன தலைவிக்கு மிகுந்த துன்பத்தையும் ஆற்றாமையையும் தருகின்றன. தலைவனின் வரவை எதிர்நோக்கும் தலைவிக்கு மலர்களின் மலர்ச்சியும், இடியின் குரலும், குயிலின் ஓசையும், மாலை நேரமும், வாடைக்காற்றும் துன்பத்தைத் தருகின்றன. எதிர்பார்ப்பில் தலைவன் வரவில்லை எனும் ஏமாற்றம்தான் மிஞ்சுகிறது. எதிர்பார்ப்பிற்கும், ஏமாற்றத்திற்கும் இடைப்பட்டுத் தலைவியின் மனம் ஊசலாடுகிறது.

"பருவ மாற்றத்திற்கேற்ப வாழ்க்கை அமைகின்றது என்றாலும், எல்லாப் பருவத்திலும் தலைவன் பிரிந்தால் துன்பம் தலைவிக்கு. ஆனால் காதல் இழப்பிற்கு வருந்திப்பாடும் காதற் கையறு நிலையும் கிரேக்க முல்லை நிலதத்தவர் காதல் வாழ்வில் குறிப்பிடத்தக்க இடம் பெற்றது. இப்பாடல்களின் பருவ மாற்றங்களை ஒட்டியே அவர்தம் வளர்ச்சியும், தளர்ச்சியும் பாடப்பட்டுள்ளன. கார்காலத்தில் அவர்தம் வாழ்வு வளம் பெறும். வேனிற் காலத்தில் அவ்வாழ்வு வளமை குன்றும். கார்காலம் இன்ப நாட்டத்தைத் தூண்டும். வேனிற்காலம் துயர்மிகு வெம்மையைச் செய்யும். கார்காலம் விளைவைக் குறிக்கும். வேனிற் காலம் அழிவைக் குறிக்கும். இத்தகு பருவ மாறுதல்களை ஒட்டிய முல்லை நிலத்தவர் வாழ்க்கையை 'பயோனிற்கு இரங்கற்பா' (Lamant for Bion) குறிப்பிடுவதாகக் கூறப்படும்"[2] சங்க இலக்கியத்தில் கார்காலப் பிரிவில் தலைவனைப் பிரிந்து தலைவி மிகுந்த துன்பம் அடைவதாகவே கூறப்பட்டுள்ளது.

**கார்காலத்தில் தலைவியின் பிரிவாற்றாமை**

கார்காலத்தில் திரும்பி வருவேன் என்று கூறிச் சென்ற தலைவன் வரும் வரை தலைவி ஆற்றியிருப்பாள். அவன் குறித்த கார்காலம்

தொடங்கியவுடன், தலைவன் வராது போனால் அதனைத் தாங்காது துன்பப்படுவதே ஆற்றாமையாகும்

“களவில் தலைவன் வரைவிடை வைத்துப் பிரியும் போதும், கற்பில் பிரிவிடை வைத்துச் செல்லும் போதும் தலைவி பிரிவுத் துயரால் ஆற்றாது புலம்புகிறாள். இவ்விருவகைப் பிரிவுகளிலும் தலைவி கொள்ளும் துயரில் நுண்ணிய வேறுபாடுகள் காணப்படுகின்றன. பிரிவிடை வைத்துச் செல்லும் தலைவன் திரும்பும் பருவத்தைச் சொல்லிப் பிரிவதும், வரைவிடை வைத்துப் பிரியும் தலைவன் குறித்த பருவத்தில் வராதபோது அவனது சூளில் ஐயம் கொண்ட தலைவிக்கு அவன் பொய்யனாகக் காட்சி தருகிறான். பருவம் குறியாது சென்றோன் இனிய பருவம் கண்டும் வராதபோது அவனது அன்பில் ஐயம் கொண்ட தலைவிக்கு அவன் கொடியனாகக் காட்சி தருகிறான். தலைவன் பருவம் குறித்துச் சென்றபோது, அவன் வராத பருவத்தைச் சுட்டித் தலைவி வருந்துகிறாள். பருவம் குறியாது சென்றபோது பருவகால வரவால் தோன்றிய துன்பத்தைச் சுட்டி வருந்துகிறாள். முன்னதில் பருவம் கண்டும் வந்திலரே என்ற மனக்குறையும் வெளியிடப்படுதற்கு இது காரணமாகலாம்”[3] என்கிறார் ஆ.இராமகிருட்டிணன்.

“தலைவன் பிரிவிடை வைத்தச் செல்லுதலைக் குறிப்பிடும் பாடல்களில் போர்வயிற் பிரிவும், பொருள்வயிற் பிரிவும் சுட்டப்படுகின்றன. போர்வயிற் பிரிந்த தலைவனின் வரவு கார்காலத்தும், பொருள்வயிற் பிரிந்த தலைவனின் வரவு இளவேனிற் காலத்தும் பெரிதும் எதிர்பார்க்கப்படுகிறது. முன்னதில் ‘கார்வந்தது, அரசு பகை தணிந்து அனைவரும் திரும்பினர். தன் தலைவன் வரவில்லை’ எனப் போர்வயிற் பிரிவையும், கார்கால வரவையும் இணைத்துத் தலைவி புலம்புகிறாள். பின்னதில் ‘வேனில் வந்தது’ பொருள் விரும்பி மலை இறந்தோர் வந்திலர்’ என வேனிலையும் பொருளையும் இணைத்துத் தலைவி

புலம்புகிறாள். போர் வயிற் பிரிவில் தலைவன் சென்ற இடம் தெரியும். அங்கு தூது அனுப்பும் முயற்சி தலைவியிடம் காணப்படுகிறது. பொருள்வயிற் பிரிவில் தலைவன் சென்ற இடம் தெரியாதாகலின் அவன் வரவு பற்றிய தூதை எதிர்நோக்கும் ஆர்வம் தலைவியிடம் காணப்படுகிறது."[4]

"தலைவனின் வரவை எதிர்நோக்கும் தலைவி அவன் குறித்துச் சென்ற பருவம் வந்தபோது பருவம் கண்டு நெஞ்சழிந்து நிற்கிறாள் மலர்களின் மலர்ச்சியும், இடியின் குரலும், குயிலின் ஓசையும், மாலை நேரமும், வாடைக் காற்றும், கார்கால வரவினைத் தலைவனுக்கு உணர்த்திநிற்கும் எனத் தலைவி எண்ணுகிறாள். தலைவனின் வரவு பற்றிய உறுதிப்பாடின்மை தலைவிக்கு மனத்துயரை ஆழப்படுத்துகின்றது. தலைவனின் வரவு பற்றிய எதிர்பார்ப்பிற்கும் வரவின்மை பற்றி ஏமாற்றித்திற்கும் இடைப்பட்டுத் தலைவியின் மனம் ஊசலாடுகிறது."[5]

"பருவ வரவும், தலைவனின் வரவின்மையும் இணையும் போது தலைவிக்குத் தோன்றும் ஆர்வ மனநிலையால் அவளுக்குக் கடந்த கால நினைவுகள் மிகுகின்றன. எதிர்கால நம்பிக்கைகள் குறைகின்றன. தன்னைப் புரிந்துகொள்ளத் தலைவிக்கு இச்சூழல் வழி வகுக்கிறது. இச்சூழலில் தலைவிக்கு ஆர்வம் மறைந்து அச்சம் மிகுதலின் அவளது உள்ளத்தில் அமைதி மறைந்து அவலம் மிகுந்து நிற்பதாகக் கூறுகிறார். ஆ.இராமகிருட்டிணன்"[6]

தலைவன் வராத சூழலில் தலைவி தன் ஆற்றாமையைத் தோழியிடம் கூறிப் புலம்புகிறாள். களவு, கற்பு எனும் இரு காலங்களிலும் தோழியிடமே தன் பிரிவாற்றாமையைத் தலைவி கூறுவதாக உள்ளது. அகநானூற்றில் ஆற்றாமையில் இருக்கும் தலைவிக்குத் தோழி ஆற்றுவிப்பதாகவே அதிகமான பாடல்கள் உள்ளன. கார்காலத்தில்

தலைவியைப் பிரிந்திருக்கும் தலைவன் தேர்ப்பாகனிடம் சொல்லிப் புலம்புவதான பாடல்களும் அகநானூற்றில் மிகுதியாக உள்ளன. கலித்தொகையில் சில பாடல்களே உள்ளன. கார்காலத்தில் பிரிந்திருக்கும் தலைவன், தலைவி தொடர்பான நிலைபாடுகளைச் சங்கப் பாடல்களின் அடிப்படையில் பகுத்துக் காணலாம்.

**தலைவி ஆற்றாமையால் தோழியிடம் புலம்பல்**

தலைவன் பலவகைக் காரணங்களால் தலைவியைப் பிரிகின்றான். “தலைவியை விட்டுப் பிரிதல் ஓதற்கும், நாடகாத்தற்கும், அறப்புறங் காத்தற்கும், தூதிற்கும், பொருளீட்டுதற்கும், வேந்தற்குத் துன்பம் உற்றுழி உதவுதற்கும் ஆகும். அங்ஙனம் பிரியுங்கால் தலைவியிடம் சொல்லியும், சொல்லாமலும் பிரிவான். தலைவன் களவுப் புணர்ச்சியில், ‘நின்னிற் பிரியேன், பிரியின் உயிர் தரியேன்’ என்பான். அத்தகையோன் பிரிதல் ஒக்குமோ எனின் ஒக்கும். அவன் தலைவன் ஆதலானும், தனக்குப் புகழும் பொருளும் உறுதல் இன்றியமையாதது ஆகலானும் அவையே ஓர் ஆடவனுக்குச் சிறந்தவை என்பதாலாலும் பிரிவை மேற்கொள்கிறான்”[7] என்னும் கருத்து சுட்டத்தக்கது.

“இல்வாழ்க்கை செம்மை எய்துவது குறித்துத் தலைவன் பொருள் கருதியும் வேறு செயதற்குரிய வினை குறித்தும், கல்வி குறித்தும், பிரிந்தேகுவது உண்டு. தலைவியை வரைந்துகொள்வது குறித்து வரைவிடை வைத்துப் பொருள் நாடிப் பிரிதலும் செய்வன். பிரிவுக் காலங்களில் தலைவன் கார்காலத்திலோ, முன்பனிக் காலத்திலோ, தான் மேற்கொண்ட வினை முடித்தற்குரிய காலத்தை நாடி அறந்துரைக்கும் அக்காலத்திலோ, ‘வருவேன்’ எனக்கூறிப் பிரிவன். அவன் சொல்லிய காலத்தை எதிர் நோக்கித் தலைவியும் அவன் பிரிவால் வருத்தத்தை தாங்கிக் கற்புக்கடன் பூண்டு இனிதிருப்பாள். ஒரே சமயத்துத் தலைவி

தலைவனை நினைந்து ஆற்றாது வருந்துமிடத்து அவள் தம் தோழி அவள் ஆற்றத்தகுவன கூறி ஆற்றியிருக்குமாறு செய்வாள். பிரிந்து சென்ற தலைவனும் தலைமகளின் பிரிவாற்றாது, தான் பிரிந்தேகியவிடத்தே அவளை நினைந்து வருந்துதலும் உண்டு. ஆயினும் தொடங்கிய வினை முடியாமுன் மீளுதல் தலைமகனுக்குத் தலைமைப் பண்பு அன்றாம். அதனால் அவன் அது முடியுங்காறும் பிரிவுத்துயரை ஆற்றியிருப்பான். இவ்வண்ணம் ஆற்றியிருத்தலே பொருளாகத் தலைமக்கள் பால் நிகழும் ஒழுக்க நிகழ்ச்சிகள் முல்லைத் திணைக்கு உரியவாய்ப் புலவர் பாடும் புகழ்பெறுகின்றன.[8]

கார்காலத்தில் திரும்பி வருவேன் என்று கூறிச் சென்ற தலைவன் வரும் வரை தலைவி ஆற்றியிருப்பாள். அவன் குறித்த கார்காலம் தொடங்கியவுடன் தலைவன் வராது போனால் அதனைத் தாங்காது துன்பப்படுவதே ஆற்றாமையாகும்.

தலைவன் வராத சூழலில் தலைவி தன் ஆற்றாமையைத் தோழியிடம் கூறிப் புலம்புகின்றாள். களவு. கற்பு எனும் இரு காலங்களிலும் தோழியிடமே தன் பிரிவாற்றாமையைத் தலைவி கூறுவதாக உள்ளது. இத்தகு நிலையில் பிரிந்து சென்ற தலைவன் கார்காலத்தில் திரும்பி வருவேன் எனக்கூறிச் செல்வான். அப்பருவத்து அவன் வராதிருப்பின் தலைவி ஆற்றாது புலம்புவாள். பருவ வரவு தலைவிக்குத் தலைவன் மீதுள்ள காதலைத் தூண்டும். அதனால் நெஞ்சம் கலங்குவாள். அதோடு கார்காலத்து மாலைப்பொழுதிலும் இன்புற்று இணைந்திருக்கும் பறவைகள் மற்றும் விலங்குளின் இன்பக் காட்சிகளும் தலைவியின் மனதைச் செயலற்றதாகிவிடும். இயற்கையின் ஒவ்வொரு காட்சியும், ஒலியும், மணமும், ஊற்றுணர்வும், தலைவியின் தனிமைத் துயரை மேலும் கூட்டும். துயில் மறந்து துன்பம் துணையாகத் தலைவன் வரவை எதிர்நோக்கிப் பலவாறுப் புலம்புவாள்.

களவு காலத்துப் பிரிந்திருக்கும் தலைவி தன் ஆற்றாமையை வெளிப்படுத்த முடியாது தவிப்பாள். தன் ஆற்றாமையைத் தன் தோழியிடம் சொல்லி புலம்புவாள். கற்புக் காலத்துத் தலைவியும் தோழியிடம் கூறுவதோடு வெளிப்படையாகப் புலம்புவதையும் காணமுடிகின்றது. களவுக் காலத்தில் பொருள் வயிற்பிரிந்த தலைவன் தான் வருவதாகக் குறித்துச் சென்ற கார்காலம் வந்தும், தலைவன் வரவில்லை. அவனது வரவு காணாத தலைவி,

**"மண்கண் குளிர்ப்ப, வீசித் தண் பெயல்,**
**பாடு உலந்தன்றே, பறைக் குரல் எழிலி,**
**புதல் மிசைத் தளவின் இதல் முட் செந்நனை**
**நெருங்கு குலைப் பிடவமொடு ஒருங்கு பிணி அவிழ,**
**காடே கம்மென்றன்றே, அவல,**
**கோடு உடைந்தன்ன கோடற் பைம் பயிர்,**
**பதவின் பாவை, முனைஇ, மதவு நடை**
**அண்ணல் இரலை அமர் பிணை தழீஇ,**
**தண் அறல் பருகித் தாழ்ந்துபட்டனவே:**
**அனைய கொல் - வாழி, தோழி! – மனைய**
**தாழ்வின் நொச்சி, சூழ்வன மலரும்"**

**(அகம்:23, 1-11)**

என்று தோழியிடம் கூறுகிறாள். முழங்கும் குரலை உடைய மேகம் மண்ணெல்லாம் குளிரும்படி மழையை வீசி விட்டு தன் முழக்கத்தை நிறுத்திக்கொண்டது. முற்புதரில் சிவந்த அரும்புகளுடன் தளவம் பூக்களும், நெருங்கிய பிடவம் பூக்களும் பூத்து மணம் வீசுகிறது. கோடல் என்னும் பச்சைப்புல் சங்கு வளையல் உடைந்து கிடப்பது போல எங்கும் பூத்துக் கிடக்கிறது. இவற்றை மேய்ந்து சலித்துக் போன இரலை மான், தன் பிணை மானைத் தழுவிக் கொண்டு ஆங்காங்கே தேங்கி நிற்கும் அறல் நீரைப் பருகிக் கொண்டிருக்கிறது.

வீட்டுவேலியாக இருக்கும் நொச்சியும், அங்குள்ள மௌவல் மரக்கிளைகளும் அரும்புகளைக் காட்டி மலர்ந்திருக்கின்றன. இவற்றையெல்லாம் என் தலைவன் எனக்குச் சுட்டிக் காட்டி. நான் பொருள் தேடி மீண்டு வரும் காலம் இது தான் என்று கூறி பிரிந்து சென்றார். அந்தக்காலம் இப்போது வந்திருக்கிறது. ஆனால் என் தலைவன் இன்னும் வரவில்லையே என்று தலைவி தோழியிடம் தன் ஆற்றாமையை புலம்புவதாக இப்பாடல் அடிகள் சுட்டுகின்றது. மண்ணெல்லாம் குளிரும்படி மழை பெய்தது. என் மனமெல்லாம் தலைவன் பிரிவால் தவித்தபோது வெறுமை அடைகின்றது. நிலத்தில் முளைத்துக் கிடக்கும் தாவரங்கள் எல்லாம் மழையால் மலர்கள் மலர்ந்து மகிழ்ச்சியில் வளமையாக இருக்கின்றன. தலைவன் வராமையால் என் இளமை எல்லாம் வாடிக் கிடக்கின்றது. மான்கள் இணைபிரியாது மகிழ்ச்சியோடு இருப்பதைப் பார்க்கும் பொழுதெல்லாம் வேதனையை தருகின்றது எனப் புலம்புகின்றாள். தன் தலைவனின் பிரிவாற்றாமையை மரம் செடிகளின் மீதும் விலங்குகளின் மீதும் ஏற்றிக்கூறி ஆற்றிக்கொள்கின்ற பாங்கினை இப்பாடல் மூலம் அறிய முடிகின்றது. நொச்சியும், மௌவல் மலர்களும் கார்காலத்தில்தான் பூக்கும் என்பதுகூட தெரியாத தலைவியின் அறியாமைத் தன்மை இங்கு புலப்படுத்தப்படுகின்றது. தலைவியின் அறியாமைத் தன்மையைப் புலப்படுத்தும் விதமாக அம்மலர்கள் மலர்வதைக்கூட தலைவன் தலைவிக்கு சுட்டிக்காட்டி இருக்கின்றான் என்பதனைப் பற்றித் தெரிந்துகொள்ள முடிகின்றது.

### மயில் அகவும் கார்காலம்

இடைக்காடனார் பாடிய பாடலில் கார்காலத்து மாலைப்பொழுதில் தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலை பற்றிக் கூறப்படுகின்றது. களை எடுத்த வரகு கதிர் வாங்கும் கார்காலம். அதனை தலையில் குடுமி கொண்ட மயில் தன் தோகையை விரித்துக் கொண்டு மேயும். பின்னர் அந்த மயில் வலிமையான இலைகளைக் கொண்ட குருந்த மரத்தில் ஏறி இருந்துகொண்டு கிளியோட்டும் மகளிர் பாடுவது போலக் குரல் எழுப்பி

அகவும். இப்படி மயில் அகவும் கார்காலம் இதுவே தான் என்று குறிப்பால் ஆசிரியர் உணர்த்துகின்றார். வரகு கதிர் விளைந்து கிடப்பதால், அதனை நிறைய மேய்ந்துவிட்டது மயில். வரகு விளைந்துவிட்டது என்றால் கார்காலத்தின் இறுதிக்காலம் என்பது குறிப்பு. தலைவன் சொல்லிச் சென்ற கார்காலப்பொழுதின் இறுதிநிலையில் மயில் மகிழ்ச்சியாக அகவித் திரிகின்றன. அவை மழைக்காகக் அகவவில்லை. வரகுக் கதிர்களை அதிகம் உண்டதனால் வந்த மயக்கத்தில் குருந்த மரத்தில் ஏறி அமர்ந்து அகவிக்கொண்டிருக்கின்றது. மயிலுக்கு அக்காலம் மகிழ்ச்சியைத் தருகின்றது. தலைவன் பிரிவால் தலைவிக்குத் துன்பத்தைத் தருகின்றது. மழையின் வரவு பறவை, விலங்குகளுக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. தலைவனைப் பிரிந்த தலைவிக்கு வருத்தத்தைத் தருகின்றது. வரகினைத் தின்ற மயில்போல மகிழ்ச்சியாக இருக்கவேண்டிய நான் தலைவன் பிரிவால் மிகுந்த வேதனையுடன் இருக்கின்றேன் எனக் கூறுகின்றாள். போரை முடித்துக்கொண்டு தேரில் ஏறிக் குதிரையை முடுக்கிக்கொண்டு வந்துவிடுவேன் என்று நம்மிடம் சொல்லிச் சென்றாரே அந்தக் கார்காலம் இதுதான் என்று தலைவி ஆற்றாமை மிகுந்தவளாய் வருந்தி தன் தோழியிடம் உள்ளத்துணர்வை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. இதனை,

**“களைகால் கழீஇய பெரும்புன வரகின்**
**கவைக் கதிர் இரும்புறம் கதூஉ உண்ட,**
**குடுமி நெற்றி நெடுமாத் தோகை**
**காமர் கலவம் பரப்பி, ஏமுறக்**
**கொல்லை உழவர் கூழ்நிழல் ஒழித்த**
**வல் இலைக் குருந்தின் வாங்குசினை இருந்து,**
**கிளிகடி மகளிரின் விளிபடப் பயிரும்**
**கார் மன் இதுவால்”.**

**(அகம் : 194, 9 – 16)**

என்னும் பாடல் மூலம் அறியமுடிகின்றது.

**தண் பெயல் பொழிந்த காலம்**

மதுரைக் கவுணியன் பூத்தனார் பாடிய பாடலில் கார்காலத்து மாலைப்பொழுதில் தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலை பற்றிக் கூறப்படுகிறது

**"தண் பெயல் பொழிந்த பைதுறு காலை**
**குருதி உருவின் ஒண் செம் மூதாய்**
**பெரு வழி மருங்கில் சிறுபல வரிப்ப**
**பைங் கொடி முல்லை மென் பதப் புதுவ**
**வெண் களர் அரிமணல் நன் பல தாஅய்**
**வண்டு போது அவிழ்க்கும் தண் கமழ் புறவில்**

**(அகம்:74, 3 - 8)**

எனும் இப்பாடலில் மழை பெய்ததால் எங்கும் பசுமை காணப்படுகிறது. குருதி நிறத்தில் செந்நிற மூதாய்ப் பூச்சிகள் வழியெங்கும் பரந்து மேய்கின்றன. வெண்ணிறக் களர் மண்ணில், நீர் அரித்துக் கிடக்கும் மணலில் பச்சை நிற முல்லைக் கொடி மென்மையாகப் பூக்கும் புதிய மொட்டுகளை வண்டுகள் அவிழ்க்கின்றன. அதன் மணம் கமழும் முல்லை நிலத்தில் கருநிறக் கொம்புகளை உடைய ஆண்மான் தான் விரும்பும் பெண்மானுடன் சேர்ந்து உலாவுகிறது. ஆனால் என் தலைவன் இன்றே வருவார் என்று நீ சொல்லும் சொல்லைக் கேட்டு நான் அமைதி பெறுவேன். ஆனால் நாள்தோறும் மாலையில் கோவலர் ஊதும் குழலோசை கேட்கிறதே என்ன செய்வேன் என்று தோழியிடம் பேசுகிறாள். மழை, காலைப்பொழுதிலே வந்துவிட்டது. செம்மண் நிலத்தில் குருதிபோல் மழைநீர் போய்க்கொண்டிருக்கிறது. முல்லைப் பூக்கள் பூத்து மணம் வீசிக்கொண்டிருக்கின்றது. துன்பம் தருகின்ற மாலைப்பொழுதும் வந்துவிட்டது. மேய்ச்சலுக்கு ஆநிரைகளை ஓட்டிச்சென்ற கோவலர்கள் ஊதும் சிறுகுழலின் ஓசை மிகுந்து

வருத்தத்தைத் தருகின்றன. மொத்தத்தில் பகற்பொழுதும், அப்பொழுதில் நிகழும் ஒவ்வொரு செயலுமே தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு மிகுந்த வேதனையைத் தருகின்றது. இயற்கை மட்டும் துன்பத்தைத் தரவில்லை. கோவலர் ஊதிக்கொண்டு வரும் குழலோசையும் வருத்தம் தருவதாகத் தலைவி மிகவும் வருத்தம் கொள்கின்றாள். இதன் மூலம் கார்காலமானது தலைவன் தலைவிக்கு இடையேயுள்ள இடைவெளியைக் காட்டுகிறது.

**ஈன்று நாள் உலந்த வாலா வெண்மழை**

தலைவனைப் பிரிந்த தலைவிக்குக் கார்காலம் மட்டுமின்றி அக்கார்காலத்தில் இரலைமான் தான் பெண் துணை மானோடு வாழும் நிலை துன்பம் தருவதாக இடைக்காடனார் பாடிய அகநானூறுப் பாடலில் கூறப்படுகின்றது.

> **“ஈன்று நாள் உலந்த வாலா வெண்மழை**
> **தண் நறும் படுநீர் மாந்தி, பதவு அருந்து**
> **வெண் புறக்கு உடைய திரிமருப்பு இரலை,**
> **வார் மணல் ஒரு சிறைப் பிடவு அவிழ் கொழுநிழல்,**
> **காமல் துணையொடு ஏமுற வதிய:**
> **அரக்கு நிற உருவின் ஈயல் மூதாய்**
> **பரப்பி யவைபோற் பாஅய், பலஉடன்**
> **நீர்வார் மருங்கின் ஈர் அணி திகழ”.**
>
> **(அகம்: 139, 6, 9-15)**

மேகங்கள் இடித்து மின்னின. மழை பொழிந்த ஈர மண்ணில் வெள்ளை முதுகும், திருகிய கொம்பும் கொண்ட ஆண் இரலை மான், குளிர்ந்த நல்ல நீரைப் பருகிவிட்டுப் புல்லை மேய்ந்த பின்னர் நீண்ட மணலில் பிடவ மரத்து நிழலில் தன் பெண் துணைமானோடு மேய்கின்றது. கார்காலம் வந்தும் தலைவன் வரவில்லை என்பதைத் தெரிவிப்பது போல் இடி இடிப்பதாகவும், ஆண்மான் பெண்மானுடன் இணைந்து இருப்பதாகவும் தலைவி உணர்ந்து துன்புறுகின்றாள்.

கார்காலத்து இயற்கை நிகழ்வுகளே தலைவியைத் துன்புறுத்துகின்றன. பருவ வரவில் தலைவியின் பேதை நெஞ்சம் பெரும் கலக்கத்தை அடைகின்றது. விடாது பெய்யும் மழையில் பிடவும் மலர்ந்து இருக்கும் மரநிழலில் பெண்மானோடு, ஆண்மான் விருப்பத்துடன் இருக்கின்றது. விலங்கினங்கள் மகிழ்வு தலைவிக்கு விரக்தி அளிக்கின்றது. பிடவம் மலர்ந்து இருப்பது பெருந் துன்பத்தைத் தருகின்றது. (மகிழ்ச்சி x துன்பம்) மழை பெய்ததால் உலக உயிர்கள் மகிழ்ச்சியுடன் இருப்பது இயற்கை. தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஓரறிவு முதல் ஐந்தறிவு வரையுள்ள உயிரினங்களின் செயல்கள் புறம்பான செயலாகத் தெரிகின்றது.

**ஏறுடைப் பெருமழை**

கார்காலத்தில் மலர்ந்த முல்லை மலரும், கொன்றை மலரும், மாலைப்பொழுதும் தலைவிக்குத் துன்பம் தருவனவாக மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார் பாடுகின்றார்.

**“மாதிரம் புதையப் பாஅய், கால்வீழ்ந்து,**
**ஏறுடைப் பெருமழை பொழிந்தென, அவல்தோறு**
**ஆடுகளப் பறையின் வரி நுணல் கறங்க,**
**ஆய்பொன் அவிர் இழை தூக்கி யன்ன**
**நீடு இணர்க் கொன்றை கவின் பெற, காடு உடன்**
**சுடர் புரை தோன்றிப் புதல்தலைவக் கொளாஅ,**
**முல்லை இல்லமொடு மலர, கல்ல**
**பகுவாய்ப் பைஞ்சனை மா உண மலிர,**
**கார் தொடங் கின்றே காலை: காதலர்**
**வெஞ்சின வேந்தன் வியன் பெரும் பாசறை,**
**வென்றி வேட்கையொடு நம்மும் உள்ளார்:**
**யாது செய் வாம் கொல் ? தோழி !”**

**(அகம்: 364, 1 -12)**

பருவத்தே வாராத தலைவனை நினைந்தும், பருவம் வந்ததைக் கண்டும் தலைவி புலம்புகின்றாள். கார்காலத்தில் முல்லை, கொன்றை மலர்கள் மலர்தல் கூறப்படுகின்றன. போரில் வெற்றி கொள்ளும் வேட்கையோடு பாசறையில் இருக்கின்ற தலைவன் என்னைப் பற்றி நினைக்க வில்லையோ? என்று மனம் நொந்து கூறுகின்றாள். கார்காலத்து மாலைப்பொழுதில் என்னை நினைத்தாவது தலைவன் வரவேண்டும். ஆயின் 'துணை தரு போழ்தின், நீந்தலோ அரிதே!' என்கிறாள் தலைவி. பிரிந்த தலைவன் வாராமையால் மிகுதியாக மழை பெய்த மாலைப்பொழுதில் தலைவி புலம்புகின்றாள். இயற்கையோடு காலம் இணைந்துவிட்டது. கார்காலத்தில் இணைய வேண்டிய காதலர்கள் இணையவில்லை. இயற்கைக்கு எதிராகவே இங்கு மானிட வாழ்வு உள்ளது. கார் வந்ததால் முல்லையும், கொன்றையும் மலர்ந்தது. தலைவன் வாராததால் வருத்தம் தந்தது. இதில் இயற்கையும் மானிட வாழ்வும் முரண்பட்டதாகக் கூறப்படுகின்றது.

## தலைவி தன்னைத்தானே ஆற்றுவித்தல்

தலைவன் சேர்ந்திருந்த காலத்தில் அவனால் பெற்ற இன்பத்தின் எல்லை கண்ட தலைவி அவன் வருவதாகக் குறித்துச் சொல்லிச் சென்ற காலத்தில் வாராது போனால் அவளுறும் துன்பம் மிகுதியாகும். தலைவன் காலம் நீட்டிக்க நீட்டிக்கத் தலைவியின் துன்பம் தோழியாலும் ஆற்றுவிக்க முடியாத பெருந்துன்பமாகின்றது. அதனால் தலைவி தன்னைத்தானே ஆற்றுவித்துக் கொள்கின்றாள். 'இது பருவமன்று' எனக் கருதிக் கொண்டும், தலைவன் மீது நம்பிக்கை கொண்டு இயற்பட மொழிந்தும் தலைவி தன்னை ஆற்றுவிக்கும் தன்மையினைச் சங்கப் பாடல்கள் சிலவற்றில் காணலாம். தலைவி ஆற்றியிருதற்கு அடையாளமாக முல்லைப் பூவை சூடிக் கொண்டது ஒரு குறியீடாகக் கொள்ளப் பெற்றுள்ளது என்பர். [9]

“தலைவி தன்னைத் தானே தேற்றிக் கொண்டு தலைவனுடைய வருகைக்காகக் காத்திருத்தல்” என்று இளம்பூரணர் விளக்குகிறார்.[10]

மேலும் நச்சினார்க்கினியார் இக்காத்திருத்தலை, “தங்கள் கணவர் கேட்டுக் கொண்டதற்கு இணங்க இல்லத்திலிருந்து தாம் ஆற்ற வேண்டிய நேர்மையான கடமைகளை ஆற்றும் மகளிரின் குணநலம் அது என்று நச்சினார்கினியர் விளக்குகிறார்.” [11]

**பஞ்சியின் வெண்மழை**

கார்காலத்தில் வினை முடித்து வாராத தலைவனை நினைத்துப் புலம்புதலை,

**“நல் நாள் வேங்கை வீ நன்கனம் வரிப்ப,**
**கார் தலை மணந்த பைம்புதற் புறவின்**
**வில்எறி பஞ்சியின் வெண்மழை தவழும்**
**கொல்லை இதைய குறும்பொறை மருங்கில்”**

**(அகம் : 133, 4-7)**

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன.

நல்ல மண நாளை அறிவிக்கும் வேங்கை மலர்கள் உதிர்ந்து விழுந்து, அவ்விடத்தை நல்ல வெறியாடும் களம் போல அழகு செய்யும். மேகம் மழை பெய்து கார்காலம் தொடங்கும். அக்காலத்தில் தொடங்கும் இடர்களை பொறுத்துக்கொண்டு, “நீ என்னுடன் வருவதற்கு வலிமை பெற்றிருக்கின்றாயோ” என்று தலைவன் கூறியதை மனதில் நினைத்துக்கொண்டு தலைவி, தலைவன் தன்னை விரைவில் அழைத்து செல்வான் என்று நம்புகிறாள்.

மேலே கண்ட கூற்றுகளும், உரையாசிரியரின் கருத்தக்களும் இல்லறக் கடமையில் ஆண் வினை முடித்து, குறித்த பருவத்தில் வீடு திரும்ப வேண்டும். தலைவி, தலைவன் வரும் வரை ஆற்றி (மனதாற்றி) இருக்க வேண்டும் என்பதைச் சுட்டுகின்றன. மாறாக இனப்பெருக்கம் செய்யும் பருவத்தில் வாழும் இரண்டு பாலினங்கள் காலம் தாழ்த்தாமல் கூட வேண்டும் என்பதனை இயற்கையின் செயல்பாடுகள் மூலம் குறிப்பால் எடுத்துரைக்கின்றனர்.

**பெய்து புறந் தந்த பொங்கல் வெண்மழை**

மழைக்காலத்தின் கடைசிப் பருவம். பொருள்காரணமாகப் பிரிந்தவன். மழைக்காலம் முடியும் தருவாயில் உள்ளது. தலைவன் வரவில்லை. அவன் மீதிருக்கும் நம்பிக்கையை இழக்கின்றாள் தலைவி. அகன்ற வயலில் "நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூ" கரும்பின் பூவே பூத்துவிட்டது. மழைக்காலத் தொடக்கத்தில் நட்டப்பட்ட கரும்பும் வளர்ந்து பூப்பூக்கும் காலமும் வந்துவிட்டது. கரும்பு மழையின் குளிர்ச்சியால் வயலில் அழகாகப் பூத்து காட்சியளிக்கின்றது. தலைவன் வராததால் நான் இல்லறத்தில் இனிமைகாணாது அழகிழந்து இருக்கின்றேன் இதற்குக் காரணம் தலைவனே ஆவான். என்னைவிட அவனுக்குப் பொருள் பெரிதாகத் தெரிகின்றது என்பதுபடப் புலம்புகின்றாள் தலைவி. இதனை,

**"பெய்து புறந் தந்த பொங்கல் வெண்மழை,**
**எ∴து உறு பஞ்சித் துய்ப்பட் டன்ன,**
**துவலை தூவல் கழிய"**

**(அகம்:217, 1-3)**

என்று கழார்க்கீரன் எயிற்றியார் பாடிய பாடல் மூலம் அறியலாம்.

**கார் காலமும் தலைவன் நிலையும்**

முல்லைத் திணைக்கான ஒழுக்கம் என்பது "இருத்தல்" என்று தொல்காப்பியமும், "இருத்தலும்" என்று "உம்" விகுதியைச் சேர்த்து

நம்பியகப்பொருளும் குறிப்பிடுகின்றன. இதற்கு உரையாசிரியர்கள் “இருத்தலும் இருத்தல் நிமித்தமும்” என்று உரை எழுதினர். தலைவன் பொருள் ஈட்டவோ, அல்லது போரின் காரணமாகவோ பிரிந்து செல்லும் போது கார்காலம் தொடங்கும் முன்பு திரும்பி வந்து விடுவேன் என்று சொல்லியவன் கால நீட்டிப்பு செய்யும் போது தலைவி ஆனவள் கார்காலம் கருதி உடல் மெலிந்து நெஞ்சோடு புலம்புவாள் அல்லது தோழியிடம் முறையிடுவாள். தலைவன் பாசறையில் நெஞ்சோடு அல்லது தேர்ப்பாகனுக்கு உரைப்பான். இந்தக் காட்சிகளே கார்காலக் காட்சியாக அமைகின்றது.

**தலைவனின் பாசறைப் புலம்பல்**

குறித்த பருவத்தில் திரும்பமுடியாத தலைவன் பாசறையில் ஆற்றாமையில் தானே புலம்புகின்றான். என் தலைவியைப் பிரிந்துறைதலால் தான் படும் துன்பத்தை அவள் பட்டாங்கு அறிந்துகொள்ளின் அவளுக்கும் நலம் பயக்கும் எனத் தலைவன் புலம்புகின்றான். அன்று நம் காதலி வருந்துவதைக் கண்டும், ‘வினையே ஆடவர்க்கு உயிர்’ எனக் கருதி வந்து இன்று வருந்துவது ஏன் ? எனத் தன் நெஞ்சிடம் கேட்கிறான். காரும் போரும் முன்னிற்கையில் தலைவனின் காதல் மனம் அகத்தில் இடம் பெறுவதைக் காணலாம்.”[12] பொருளுக்காகச் செல்லும் தலைவன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சொடு பேசுகின்றான்.

“வேந்தனின் போர்வினை தணிய வேண்டும் என்ற எதிர்பார்ப்பும், தன் பிரிவுத்துயர் கெட, தலைவியைக் கண்டு மகிழ வேண்டும் என்ற ஆர்வமும் பாசறையிடத்து இருக்கும் தலைவனிடம் இருப்பதைக் காணலாம். கார்காலத்தில் திரும்புவதாகக் கூறியதன் கூற்றை நம்பியிருக்கும் தலைவிக்குத் தன் மீட்சியின்மை ஏமாற்றத்தைத் தரும் என்ற உணர்வு தலைவனைப் பெரிதும் வாட்டுகிறது.”[13] தலைவியின்

பிரிவை ஆற்றாது தலைவனின் மனம் வருந்துகிறது. தன் மனக்கருத்தை தலைவி அறியாது தான் பிரிவை நீட்டித்தாகவும், அருளாது விடுத்ததாகவும் எண்ணி வருந்துவாள் எனத் தலைவன் எண்ணும் போது அவனுக்கும் பிரிவுத்துன்பம் மேலிடுகிறது என்பதை அறியலாம்.

**"பாசறைப் புலம்பலும் முடிந்த காலத்துப்**
**பாகனொடு விரும்பிய வினைத் திறவகையினும்"**
**(தொல். பொருள்: 44)**

எனும் தொல்காப்பிய நூற்பாவில் பாசறைப் புலம்பல் கூறப்பட்டுள்ளது.

இல்லறத்தில் இனிதாக தலைவியுடன் இருக்கும் தலைவன் போர் காரணமாக தலைவியைப் பிரிய நேர்கின்றது. அப்போது தலைவன் கார்காலத்தில் வருவதாகக் கூறிச் செல்கின்றான். போர் நீட்டிப்பு காரணமாக இல்லறம் திரும்ப முடியாத தலைவன் மழை பெய்வதைக் கண்டு மன வேதனைக் கொண்டு புலம்புகின்றான்.

**" ---------------------------------------------- முல்லை**
**நேர்கால் முதுகொடி குழைப்ப, நீர் சொரிந்து**
**காலை வானத்துக் கடுங்குரல் கொண்மூ**
**முழங்கு தொறும் கையற்று, ஒடுங்கி, நப்புலந்து**
**பழங்கண் கொண்ட பசலை மேனியள்**
**யாங்கு ஆ குவள் கொல் தானே – வேங்கை**
**ஊழுறு நறவீ கடுப்பக் கேழ் கொள**
**ஆகத்து அரும்பிய மாசு அறு சுணங்கினள்**
**நல் மணல் வியலிடை நடந்த**
**இல்மெல் ஒதுக்கின், மாசுயோளே?**
**(அகம் : 174, 5-14)**

எனும் மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் பாடலில் வேங்கை மலரின் மணம் போன்று பொன்னிறம் கொண்ட மேனியை உடைய

தலைவி தலைவன் பிரிவினால், மேகங்கள் மழையைப் பொழிந்து முழங்கும் பொழுதெல்லாம் தலைவனை வெறுத்துச் செயலற்று ஒடுங்கி, துன்பத்தினை அடைந்து, பசலை படர்ந்த மேனியளாய் அழகிழந்து விடுவாள். இத்தகு மென்மைத் தன்மை உடைய தலைவியைப் பிரிந்து போர் காரணமாக கடமை ஆற்ற வந்திருக்கும் தலைவனுக்கு கார்காலப் பொழுது மிகுந்த வேதனையைத் தருகின்றது. போர் காரணமாகப் பிரிந்து வந்த வீரம் பொருந்திய ஒரு தலைவன், தன் தலைவியின் பிரிவாற்றாமையினால் தலைவியை நினைத்துப் பாசறையின் கண் புலம்புவதைக் காண முடிகின்றது. கார்காலப் பாசறை அவனுக்கு துன்பத்தைத் தருகின்றது. தலைவியின் பிரிவு மிகுந்த வேதனையை உண்டாக்குகிறது. பகை வீரர்களை வென்ற வீரம் பொருந்திய தலைவன், காதலால் தலைவியிடம் தோற்றுப் போகின்றான் வீரத்தை விட இங்கு காதல் வெற்றி பெறுவதை இப்பாடல் உணர்த்துகின்றது.

**பாசறைக்கண் மாலைப்பொழுதில் மழை**

வடம் வண்ணக்கன் பேரிசாத்தனார் தம் முல்லைப் பாடலில் பாசறையில் தலைவன் தன் நெஞ்சிற்கு கூறுவதாகப் பாடியுள்ளார். மழைக்காலத்து மாலைப்பொழுது தலைவிக்கு துன்பம் தருவதாகக் கூறப்படுகின்றது. போர் காரணமாகப் பிரிந்த தலைவன்,

**“அகல் இரு விசும் பகம் புதையப் பாஅய்**

**புகல் உடன் கரந்த, பல்கதிர், வானம்**

**இருங்களிற்று இனநிரை, குளிர்ப்ப வீசி,**

**பெரும் பெயல் அழிதுளி பொழிதல் ஆனாது”**

**(அகம்:214, 1 - 4)**

அகன்ற வானத்தில் ஞாயிறு முழுவதையும் மறைத்த மேகமானது பிடியுடன் கூடிய யானைக் கூட்டம் குளிறுமாறு இடைவிடாது மழையைப் பொழிவித்தது. வெற்றி பெற்ற மன்னன் மீண்டும் போரை விரும்ப தலைவனுக்கோ, “குறித்த பருவத்து மீண்டும் வருவார்” என்று தெளிந்த அறிவு கொண்டு பிரிவினை ஆற்றியிருக்கும் தலைவியின் நினைவு வர,

**“ஆ பெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇ**
**பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப**
**ஆர் உயிர் அணங்கும் தெள் இசை**
**மாரி மாலையும் தமியள் கேட்டே?”**

**(அகம் : 214, 12 - 15)**

எனக் கூறுகின்றான். அதாவது மேய்ச்சலை முடித்த பசுக்களின் மணி ஓசையும், கோவலர்களின் புல்லாங்குழலின் இசையும், யாழிலிருந்து பாடப்பெறும் செவ்வழிப் பண்ணின் ஓசையும், மழைக்காலத்து மாலைப்பொழுதும் தனியளாய் இருக்கும் தலைவிக்கு மிகுந்த வேதனை தருவதாக உள்ளது. அவள் என்ன ஆவாளோ? என்று தலைவியின் துயரை தன் துயராக நினைத்துத் துடிக்கும் ஓர் அன்பானத் தலைவனைக் காண முடிகின்றது.

மாலைப்பொழுதும் மலைக்காலமும் பிரிந்தவர்களுக்குப் பெரும் துயர் தரும் காலமாக உள்ளதை இப்பாடல் மிக அழகாக உணர்த்துகின்றது.

**மாதிரம் புதைப்ப மழை பொழியும் காலம்**

தலைவனது பிரிவைப் பொறுத்துக் கொண்டு தலைவி இல்லத்தில் இருக்கிறாள். தலைவியை நினைத்துக்கொண்டு தலைவன் போர்ப்பாசறையில் புலம்புவதாகக் கூறப்படுகின்றது. மேலும்

**"மலைமிசைக் குலை இய உருகெழு திருவில்**
**பனை முழங்கு எழிலி பௌவம் வாங்கி**
**தாழ் பெயந் பெருநீர், வலன்ஏர்பு, வளைஇ**
**மாதிரம் புதைப்பப் பொழிதலின், காண்வர**
**இரு நிலம் கவினிய ஏமுறு காலை —**
**நெருப்பின் அன்ன சிறு கட் பன்றி**
**அயிர்க்கட் படாஅர்த் துஞ்சு, புறம் புதைய**
**நறு வீ முல்லை நாள் மலர் உதிரும்**
**புறவு அடைந்திருந்த அரு முனை இயவின்**
**சீறூரோளே, ஒண்ணுதல்!-யாமே**

**(அகம் : 84, 1-10)**

அழகு மிகுந்த வானவில் மலை மேல் வளைந்து கிடக்கிறது. மேகம் போர் முரசு போல முழங்கி திசையெல்லாம் புதையும் படி பெருமழை பொழிகிறது. கண்ணுக்கு இனிமையாக தோன்றும் அக்கார் காலத்தில், நெருப்புப் பொறி போன்ற கண்களை உடைய பன்றி நீர்நிலைச் சேற்றில் தூங்குகிறது. அதன் முதுகு மூடும்படி நாள் தோறும் மலரும் முல்லை மலர்கள் கொட்டுகின்றன. இப்படிப்பட்ட முல்லை நிலத்து தலைவியோ பிரிவினை ஆற்றாது வருந்தி இருக்கிறாள்.

**"தண்ணடை தழீஇய கொடி நுடங்கு ஆர் எயில்**
**அருந்திறை கொடுப்பவும் கொள்ளான், சினம் சிறந்து,**
**வினை வயின் பெயர்க்கும் தானை,**
**புனைதார், வேந்தன் பாசறையேமே!**

**(அகம் : 84, 14-17)**

நானோ, வேந்தன் பாசறையில் இருக்கிறேன். பகைவர் தம் கோட்டை வாயிலைத் திறந்து கொண்டு வந்து கொடுக்கும் திறையை

என் அரசன் வாங்க மறுத்து, அவர்களின் மீது கொண்ட சினம் மாறாதவனாகப் போரிட்டு அவர்களை அழிப்பதிலேயே நாட்டம் கொண்டுள்ளான். என்ன செய்வேன்? என்று தனது தலைவியின் பிரிவாற்றாமையை எண்ணி தலைவன் வருந்துவதைக் காணமுடிகின்றது.

**கனை பெயல் காலம்**

மதுரைத் தமிழ்க் கூத்தன் நாகன் தேவனார் பாடிய பாடலில் காடெல்லாம் அழகு பெறும்படி பெருமழை பொழிகிறது. மழை பொழிந்ததால் காடெல்லாம் முல்லைப் பூக்களின் மணம் கமழ்கிறது. எங்கும் வண்டுகளின் ஆரவார ஒலி உண்டாகுகிறது. அத்தகைய சூழலை கண்டதும் என் தலைவி என்னை நினைப்பாள். என் நிலைமை என்னவோ தெரியவில்லையே! என்று மயங்குவாள். கண்ணீர் மல்க துன்பப்பட்டுக்கொண்டே வாழ்வாள். அவள் பழைய நலத்தைப் பெறும் நல்ல காலம் இக்கார்காலம். இதனை

**“காடு கவின் எதிரக் கனை பெயல் பொழிதலின்**
**போறிவரி இன வண்டு ஆர்ப்ப, பல உடன்**
**நறுவீ முல்லையொடு தோன்றி தோன்ற**
**வெறி ஏன் நன்றே வீகமழ் கானம்**
**‘எவன் கொல் மற்று அவர்நிலை?’ என மயங்கி**
**இதுபனி உறைக்கும் கண்ணொடு இனைபு, ஆங்கு**
**இன்னாது உறைவி தொல்நலம் பெறூஉம்**
**இதுநற் காலம்: கண்டிசின் - பகைவர்**
**மதில்முகம் முருக்கிய தொடி சிதை மருப்பின்**
**கந்துகால் ஒசிக்கும் யானை,**
**வெஞ்சின வேந்தன் வினைவிடப் பெறினே”**

**(அகம் : 164, 4-14)**

பகைவரின் மதில் கதவினைக் குதித்துத் தகர்த்த பூண் சிதைந்த தந்தங்களை உடைய யானையை, மன்னன் போரிலிருந்து விடுவித்தால் நல்லது என்று தலைவன் நினைக்கிறான். இதில் தலைவியின் நினைவில் பாசறையில் இருக்கும் தலைவனுடைய வாழ்க்கையில் வினையின் முன் பிரிவு என்னும் விதி விளையாடுகின்றதைக் காணமுடிகின்றது.

**பாசறையின் கண் விடியல் பொழுதில் மழை**

கார்ப்பருவத் தொடக்கத்தில் மீண்டு வருவேன் என்று தலைவியிடம் கூறிச் சென்ற தலைவன், அப்பருவம் வந்த பின்பும் வினை முடியாது போர்ப்பாசறையில் இருந்தவாறே தலைவியின் துன்பநிலையை நினைத்துப் பெரிதும் வருந்தியவனாய் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

**“ இரு விசும்பு இவர்ந்த கருவி மாமழை**
**நீர் செறி நுங்கின் கண் சிதர்ந் தவைபோல்**
**சூர்பனிப் பன்ன தண் வரல் ஆலியொடு**
**பரூஉப் பெயல் அழிதுளி தலைஇ, நான் நவின்று**
**குரூஉத்துளி பொழிந்த பெரும்புலர் வைகறை”**

**(அகம் : 304, 1-5)**

மின்னலும் இடியும் கூடிய கரிய மேகம் மழையைப் பொழிவிக்கின்றது. நீர் நிறைந்த நுங்கினது கண்கள் சிதறி விழுவதைப் போன்றும், தெய்வம் ஏறி நடுங்கச் செய்வது போன்று குளிர்ச்சி பொருந்திய ஆலங்கட்டி யோடு இரவுப்பொழுது புலர்கின்ற விடியற்காலத்தே மழைத்துளிகளைச் சொரிந்தது. பெண்மான் செம்மண் நிலத்தில் நிரப்பி வைத்தாற் போன்ற தெளிந்த அறல்பட்ட நீரைக் குடித்து தன் சிறிய குட்டியைத் தழுவிய வண்ணம் ஆண்மானுடன் குருந்த மரத்தின் நிழலிலே தங்கியிருக்கின்றது. வண்டுகள் ஒலிக்க, பிடாவின் அரும்புகள் மலர, மயில்கள் ஆடி மகிழ, நீலமணியுடன் காயாவின் உதிர்ந்த பழமையான பூக்களும்,

இந்திரக்கோபப் பூச்சிகளும் ஒரு சேர ஈரமான நிலத்தின் மேற்பரப்பில் பரவிக் கிடக்கின்றன.

இவ்வாறு காடுகள் அழகு பெறும் படியாகக் கார்காலம் வந்தது. இக்கார்காலப் பொழுதில் அரசனின் ஆணையின் படி, பாசறையில் போர் காரணமாகத் தங்கியிருக்கும் தலைவனுக்குத் தலைவியின் நினைவு வர பெருந்துன்பம் அடைகின்றான். பிரிவுத் துயரால் நாம் படுகின்ற துன்பம் தலைவிக்குத் தெரியப் போவதில்லை. தலைவியோ இப்பருவம் கண்டு,

**"அறவர் அல்லர், நம் அருளா தோர் என,**
**நம் நோய் தன் வயின் அறியாள்**
**எம் நொந்து புலக்கும் கொல், மா அ யோளே"?**

**(அகம் :304, 18 – 20)**

என்று நம்மை நொந்து நம்மீது வெறுப்பினைக் கொள்வாளோ? நாம் என்ன செய்வது என்று வேதனைக்குள் வேதனையை வைத்துப் புலம்புகின்றான் தலைவன். பிரிவின் நோய் தனக்கு வந்துள்ளதை தலைவி அறியமாட்டாளே என்ற வேதனை தலைவனுக்கு மிகுந்த துன்பத்தைத் தருகின்றது. கார்காலத்தில் காடுகள் அழகுடன் இருக்கின்றன. ஆண் மானும் பெண் மானும் தன் குட்டிகளுடன் மகிழ்ச்சியாக விளையாடித் திரிகின்றன. செடிகளும். கொடிகளும், மரங்களும் பூக்களைப்பூத்துச் சொரிந்து காடுகளை அழகுறச் செய்கின்றன. ஆனால் தலைவியின் பிரிவால் நான் மட்டும் மிகுந்த துன்பத்திற்கு ஆளாகிவிட்டேனே' எனும் ஏக்கம் தலைவனுக்குள் இருப்பதை இப்பாடல் நமக்கு உணர்த்துகின்றது.

**தலைவன் தேர்ப்பாகனுக்குத் தன் ஆற்றாமை கூறல்**

வினை முற்றி மீளும் செம்மலாகத் தலைவன் வரும் சூழலில் இயற்கை நல்கும் எழில் காட்சிகளைக் கண்டு நெஞ்சம் நெகிழ்ச்சியுடன்,

பிரிவின் கண் தனக்காக மாறாக் காதல் நினைவுகளுடன் காத்திருக்கும் தலைவியைக் காணும் மகிழ்ச்சியுடனும் தலைவன் வரவைக் காணலாம்."[14] கார்ப்பருவம் தான் முன்னர் குறித்துச் சென்ற சொல்லைத் தலைவனுக்கு நினைவூட்டுகிறது. அவன் தலைவியை அடைய விரும்பும் ஆவலைப் பாகனுக்கு உணர்த்துகிறான்.

தலைவன் தலைவியைப் பிரிவானாயினும் பிரிவு என்பது இருவருக்கும் உரியது. தலைவனைப் பிரிந்த துன்பம் தலைவிக்கு மட்டுமின்றித் தலைவியைப் பிரிந்த துன்பம் தலைவனுக்கும் உண்டு. ஒன்றிய அன்பினர் பிரிகின்றபோது ஒருவருக்கு மட்டுமே துன்பம் எங்ஙனம் அமையும்? தலைவன் கடமையைச் செய்ய வேண்டியவனாயினும் அதனால் தலைவியைப் பிரிதற்கே அஞ்சுகிறான். அவ்வாறு வினையின் காரணமாகப் பிரிந்து சென்ற தலைவனுக்குக் கார்காலமும், மாலைப்பொழுதும் மிகுந்த துன்பம் தரும் பொழுதுகள் மட்டுமின்றி வருகின்ற வழியில் இணை மான்கள் சேர்ந்து அன்புடன் இருக்கும் காட்சியும், சேவல் பெடையுடன் இருக்கும் காட்சியும், இது போன்ற இன்னோரன்ன அன்பின் உயிர் நிலையைத் தலைவன் காணும் போதும் பிரிந்திருக்கும் தலைவியின் நினைவு மிகவும் மனவருத்தத்துடன் கூடிய ஆவலைத் தூண்டுகிறது. தான் தலைவியை விரைவில் சேர வேண்டும் என்பதனால் தன் ஆற்றாமையைத் தேர்ப்பாகனிடம் சொல்லித் தேரை விரைவில் செலுத்துமாறு தலைவன் கூறுகின்றான்.

**கார்ப்பருவம் கண்டு தேரைச் செலுத்தக் கூறல்**

"பெருமழை பெய்து நிலம் குளிர்ந்து நெகிழ்ந்து இருந்தமையால் தேர் செல்லும் வழியும் "மெல்வழி" ஆயிற்று. தலைவன் தேரைப் பார்த்து, தன் பிரிவால் பசலை பூத்த மேனியளாய் ஒப்பனை செய்யாது சிக்குண்டு கிடக்கும் கூந்தலையுடைவளாய் வருந்தியிருக்கும் தலைவியின் வருத்தத்தைப் போக்குவதற்கு மிக விரைந்து செல்லுதல் வேண்டும்

என்கிறான். "நெடுந்தேர் வல்விரைந்து ஊர்மதி" என்றான். பாகனும் தேரினைச் செலுத்துவதில் தேர்ச்சி பெற்றவன் என்பது தோன்ற, "நல்வம் பெறுந" என விளித்தான் என்க."[15] என்று குறிப்பிடுகிறார்.

**கமஞ்சூல் மாமழை**

சிறிய நிலமான முல்லை நிலப்பரப்பு ஓவியம் வல்லோனால் தீட்டப்பட்ட எழில் ஓவியம் போலக் காட்சி அளிக்கிறது. அதுபோல என் இல்லறமும் அழகு பெற வேண்டும் என்றால் நான் விரைவில் செல்ல வேண்டும். என் தலைவியோடு அக்காட்டில் வசிக்கும் மான்கள் போல மகிழ்வோடு இருக்க எனக்கு மிகுந்த விருப்பம் வந்துவிட்டது என்பதனைத் தலைவன் குறிப்பால் தேர்ப்பாகனுக்கு எடுத்துரைக்கும் பாங்கு ஒப்ப நோக்கத்தக்கது. இதனை

**"வானம் வாய்ப்பக் கவினி கானம்**
**கமஞ்சூல் மாமழை கார்பயந்து இறுத்தென,**
**மணிமருள் பூவை அணிமலர் இடைஇடை,**
**செம்புற மூதாய் பரத்தலின், நன்பல**
**முல்லை வீகழல் தா அய், வல்லோன்**
**செய்கை அன்ன செந்நிலப் புறவின்"**

**(அகம்:134, 1-6)**

முல்லை மணம் வீசுவது போல இல்லறமும் நல்லறமாக மணம் பறப்ப வேண்டும். முல்லை போன்ற தலைவன் இருந்தால்தான் இல்லறம் சிறக்கும் எனக் குறிப்பால் உணர்த்தும் தலைவியின் செயல் ஒப்பு நோக்கத்தக்கது. காடு முழுவதும் வண்ணம் தீட்டப்பட்ட ஓவியம் போல் அழகு பெறக் காரணமாக இருந்தது மழை. அதுபோல இல்லறம் மகிழ்வோடு இருப்பதற்கு மழை போன்ற தலைவன் இருந்தால் சிறப்பு என்பதனை இப்பாடல் உணர்த்துகின்றது.

தலைவன் தனது வினையை முடித்து விட்டான். தனக்காக கார்ப்பருவங்கண்டு கவலையில் இருக்கும் தலைவியைக் காண்பதற்காக வரும் வழியும் எளிமையாக இருக்கிறது என்று கூறுவதில் தலைவியைச் சந்திப்பதற்கான வாய்ப்பும் தடையில்லாமல் இருக்கிறது என்பதை உணர்த்தும் முகமாக உள்ளது. விரைவாகச் செலுத்தச் சொல்லும் தலைவன், பூமியில் வாழும் மற்ற சிறிய உயிர்களும் பாதிப்பு அடையக்கூடாது என்பதை, கலைமானும் பிணைமானும் கூடும் கூட்டத்திற்கும் நம் தேரின் ஒலி இடையூறாக இருக்கக்கூடாது. தேரினை ஒலியின்றிச் செலுத்து என்று கூறும் தலைவனின் உள்ளப்பாங்கு அவன் தலைவியிடம் வைத்திருக்கும் அன்பினைக் காட்டுகின்றது. இதனை,

**“இடிமறந்து, ஏமதி – வலவ! குவிமுகை**
**வாழை வான்பூ ஊழுறுபு உதிர்ந்த**
**ஒழிகுலை அன்ன திரிமருப்பு ஏற்றொடு**
**கணைக்கால் அம்பிணைக் காமர் புணர்நிலை**
**கடுமான் தேர்ஒலி கேட்பின்,**
**நடுநாட் கூட்டம் ஆகலும் உண்டே.”**

**(அகம்:134, 9-14)**

கார்காலச் சிறப்பாக முல்லைப் பூக்கள் பூத்து உதிர்ந்து விட்டன. கார்காலம் முடியும் தருவாயில் உள்ளது என்பதை முல்லைப்பூவின் மூலம் எடுத்துரைக்கப்படுகிறது.

**காண்தகு புறவு கார்**

மதுரைக் காமக்கனி நப்பாலத்தனார் பாடலில் கூறப்பெறும் தலைவன் கார்ப்பருவம் வந்து விட்டதாகக் கூறிக் தேரைச் செலுத்தச் சொல்கிறான். தேர் வருமுன் கார்(மழை) வந்துவிட்டது. இதனை

**“கார்ப் பெயற்கு எதிரிய காண்தகு புறவில்,**

**கணம்கொள் வண்டின் அம்சிறைத் தொழுதி,**

**……………. நின் நல்வினை நெடுந்தேர் -**

**வெண் ணெல் அரிநர் மடிவாய்த் தண்ணுமை**

**பல்மலர்ப் பொய்கைப் படுபுள் ஒப்பும்**

**காய்நெல் படப்பை வாணன் சிறுகுடித்**

**தண்டலை கமழும் கூந்தல்,**

**ஒண்தொடி மடந்தை தோள் இணை பெறவே”**

**(அகம்:204, 5, 6, 9-14)**

எனக் கூறுகின்றான். மழை பெய்ததால் முல்லைக் காடு தழைத்து கண்ணுக்கு குளிர்ச்சி அளிக்கிறது. கார் மழையை எதிர் நோக்கி முல்லை மலர்ந்து மணம் வீசுகிறது. வண்டினங்களோ தேனை உண்பதற்காக முல்லை மலரில் ஆரவாரம் செய்கிறது. அதோ கார்காலமும் வந்துவிட்டது. நெல் அறுப்பவர்கள் தண்ணுமைப் பறையை முழங்குவர் அந்த ஓசையைக் கேட்டு சிறுகுடி மலர்ச் சோலையிலுள்ள பறவைகள் பறந்தோடுகின்றன. மழை பொழிந்த பின்பு உழவர்கள் வயலில் நட்டு வைத்த நெல்லும் விளைந்து காய்ந்துவிட்டன. கார்காலத் தொடக்கத்திலே நெல் பயிரிடப்பட்டுவிட்டது. அது விளைந்து அறுவடையும் செய்யப்பட்டுவிட்டது என்றால் கார்காலம் முடிந்துவிட்டது என்று அர்த்தம். ஆனால் இன்னும் தலைவன் இல்லறம் செல்லவில்லை. கார்காலத்தில் வருவேன் என்று சொல்லிக் கடமை ஆற்றச் சென்ற தலைவனின் அச்சொல் பொய்த்துப்போய் விடுமோ! என நினைக்கின்றான். அதனால் தேர்ப்பாகனிடம், தேரை விரைவில் செலுத்தச் சொல்கின்றான். அரசனுக்காகப் போரிட்ட தலைவன் தலைவியின் மேல் உள்ள காதலைக் காணும்போது, வீரத்தை விட காதல் உயர்ந்தது என்பதை இப்பாடல் மூலம் அறியலாம்.

காதலின் முன் கடமை கண்ணை மறைக்கின்றது. கடமை தவறாதக் தலைவனாக இருந்தாலும், தலைவியிடம் சொன்ன சொல் பொய்த்துப் போய்விடுமோ என நினைக்கும் தலைவனைக் காண முடிகின்றது. சிறுகுடியிலுள்ள மலர்சோலைப் பூக்கள் மணம் வீசிக்கொண்டிருக்கின்றன. ஆனால் என் பிரிவால் என் தலைவியின் மனதில் இன்னும் மணம் வீசவில்லையே என நினைத்து துன்பப்படுகின்றான் தலைவன்.

**தீம் பெயற் கார்**

வினைமுற்றி மீளும் மற்றொரு தலைவனோ வரும் வழியில் தான் காணும் விலங்கினங்களின் அன்புத் தன்மையை எடுத்துக்கூறித் தேரை விரைந்து செலுத்துமாறு தேர்ப்பாகனுக்குக் கூறுகின்றான். 'பாகனே, மேகமானது இடி முழக்கத்துடன் பெரு மழையினை பொழிகின்றது. மனையில் கட்டப்பட்டுள்ள கன்றுக் குட்டிக்குப் பால் ஊட்டுவதற்காக வீங்கும் மடியோடு கன்றை எண்ணிக் கணைக்கும் குரலோடு, கழுத்தில் இருக்கும் மணி ஒலிக்கும் படியாகவும், ஆநிரைகள் வருகின்றன. ஆடையை மடித்துக் கட்டிக்கொண்டு கையில் குழலை ஊதிக்கொண்டு கோவலரும், ஆநிரைகளும் மனை நோக்கி வருகின்றனர். இதனை,

**“……………………….. தீம்பெயற்**
**காரும் ஆர்கலி தலையின்று தேரும்**
**ஓவத் தன்ன கோவச் செந் நிலம்**
**வள் வாய் ஆழி உள் உறுபு உருள**
**கடவுக: காண்குவம் - பாக!**

**(அகம்:54, 2-6)**

என்று கூறுகின்றான். மேய்ச்சல் தொழிலை முடித்துவிட்டு கோவலர்களும் வீடு நோக்கி கார்கால மாலைப்பொழுதில் வருகின்றனர். கன்றுகளை

நினைந்து நிறைமடியோடு மேய்ச்சலை விட்டு வீடு நோக்கி ஆநிரைகளும் வந்து கொண்டிருக்கின்றன. ஆனால் நான் மட்டும் இன்னும் தலைவி, குழந்தைகளைக் காணச் செல்லவில்லை. அந்தந்தப் பொழுதில் தனக்குரிய வினைகளை முடிப்பதே மிகச் சிறந்தது. கல்வியறிவில்லாக் கோவலர்களும் ஐந்தறிவு படைத்த ஆநிரைகளும் சரியான நேரத்தில் தன் செயலைச் செய்கின்றனர். நாமோ நாம் சொல்லிச் சென்ற குறித்த பொழுதில் சொல்ல முடியவில்லையே? என்று ஆதங்கப்படும் தலைவனைக் காணமுடிகின்றது. இல்லறத்தின் மீது மிகுந்த பற்றுடைய தலைவனாக இருக்கின்றான் என்பதையும் அறியமுடிகின்றது.

**படு மழைப் பொழிவு**

பொதும்பிற் புல்லாளங்கண்ணியார் பாடலில் கார்ப்பருவத் தொடக்கத்தில் திரும்பி வரும் தலைவன் தேர்ப்பாகனை நோக்கி, பெருமழை பெய்ததால் பள்ளங்களில் நீர்நிறைந்து கிடக்கின்றன. காடு அழகு பெறுகின்றன. பிடவம் அழகாகப் பூத்து உதிர்ந்து கிடக்கின்றது. கோடல் மலர்கள் அப்பொழுதுதான் பூத்து விரிந்து இருக்கின்றன. மான் கூட்டங்கள் மகிழ்வோடுத் திரிகின்றன. காட்டுவிலங்குகள் தேரின் ஓசை கேட்டு வெருண்டு ஓடாதவாறு மணியினை இழுத்துக் கட்டி வைக்குமாறு தலைவன் தேர்ப்பாகனிடம் கூறுகின்றான். தேரினை விரைவாகச் செலுத்து, எனக்காகக் காத்திருக்கும் என் தலைவியைக் காணவேண்டும். பிற உயிரினங்களுக்கு தீங்கு நேரக்கூடாது என நினைக்கும் தலைவன், தலைவி மீது எத்தகு அன்புடையவனாக இருப்பான் என்பதும் நினைக்கத்தக்கது. கார்காலத்தால் நிலம் செழிப்புற்று இருப்பது போல், பிரிந்த தலைவன் மீண்டும் சேரும்பொழுது இல்லறத்தில் தலைவி மகிழச்சியோடு இருப்பாள். இல்லறமும் குளிர்ச்சி பெறும் என்பது குறிப்பால் உணர்த்தப்படும் செய்தியாகும். கார் வரவு – தலைவன் வரவு. காடு அழகு பெறுதல் - தலைவன் வரவால் தலைவி அழகு பெறுவாள். இதனை

**“படுமழை பொழிந்த பயம் மிகு புறவின்**
**நெடுநீர் அவல பகுவாய்த் தேரை**
**சிறுபல் இயத்தின் நெடுநெறிக் கறங்க,**
**குறும் புதற் பிடவின் நெடுங்கால் அலரி**
**செந்நில மருங்கின் நுண் அயிர் வரிப்ப,**
**வெஞ்சின அரவின் பை அணந் தன்ன**
**தண் கமழ் கோடல் தாது பிணி அவிழ,**
**திரி மருப்பு இரரை தெள் அறல் பருகிக்**
**காமர் துணையொடு ஏமுற வதிய,**
**காடுகவின் பெற்ற தண்பதப் பெருவழி**
**ஓடுபரி மெலியாக் கொய்சுவற் புரவித்**
**தாள்தாழ் தார் மணி தயங்குடி இயம்ப**
**ஊர்மதி – வலவ! தேரே – சீர்மிகுபு**
**நம் வயிற் புரிந்த கொள்கை**
**அம்மா அரிவையைத் துன்னுகம், விரைந்தே”.**

**(அகம்:154)**

என்று தலைவி மீது இருக்கும் அன்பினை இப்பாடல் மூலம் அறியமுடிகின்றது.

**கார் பயம் பொழிந்த நீர்திகழ் காலை**

கவுணியன் பூதத்தனார், இடைக்காடனார், பெருங்கண்ணார் பாடல்களில் காலைப்பொழுதில் பெய்த மழையால் தலைவியைப் பிரிந்த தலைவன் புலம்புவதாக அமைந்துள்ளன. மழைப்பொழிவினால் வண்டுகள் அவிழ்த்து தேனெடுக்கின்றன. அரக்கு நிற உருவின் ஈயல் மூதாய் ஆரவாரிக்கின்றன. வினை முற்றி மீளும் தலைவன் வரும் வழியில் தான் காணும் விலங்கினங்களின் அன்புத் தன்மையை எடுத்துக் கூறித் தேரை விரைவில் செலுத்துமாறு தேர்ப்பாகனுக்குக் கூறுகின்றான். ‘பாகனே, மழை பொழிந்து மணலாக்கிக் கொண்டு நீர் ஓடுகிறது. பெரும்

மழையால் தழைத்திருக்கும் தழையை உண்ணாமல் நிற்கும் பெண்மான், ஆண்மான் புணர்ந்த உவகையில் துள்ளி ஓடுகின்றது. முல்லை மலர்ந்ததால் வண்டினங்கள் தேனை உண்டு மகிழ்கின்றது. இப்படிப்பட்ட முல்லை நிலத்தில் என் மனைவி என்னை நினைத்துப் பசந்து போன மேனியுடன் துன்பத்தோடு கண்ணீர் விட்டுக்கொண்டு இருப்பாள். ஆகவே என் துணையாகிய காதலியைக் காண்பதற்கு மிக்க விருப்பத்துடன் இருக்கின்றேன். ஆதலால் விரைவில் தேரைச் செலுத்துக எனக் கூறுகின்றான். இங்கு மழை பெய்துவிட்டதைக் கூறுகின்றான் தலைவன். தான் வருவதாகத் தலைவியிடம் குறித்துச் சென்ற பருவம் வந்துவிட்டது. ஆதலால் விரைவில் தேரைச் செலுத்தச் சொல்கிறான். ஆண்மான், தழுவிய உடன் பெண்மான் உவகையில் இருப்பது போல் நானும் என் மனைவியுடன் இணைந்து இன்புற்றிருக்க நினைக்கின்றேன் எனக் கூறுகின்றான். இதனை,

**“கார் பயம் பொழிந்து நீர்திகழ் காலை,**
**நுண் அயிர் பரந்த தண் அய மருங்கின்,**
**நிரை பறை அன்னத்து அன்ன, விரைபரிப்**
**புல் உளைக் கலிமா மெல்லிதின் கொளீஇய,**
**வள்பு ஒருங்கு அமையப் பற்றி, முள்கிய**
**பல்கதிர் ஆழி மெல்வழி அறுப்ப,**
**கால் என மருள, ஏறி, நூல் இயல்**
**கண் நோக்கு ஒழிக்கும் பண் அமை நெடுந்தேர்**
**வல் விரைந்து ஊர்மதி – நல்வலம் பெறுன !**

**(அகம் : 234 1- 9)**

என்ற பாடல் தெரிவிக்கின்றது.

**கார்கவின் கொண்ட காமர் காலை**

வினை முடித்து குறித்த பருவத்து வரும் தலைவன் தேர்ப்பாகனை நோக்கி, கடலில் நீரை முகந்து சென்று திசைகள் இருளும் படி நிலம் தெரியாதபடி நீர் சுழன்று துன்புற்று, மேகங்கள் வானை பிளப்பது போல

மின்னி, இடி முழக்கம் இல்லாமல் மழை பொழிகின்றது. மழை பொழிந்து நின்ற மறுநாள் விடியல் பொழுதில் மணல் மேடுகளில் பூச்சிகள் ஓடுகின்றன. நீல மணியும், பவள மணியும் கொட்டிக் கிடப்பது போலக் காயாம் பூக்களும், மலர்ந்திருக்கின்றன. இப்படிக் கார்காலம் செம்மாந்த பொலிவுடன் தோன்றுகின்றது. இது தான் அந்தக் கார்காலத்தின் காலைப்பொழுதாகும். அத்தகைய கார்காலத்தில் என் காதல் தலைவி விருந்தாக என்னை பெறட்டும். ஆதலால் தேரை விரைவாகச் செலுத்தச் சொல்கிறான்.

**“மாக்கடல் முகந்து, மாதிரத்து இருளி,**
**மலர்தலை உலகம் புதைய, வலன்ஏர்பு,**
**பழங்கண் கொண்ட கொழும்பல் கொண்மூ,**
**போழ்ந்த போலப் பல உடன் மின்னி,**
**தாழ்ந்த போல நனி அணி வந்து,**
**சோர்ந்த பொலச் சொரிவன பயிற்றி,**
**இடியும் முழக்கும் இன்றி, பாணர்**
**வடிஉறு நல்யாழ் நரம்பு இசைத்தன்ன**
**இன்குரல் அழிதுளி தலைஇ, நன்பல**
**பெயர் பெயது கழிந்த பூநாறு வைகறை,**
**செறிமணல் நிவந்த காளர் தோன்று இயவில்,**
**குறுமோட்டு மூதாய் குறுகுறு ஓடி,**
**மணிமண்டு பவளம் போல, காயா**
**அணிமிகு செம்மல் ஒளிப்பன மறைய,**
**கார்கவின் கொண்ட காமர் காலை,**
**செல்க, தேரே நல்வலம் பெறுந!-**
**பெருந்தோள், நுணுகிய நுகப்பின்,**
**திருந்து இழை, அரிவை விருந்து எதிர்கொளவே!**

**(அகம் :374)**

எனத் தலைவி பற்றித் தலைவன் கூறுகின்றான். இப்பாடல் பிரிவு, காத்திருத்தல், சந்திப்பு, மகிழ்ச்சி என முழுமையான வர்ணக்கலவை அடங்கிய சித்திரமாகும்.

**வினைமுற்றிய தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறல்**

பொருள் காரணமாகப் பிரிய நினைக்கும் தலைவன் தன் நெஞ்சினை நோக்கி, கரிய மேகங்கள் ஒளிமிக்க மின்னலுடன் கூடிய மழை பெய்தது. அம் மழையில் பெண் யானையும், ஆண் யானையும் ஆழமான ஆற்றில் விளையாடிக்கொண்டிருக்க அதன் துதிக்கையானது மறைக்கும் அளவிற்கு வெள்ளம் பெருகுமாறும், நிலமும், வானமும் பொருந்துமாறும் பெரு மழை பெய்தது என்பதை,

**“கடல் முகந்து கொண்ட கமஞ்சூல் மாமழை**
**சுடல் நமிர் மின்னொடு வலன் ஏர்பு, இரங்கி**
**ஏன்றூழ் உழந்த புன்தலை மடப்பிடி**
**கைமாய் நீத்தம் களிற்றொடு படீஇய,**
**நிலனும் விசும்பும் நீர் இயைந்து ஒன்றி”**

**(அகம்:43, 1-5)**

இந்த நேரத்தில் நான் எப்படி இருக்க வேண்டும்? தலைவி முல்லைப் பூவைக் காம்போடு பறித்து தன் கூந்தலில் சூடிக் கொண்டிருக்கிறாள். அவள் சூடிய முல்லைப் பூவானது காடெல்லாம் மணம் பரப்புகின்றது. அப்படிப்பட்ட மென்மையான தன்மை உடைய தலைவியை பிரிந்து, பொருள் தேடச் சென்றால் நான் அறிவற்றவனாகிவிடுவேன். ஆகவே பொருளீட்டச் செல்லும் விருப்பத்தை விட்டு விட்டு தலைவிக்கு இன்பத்தைக் கொடுப்பதே சிறந்தது என்று தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான் தலைவன்.

**தன் கார்க்கு ஈன்ற பைங்கொடி முல்லை**

மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார் தம் முல்லைப் பாடலில் தலைவன் தன் நெஞ்சிற்கு கூறுவது போல தேர்ப்பாகனுக்கு கூறுவதாகப் பாடியுள்ளார்.

வினை கருதி தலைவியைப் பிரிந்த தலைவனுக்கு தலைவியின் நினைவு வருகின்றது. அவள் நிலையை உணர்ந்து விரைவில் தலைவியை சென்றடைய வேண்டும் என்ற ஆர்வத்தினால் தன் நெஞ்சிற்கு கூறுவது போல தேர்ப்பாகனுக்குக் கூறுகின்றான்.

நாம் இன்ன நாள் திரும்பி வருவோம் என்று கூறிச் சென்ற நாட்களும் பொய்த்துப் போயின. மையுண்ட அழகிய கண்களிலிருந்து கண்ணீர் நில்லாது ஒழுகத் தொடங்கின. குளிரப் பெய்த மழையால் அரும்பிய பசிய கூர்மையான முனை கொண்ட வெண்மையான முல்லை அரும்புகளும் மலர்ந்தன. மாலை அணிவதால் உண்டாகும் அழகினை இழந்து விட்டக் கூந்தலையும் தலைவன் நினைத்துப் பார்க்க வில்லை. துணையைப் பிரியக் கூடாது என்ற அறத்திற்கும் அஞ்சவில்லை. அவருக்கு நம்பால் உள்ள அருளும் மறைந்தொழிந்து விட்டதே என்று என்னிடம் உள்ள குறைகளை எடுத்துக்கூறி பெரிதும் வருந்துவாள் தலைவி என்று தலைவன் புலம்புகின்றான். தலைவி மீது மீக்கூர்ந்த அன்பு கொண்டவனான தலைவனுக்கு கடமை தடுத்து நிறுத்துகிறது. போர்காரணமாகச் சென்று பகைவரை வெற்றி பெற்று வந்து கொண்டிருக்கும் தலைவனுக்கு கார்காலச் செயல்கள் தலைவியை நினைக்கச் செய்கிறது. வெற்றி பெற்ற செய்தியை சுற்றத்தார் விரைந்து சென்று தலைவியிடம் எடுத்துக் கூறும்பொழுது அதனைக் கேட்டு தலைவி நம்மோடு உண்டாகிய வெறுப்புத் தீர்தற்குக் காரணமான புணர்ச்சியைப் பெற்றவள் போல் மகிழ்ச்சியை பெறுவாள் என்று

தலைவியைப் பற்றிய சிந்தனையில் இருக்கும் தலைவனைக் காண முடிகின்றது. இதனை,

**"வருதும்" என்ற நாளும் பொய்த்தன்,**
**அரிஏர் உண்கண் நீரும் நில்லா,**
**தண்கார்க்கு ஈன்ற பைங்கொடி முல்லை**
**வைவாய் வால்முகை அவிழ்ந்த கோதை**
**பெய்வனப்பு இழந்த கதுப்பும் உள்ளார்**
**அருள் கண் மாறலோ மாறுக"**

**(அகம்:144, 1-6)**

எனும் பாடலடிகள் மூலம் தலைவன் தன் புலம்பலைத் தலைவி புலம்புவதாகக் கூறும் பாடல் ஒப்புநோக்கத்தக்கதாகும். மழைக் காலப்பிரிவு தலைவனுக்கு மயக்கத்தைத் தருகின்றது. முல்லைப்பூக்கள் பூத்து மணம் வீசிக்கொண்டிருக்கிறது. போருக்கு முன் கார் (மழை) வந்து போகின்றது. காதலிக்கு முன் கடமை வந்து நிற்கின்றது. இரண்டையும் இரண்டு கண்ணாகக் கருதும் கருணை உள்ளம் கொண்ட தலைவனைக் காணமுடிகின்றது.

**கார்காலமும் - தோழியின் நிலையும்**

பெண்ணின் இதயம் ஆணின் அன்பை நம்பி வாழ்கிறது. ஆணின் இதயமும் தன் அன்பையே நம்பிப் பெண் வாழ வேண்டும் என்று விரும்புகிறது இது உலகியல். தன்னையே சுற்றிவரும் தலைவன் பொருளுக்காகப் பிரியும் போது தன்னைவிடப் பொருள் முக்கியமா? என்ற வினாவினை எழுப்பி ஏங்குகிறது தலைவியின் உள்ளம். இவ்வுள்ளத்தினை நன்கறிந்தவள் தோழி. அவளை ஆற்றுவிக்க நினைக்கும் தோழி தலைவனின் அன்பையே முதற் கருவியாகக்கொள்கிறாள்."[16] பிரிவாற்றாமை தலைவனுக்கும் உண்டாயினும் அவனை யாரும் ஆற்றுவித்தல் இல்லை.

## தோழி தலைவியை ஆற்றுவித்தல்

ஆற்றுவித்தல் என்பது சங்க அகப்பாடல்களின் வாயிலாக அறியப்படும் தமிழ் மாந்தரின் காதல் வாழ்க்கைத் தொடர்பான நிகழ்ச்சிக் கூறுகளில் ஒன்றாக அமையும். தலைவன் தலைவியருக்கு இடையேயான பிரிவுக் காலத்தில் தலைவிக்குரிய பிரிவுத் துன்பத்தை ஆற்றுவித்தல் தோழிக்குரிய செயலாய், வினையாய் அமைகின்றது. காதல் மாந்தரில் தலைவி ஆற்றுவிக்கப்படுபவளாகவும், தோழி அவளை ஆற்றுவிப்பவளாகவும் அமைவர்.

தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் நிலையிலும், போர்வினைக்காகவும், பொருள்தேடுவதற்காகவும் பிரிகின்ற நிலையிலும் பிரிவாற்றாதிருக்கின்ற தலைவியைத் தோழியர் ஆற்றுவித்தலாக அமைந்த பாடல்கள் சங்க அகப் பாடல்களில் மிகுதியாக உள்ளன.

“சங்க அக இலக்கியங்களில் தோழி என்பவள் சிறப்பிடம் பெறுகின்றாள். எந்தச் சூழ்நிலையிலும் தலைவியைப் பாதுகாத்துக் கொள்ளும் உயிர்த்துடிப்பு அவளிடத்தில் உள்ளது. தலைவன் வரைவு நீடித்த போதும், தலைவன் வராமை கண்டு துன்பமடையும் போதும் தலைவியை ஆற்றுவிக்கும் அருமைப் பண்பு தோழியிடம் இருப்பதை உணரமுடியும். தோழி தலைவியின் நல்வாழ்வுக்கான சிந்தனை, செயல், சொல் வழியாகத் தன் சக்தியை வெளியிடுகிறாள். அவள் தலைவியின் இன்பங்களில் தன்னைப் பொருத்தித் துயரம் அடைகின்றாள்.”[17] அதற்குத் தோழி கார்ப்பருவ வரவு கூறியும், கார்ப்பருவ வரவை மறுத்துக் கூறியும் ஆற்றுவிக்கின்ற தன்மை சங்க அகப் பாடல்களில் காணப்படுகின்றது.

“பருவம் கண்டு அழிந்த தலைவியைத் தேற்றும் தோழி, பருவ வரவின் அளவிற்கேற்பத் தேற்றும் முறையிலும் மாறுதலைக் காட்டி

நிற்கின்றாள். பருவ வரவின் தொடக்க நிலையாயின் தலைவன் குறித்துச் சென்ற பருவம் வரப் போதலைக் காட்டித் தலைவர் வருவார் என ஆறுதல் அளிக்கின்றாள். தலைவன் வரும் பொருட்டு மழை தொடங்கியது எனப் பருவ வரவைக் காட்டித் தேற்றுகின்றாள். தலைவன் வரவறிந்து பெய்யும் மழை புகழப்படுகின்றது. பருவ வரவால் தலைவியை வருந்தவிடாது பருவ கால வரவினைத் தலைவனின் வரவிற்கு அமைந்த ஓர் இன்பக் குறியீடு எனக் கருதுமாறு தோழியின் தேற்றுதல் அமைந்து விளங்குகின்றது என்பார்."[18]

தலைவி வருந்தும் போதெல்லாம் தலைவியை ஆற்றுவிக்கும் பணியைத் தோழி மேற்கொள்கிறாள். தலைவனை பிரிந்திருக்கின்ற தலைவிக்குக் கார்காலமானது பெருந்துன்பம் தருகின்றது, தலைவன் கூறிச் சென்ற கார்காலம் வந்துவிட்டது. அதை ஆற்றாத தலைவியை நோக்கி தோழி,

**"கொடி பிணங்கு அரிய இருள் கொள் நாகம்**
**முடி பதம் பார்க்கும், வயமான் துப்பின்,**
**ஏனல் அம்சிறு தினைச் சேனோன் கையதைப்**
**பிடிக் கை அமைந்த கனல் வாய்க் கொள்ளி**
**விடு பொறிச் சுடரின் மின்னி, அவர்**
**சென்ற, தேஎத்து நின்றதால், மழையே"**

**(அகம்:73, 12-17)**

எனக் கூறுகின்றாள். எருமை வெளியனார் பாடிய இப்பாடலில் கார் வரவு கூறித் தலைவியைத் தோழி ஆற்றுவிக்கின்றாள். தலைவன் சென்றிருக்கும் நாட்டில், தினைப்புனம் காத்துக்கொண்டு பந்தல் மேல்நிற்பவன், கொள்ளியைக் கையில் வைத்துக் கொண்டு சுழற்றும் போது சிதறும் தீப்பொறி போல் மின்னல் மின்னி மழை பெய்து நின்றது. உன் நினைவு வருவதற்குரிய கார்காலம் உன் தலைவன் சென்ற

நாட்டிலும் நிகழ்கின்றது. ஆதலால் காலம் தாழ்த்தாமல் இன்றே வருவான் எனத் தோழி தலைவிக்குத் தலைவனின் வரவை உறுதிபடச் சொல்கின்றாள். தோழி, தலைவன் மீது கொண்ட நம்பிக்கை தலைவிக்கு இல்லாமல் போய்விட்டது. அதனைக் குறிப்பால் அறிந்த தோழி, தலைவிக்கு தலைவன் மீது நம்பிக்கை வரும்படிக் கூறுகின்றாள். மழைக்காலத்தில் கொடுமையான காட்டு வழியைக் கடந்து வர தலைவனுக்கு காலதாமதம் ஆகலாமே தவிர உன்னைப் பிரிந்திருக்க நினைக்க மாட்டான். கார் வருமுன் உன் தலைவன் தேர் வருவது உறுதி என்ற நம்பிக்கையூட்டுகின்றாள்.

**துணை தரு தண் கார்**

பொருள்வயின் காரணமாகச் சென்ற தலைவன் வராது காலம் தாழ்த்துகின்றான். அதை ஆற்றாத தலைவியை நோக்கி தோழி, இதோ மயில் கூடுதற்குத் தன் பெடையைக் அகவி அழைக்கின்றது. மழையும் பெய்து நின்றது எனக் கார்கால வரவை எடுத்துச் சொல்லித் தலைவன் வரும்வரை ஆற்றியிருக்குமாறு வற்புறுத்துகின்றாள். அதற்குத் தலைவி, அழகிய நெற்றியில் பசலை படர்ந்தது. பெரிய தோள்கள் மெலிவடைந்தன. பிரிவினால் உண்ணாத காரணத்தால் வருத்தமுற்று உயிர் நீங்கி மெலிந்தேன். நாம் இந்நிலையை அடையுமாறு தலைவர் நம்மை விட்டுப் பிரிந்தார். அறவழியைத் தவறிவிட்டார் எனப் பலவும் கூறி வெறுத்து ஆராத்துன்பத்துள் ஆழ்ந்து கிடக்கின்றாள் தலைவி. ஆண் மயில் வேங்கை மரத்திலிருந்து தன் பேடையை அழைக்கிறது. பெண் யானைக்கும் அதன் கன்றுக்கு பசியைப் போக்குப் பொருட்டு ஆண் யானை மூங்கிலின் முற்றாத முனையினைக் கொண்டுவந்து பசியைப் போக்கிக்கொண்டிருக்கின்றது. இக்காட்சியைக் காணும் தலைவன் உன்னை நினைப்பான். காலம் தாழ்த்தாது வருவான். குருந்த மரத்தின் கிளையிலிருந்து ஆண்மயில் தன் துணையை அழைத்து மகிழ்ச்சியடையும் கார்ப்பருவத்து நம் தலைவன் வருவான். அவனை

நம்பு, "துணைப் பருவத்து பயிர்த்து அகவும் துணை தரு தண் கார்" என்கின்றாள் தோழி. காரணம் பறவைகளும் விலங்குகளும் கார்காலத்தில் துணையைப் பிரியாது இன்பமாக இருக்கும் பொழுது உன் தலைவன் மட்டும் உன்னைப் பிரிவானா? இல்லை வருவான். மகிழ்ச்சி தருவான். அவன் மீது நம்பிக்கை வை என்பது போலக் கூறுகின்றாள். இதனை

**"........................................சாரல்,**
**ஈன்று நாள் உலந்த மெல்நடை மடப்பிடி,**
**கன்று, பசி களைஇய, பைங் கண் யானை**
**முற்றா மூங்கில் முளை தருடி, ஊட்டும்**
**வெண் வேல் திரையன் வேங்கட நெடுவரை,**
**நல் நாள் பூத்த நாகு இள வேங்கை**
**நறு வீ ஆடிய பொறி வரி மஞ்ஞை**
**நனைப் பசுங் குருந்தின் நாறு சினை இருந்து,**
**துணைப் பயிர்ந்து அகவும் துணை தருதண் கார்,**
**வருதும், யாம்' எனத் தேற்றிய**
**பருவம் காண் அது, பாயின்றால் மழையே.!.**
**(அகம்: 85, 5-15)**

என்று கூறுகின்றாள்.

தலைவியின் உருவத் தோற்றம், எண்ணம், செயல்கள் குறித்த செய்திகள் கூறப்பட்டுள்ளன. தலைவன் பிரிந்த நிலையும், பிரிந்தவன் வாராமையால் தலைவி அழும் நிலையும் கூறப்படுகின்றது. இங்குக் கார்காலம் காட்சிப் படுத்தப்பட்டுள்ளது. காலப் புனைவும், காலப் பின்னணியும் கூறப்பட்டுள்ளது. மேலும் தலைவன் கண்ட காட்சிகள் நம்மை நினைவூட்டும். ஆதலால் வந்துவிடுவான். அவன் வாராது போனால் உண்ணாமல் உன் உயிர் இறந்தொழியும் என்பதனை நான் நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறேன், நீ அழாதே, நின்னைக் கருதி

இப்பொழுதே, தலைவன் வருவான் என்று தோழி தலைவியை ஆற்றுவிக்கும் உள்ளப்பாங்கினை காணமுடிகின்றது.

**ஆர்பெயல் உதவிய கார்**

பொருள் வயிற் பிரிந்த தலைவன் வினை முடித்து மீண்டு வந்தான். அதனால் பெருமகிழ்ச்சி அடைந்த தோழி, 'நல்லதொரு நேரத்தில் வந்தாய், நீ வாராது இருந்திருந்தால் தலைவி இறந்துப் பட்டிருப்பாள்' எனக் கூறுகின்றாள்.

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவியை ஆறுதல் படுத்துவதும், அதே நேரத்தில் தான் குறித்துச் சென்ற கார்ப்பருவத்தில் வந்த தலைவனைப் பாராட்டிப் புகழ்வதும் தோழியின் சிறந்த செயல்களில் ஒன்றாகும். இதோ தலைவன் குறித்த பருவத்தில் வந்துவிட்டான் என்றவுடன் தோழி தலைவனை நோக்கி,

**"நீலத்து அன்ன நீர் பொதி கருவின்,**
**மாவிசும்பு அதிரமுழங்கி, ஆலியின்**
**நிலம் தண்ணென்று கானம் குழைப்ப,**
**இனம் தேர் உழவர் இன்குரல் இயம்ப.**
**மறியுடை மடப்பினை தழிஇ, புறவின்**
**திரிமருப்பு இரலை பைம்பயிர் உகள,**
**ஆர் பெயல் உதவிய கார்செய் காலை,**
**………………………………………**
**………………………………………**
**செய்வினை அழிந்த மையல் நெஞ்சின்**
**துனிகொள் பருவரல் தீர, வந்தோய்!**
**இனிது செய்தனையால் வாழ்க"**

**(அகம்:314, 1-7, 16-18)**

எனும் மதுரை அளக்கர் ஞாழார் மகனார் அம்மள்ளனார் பாடலில் கார்ப்பருவ வரவு கூறித் தோழி, தலைவியின் நிலையை தலைவனிடம் கூறுகின்றாள். மேகமானது இடியினை முழக்கி மழையைப் பொழிந்தது. அதனால் நிலம் குளிர்ந்து காடுகள் செழிப்புற்றது. ஆண்மான் தனது பெண்மானைத் தழுவிக் கொண்டு முல்லைக் காட்டில், பசுமையான பயிர்களுக்கிடையே துள்ளித் திரிந்தது. இவ்வாறாக மேகம் பெருமழை பொழியக் கார்ப்பருவம் வந்தது. இப்பருவத்தில் தலைவன் வாராது போனால் அவர் உரைத்த சூள் தான் என்னாகுமோ? என்று தலைவி தலைவனை நினைத்து இறந்து விடுவாளே என்ற ஏக்கத்துடன் இருக்கும் போது வினை மேற்கொண்டு குறித்த பருவத்தில் தலைவன் வந்துவிட்டான். அவனை வாழ்த்தி நமது இல்லத்தைச் சுற்றி வேலியாகப் படர்ந்துள்ள வெண்ணிற முல்லை மலர்கள் சூடிய தழைத்த கூந்தலையும், இனிய நகையினையும் உடைய இளையவளாகிய எம் தலைவியைத் தழுவித் கொள்ளும்படி நினது மார்பு நிலைபெறுவதாக! என்று தோழி குறிப்பிடுகின்றாள்.

நிலம் குளிரக் காடு தழைத்தது போல் உன்வரால் தலைவி மனம் குளிர்ந்து இல்லறம் மகிழ்ந்தது. பெண்மானையும் குட்டிமானையும் தழுவிக்கொண்டு ஆண்மான் இருப்பது போல் உன்தலைவி, புதல்வனோடு நீ இனிது வாழ்தல் வேண்டும். தலைவியின் நெஞ்சில் வெறுப்பைத் தரும் துன்பம் நீங்கிவிட்டது. உரிய நேரத்தில் நீ வந்துவிட்டாய். என் தலைவிக்கு இனியதொரு நல்ல செயலைச் செய்துவிட்டாய். முல்லை மலர் சூடிய என் தலைவியோடு இன்பம் துய்ப்பாயாக எனத் தோழி கூறுகின்றாள். கார்காலத்தில் இருவரும் சேர்ந்திருப்பது மனதுக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. இல்லறத்தில் இனிமை பிறக்கின்றது. துணை இல்லாது பிரிந்திருப்போருக்கு கார்காலம் துன்பம் தருவதாகும். ஆனால் சேர்ந்திருப்போருக்கு பேரின்பம் தருவதாக அமைகின்றது என்பதனை உணரமுடிகின்றது.

தலைவன் குறித்த பருவம் வராத போது புனையா ஓவியம் போல் காட்சி அளித்த தலைவி, தலைவன் வந்தவுடன் தலையில் பூச்சூடுதலும் மலர்ந்த முகத்துடனும் காட்சிப்படுத்தி சொல்லுதல், இரண்டு உள்ளங்களின் மகிழ்ச்சியின் வெளிப்பாடாக அமைகின்றது.

## முடிவுரை

கார்காலம் தலைவன் தலைவி, இருவரும் சேர்ந்திருக்க வேண்டிய காலம். இக்காலம் உயிர்களின் பரிணாம வளர்ச்சிக் காலம். இக்காலம் போர்காரணமாகவோ, பொருள்காரணமாகவோ பிரிந்து செல்லும் தலைவன் மீண்டும் வருவதற்குரிய காலமாக உள்ளது. இக்காலத்தில் தலைவன் வந்துவிட்டால் தலைவிக்கு மகிழ்ச்சி தரும் காலமாகவும், வரவில்லை என்றால் துன்பம் தருகின்ற காலமாகவும் அமைகின்றது.

கார்காலத்தில் முல்லைக் கொடி தளிர்க்கும். இடியுடன் கூடிய மழைப்பொழிவும், ஆலங்கட்டி மழையும் பெய்யும். விலங்கினங்கள் தன் இணையுடன் இணைந்திருக்கும் அவ்வேளையில் தலைவி மட்டும் தனிமையில் இருப்பாள். அப்போது இடியும், மின்னலும் அச்சுறுத்துவதாய் அமையும். மேலும் தலைவன் பாசறையிலிருந்து புலம்புவதையும், தேர்ப்பாகனிடம் புலம்புவதையும் அறியமுடிகின்றது. தலைவன், தலைவி இரண்டு தலைமக்களும் மழைக்காலங்களில் ஒருவரை ஒருவர் பிரிந்து வருத்தம் கொள்வதை அறிய முடிகிறது.

தலைவி இல்லறத்தில் அமைதியுடன் தலைவனின் வரவை நோக்கிக் காத்திருக்கும் மன வேட்கையை மழை பெய்து மேலும் தூண்டுகிறது. பாசறையில் இருக்கும் தலைவனுக்கு கோபம் கொண்ட வேட்கைக்கு இதமாகவும் இருக்கிறது. இரண்டு மனங்கள் இருக்கின்ற சூழ்நிலைகள் அவர்களது மனநிலையைத் தீர்மானிக்கக் கூடியதாக கார்காலம் அமைந்துள்ளது. இதனால் கார்காலம் இளம் தம்பதிகளின் மனங்களைத் தீர்மானிக்கும் விதமாக அமைந்துள்ளது.

அகவாழ்க்கை மரபியலின் தலைவன், தலைவி இருவரும் எக்காலத்தும் சேர்ந்து இருத்தலாக கூறப்படவில்லை. பிரிவு என்பது காலங்கடந்து நீடிக்கக்கூடாது என்பதை மட்டும் பாடல்களில் வலியுறுத்தப்படுகிறது.

தலைவன் வினைமுடித்து குறித்த பருவத்தில் திரும்பி வந்தபொழுது அவனை வாழ்த்துதலும், முல்லை மலரை தலைவி தன் தலையில் சூடுதலும் காணமுடிகின்றது.

சங்க இலக்கியப் பாடல்களில் இடம் பெறும் இயற்கையும் மனிதனும் இயல்பாகக் கூடியிருத்தலை நிலைநாட்டுவதாய் அமைந்திருக்கிறது. மனிதன் மட்டும் தான் பொருள் ஈட்டுதல், வினை மேற்கொளல் என்னும் பேராசையினால் தன் இணையைப் பிரிய வேண்டிய நிலை இருந்தது. மனிதனைத் தவிர வேறு எந்த உயிரினமும் தன் இணையைப் பிரிந்து நீண்ட நாட்கள் சென்றதில்லை என்பதை அறியமுடிகின்றது.

கார்காலம் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு, முரண்பட்ட தன்மையில் அமைகின்றது. பிற உயிரினங்கள், பயிரினங்கள் மகிழ்ச்சி, தலைவிக்குத் துன்பம். கார் வரவு எல்லா உயிர்களுக்கும் மகிழ்ச்சி, தலைவன் வாராததால் தலைவிக்குத் துன்பம் என அமைகின்றது.

மொத்தத்தில் கார்ப்பருவத்துப் பிரிவு தலைவியின் நெஞ்சில் கனலை மூட்டுகின்றது. அவள் உணர்ச்சியின் உள்ளீடு புலம்பலாகி, கண்ணீராகித் தலைவியை வருத்துகிறது. இரக்கமற்றவனாக, உறக்கமற்ற தலைவிக்கு ஊறு விளைவிப்பவனாக, பொருள் மீது கொண்ட ஆசையால் தலைவியை மறந்துவிடுபவனாகத் தலைவன் இருப்பது உணர்த்தப்படுகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. தொல், பொருள், அகம் நூற் : 952
2. கி.இராசா, இலக்கிய வகைமை ஒப்பாய்வு, ப.257
3. ஆ.இராமகிருட்டிணன், அகத்திணை மாந்தர் - ஓர் ஆய்வு. ப.122
4. மேலது, பக்.122-123
5. மேலது, பக்.123
6. மேலது, பக்.113
7. நற்றிணைச் சொற்பொழிவுகள், ப.135
8. குறுந்தொகைச் சொற்பொழிகள், பக்.73-74
9. அ.செல்வராசு, ஆண் ஆளுமையில் பெண் கற்பு, ப.9
10. தொல். பொருள், இளம்பூரணார், ப.16
11. சி.கணேசையர் (பதிப்) தொல்.பொருள், நச்சினார் கினியர் ப.27
12. வி.ஆனிலெட்பாமி, சங்கஅகப்பாடல்களின் அடிக்கருத்துக்கள்,ப.215
13. ஆ.இராமகிருட்டிணன், மு.நூ.ப.181
14. வி.ஆனிலெட்பாமி, மு.நூ.ப.220
15. இரா.செயபால், உரையாசிரியர், அகநானூறு மூலமும் உரையும், ப.702.
16. சரளா ராஜகோபாலன், சங்க இலக்கியம் (அகம்), ப.85
17. மேலது ப.63
18. ஆ.இராமகிருட்டிணன், மு.நூ.பக், 93-94

## இயல் - 2

## பனிக்காலமும் மாந்தர்கள் நிலையும்

### முன்னுரை

கார்ப்பருவத்தை அடுத்து உயிர்களை நடுங்கச் செய்கின்ற வாடை வீசும் பருவமே கூதிர்காலம் ஆகும். குறிஞ்சிக்கு உரியதாகிய இந்தப் பருவம் ஐப்பசியும், கார்த்திகையும் சேர்ந்த மாதங்களாகும். இப்பருவம் பிரிந்திருப்போருக்கு பெருந்துன்பத்தையும், ஆற்றாமையையும் நல்கும் பருவம் ஆகும். உடனுறைவோர்க்கு வாடை நல்கும் பருவம். கார்காலத்தில் மழைபெய்த பின் மேகத்தில் எஞ்சியிருக்கும் துளிகள் கூதிர்காலத்தில் வீசுவதுண்டு. இதனால் இணைகள் இன்புறும் காலமாக கூதிர்காலம் அமைந்திருக்கும். இளவேனிற் பருவத்தே வினைவயிற் பிரிந்து செல்லும் தலைவன் கார்காலத்தில் வருவதாகச் சொல்லிச் செல்வான். கார்காலம் முடிந்து கூதிர்காலம் தொடங்கிய பின்னும் தலைவன் வராது இருப்பதுண்டு. “கூதிரானது இன்புறத்தக்க காலமாகும். கார்காலத்து மழை பெய்த பின் மேகத்தில் எஞ்சியிருக்கும் துளிகள் துாறல்களாக, சாரலாகக் கசிந்து கொண்டே இருக்கும்.”[1] இக்கால கட்டத்தில் பிற உயிரினங்களான பறவையினங்கள், விலங்கினங்கள் கூடத் தம் இருப்பிடம் விட்டு நீங்காது வாடையால் வாடித் துன்புற்று இருப்பதும் உண்டு. அத்தகு காலம் பற்றியும், அக்காலத்துத் தலைவன் தலைவியர் நிலை பற்றியும் சங்கப் புலவர்கள் பாடியுள்ள திறம் எடுத்துக்காட்டப்பட்டு விளக்கப்படுகின்றது.

“குறிஞ்சிக்குப் பெரும்பான்மையும் களவியற் புணர்ச்சி பொருளாதலின், அப்புணர்ச்சிக்குத் தனியிடம் வேண்டுமென்றே. அது கூதிர்காலத்துப் பகலும் இரவும் நுண்குறி சிதறி இயங்குவோரிலராம். ஆதலின் ஆண்டுத் தனிப்படல் அரிதாதலின் அதற்கது சிறந்தது”[2]

என்னும் கூற்றால் கூதிர்ப்பருவத்தில் தனித்துக்கூடல் குறிஞ்சிக்குப் பொருந்திய பருவமாகப் புனைந்தனர் என்பது அறியப்பெருகின்றது.

"குறிஞ்சியில் நிகழ்வது களவொழுக்க மாதலின், களவோ குறைந்த காலம். பெறும் உணர்வோ அதிகம். எனவே இக்கூதிர்காலத்தை அதனுள்ளும், இரவுக்காலத்தைப் புணர்ச்சிக்குரிய பொழுதாகப் பெரிதும், பயன்படுத்திக் கொள்வர். இது குறித்து விரிவுடன் அறிதல் வேண்டாற்பாலது."[3] என்கிறார்.

மேலே கண்ட கூற்றுகளின் அடிப்படையில் எல்லாத் திணைகளிலும் எல்லாப் புணர்தலும் நிகழும், ஆனால் ஒவ்வொரு திணைக்கும் ஒவ்வொரு சிறப்பு நிலை புணர்வு உள்ளது. அப்படிப்பட்ட சிறப்பு குறிஞ்சி நிலமாகிய மலைத் தொடருக்கு புணர்தல் சிறப்பு உண்டு. ஆகையால் அம்மலைக்கு உரிய பெரும் பொழுது கூதிர்காலம் (குளிர்காலம்) ஆகும். அதனால் கூதிர்காலம் என்பது குறிஞ்சிக்கு ஏற்ற காலமாக அமையப் பெறுகின்றது. தலைவனும் தலைவியும் பெற்றோர் ஊரார், பிறர் அறியா வண்ணம் சந்தித்துக் கொள்வதற்கு குளிர்காலமும் இரவு என்னும் பருவமும், பொழுதும் துணையாய் நிற்கின்றன.

**கூதிர் நிகழ்வு**

கூதிர்பருவத்தில் வீசும் வாடை,கார்காலத்திலும் பெருந்துன்பத்தைத் தரும். கூதிர்காலத்தில் குன்றும், குளிரும் அளவில் குளிர் மிகுந்திருக்கும். களவுப் புணர்ச்சி மேற்கொண்ட காதலர் தனிப்பட்டு ஒழுக எண்ணுங்காலை இருளும், மழையும் மிகுந்து குளிர் மிகும். இக்கூதிர்காலத்தில், விலங்கினங்களும், பறவையினங்களும் தத்தம் துணையுடன் வாழும். அப்போது தலைவன் மிகுதியான காதல் வேட்கையுடன், கடுமையான வழித்தடத் துன்பங்களை எல்லாம் எதிர்ப்பட்டு தலைவியோடு இணையுங்கால் கூடல் வகை பெருகும். இத்தகைய நிகழ்வுகளைக் கொண்டுள்ள காலம் கூதிர்காலமாகும்.

**கூதிர்காலத்துத் தலைவன் தலைவியர்**

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு இன்னா வாடையாக, உயிரைக் கொல்ல வந்த கூற்றுவனாகக் கூதிர் வாடை அமையும். இன்பமும், துன்பமும் கலந்த இயல்பான வாழ்க்கையில் இயற்கையின் வரவால் சில நேரங்களில் இயல்பு வாழ்க்கைப் பாதிப்புக்குள்ளாகிறது. செயலற்ற நிலையில் உயிரற்ற ஓவியமான நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். கூதிர் எனும் பருவம் வந்தால் தலைவனைப் பிரிந்த தலைவி உருக்குலைந்த பாவையாகி விடுகின்றாள். கார்காலத்து மகிழ்வாலும், கூதிர் காலத்து இனிய வாடைக் காற்றாலும் உலகத்து இயற்கை மற்றற்ற மகிழ்ச்சியால் மயங்கிக் கிடக்கும் போது, தலைவன் பிரிவால் துன்பத்தில் மயங்கிக்கிடக்கின்றாள் தலைவி. கார்காலம் தந்த கனமழையால் நீர்நிலைகள் நிரம்பி வழிய, உழவர்களும் உவகையோடு தம் தொழிலைச் சிறப்பிக்க வருவாயை நோக்கிப் பயிரை வளம்பெறச் செய்வதும் அவர்களுக்கு மகிழ்ச்சியாகும். மொத்தத்தில் உலகமே மகிழ்ச்சியுடன் இருக்க, உள்ளத்தைத் தலைவன்பால் ஈடுபடுத்திய தலைவியை மட்டும் உயிரை எடுக்கிற காலமாக அமைகின்றது. களவு, கற்பு என்னும் இரு நிகழ்விலும் கூதிர் காலத்துத் தலைவனின் பிரிவு தலைவிக்கு மிகுந்த துன்பத்தைத் தருகின்றது.

**தலைவியின் ஆற்றாமை**

“தன் இயல்பில் வீசும் காற்றுக் கூடக் காதலரின் உணர்ச்சியையும் உள்ளத்தையும் பாதிக்கின்றது. நான்கு திசைகளிலிருந்து வீசும் காற்றிலும் வாடைக்காற்று மிகச் சிறப்பான இடம்பெறும்” என்பர்.[4] அதுபோல் தாங்கொணாத தனிமைத் துயரால் வாடும் தலைவி கூதிர் காலத்தில் தலைவன் உடன் இருந்தும், அவள் அடையும் துன்பத்தைத் தலைவனுக்கு குறிப்பால் உணர்த்துகின்றாள்.

தலைவன் இருந்தும் பெரிதாக வருந்திய தலைவி தலைவனை நோக்கி, 'கூதிர்காலத்தில் குறத்தியரின் தந்தையர் காட்டில் வாழும் விலங்குகளை வேட்டையாடி வருபவர்கள். அவ்வாறு வேட்டையாடும் போது காட்டில் தூங்குவதற்கு இடமின்றித் தம் இல்லத்திற்கு வந்து புலித்தோலை விரித்து படுத்துத் தூங்குகின்றனர். வேட்டைக்குச் செல்பவர்கள் கூட இரவுப்பொழுதில் காட்டில் தங்காது வீடு நோக்கி வருகின்ற பொழுது உன்னைப் பிரிந்து தனிமையிலிருக்கும் பொழுது "தண்வரல் அசைஇய பண்பு இல் வாடை" (அகம்:38: 11) மிகுந்த துன்பத்தைத் தருவதாக உள்ளது. பண்பு இல்லாத வாடைக்காற்றுக் காலத்திலும் நீ வரவில்லை. உன் வருகையை எதிர்பார்த்து என் மனையிலுள்ள மரக்கிளையைப் முறியுமாறு வளைத்துப் பிடித்துக்கொண்டே இருக்கின்றேன். உன்னைச் சந்திப்பதற்கான காத்திருப்பு இன்பமாகத்தான் இருக்கின்றது. ஆனால் கூதிர்கால வாடைக்காற்று தான் என்னைக் கொல்கின்றது. வாடையால் வந்த துன்பம் எனக்கு மன வருத்தத்தைத் தருகின்றதே தவிர, உன்னை நினைத்துக் காத்திருப்பதால் நான் சோர்வடையவில்லை. களவுக் காலத்து சந்திப்பு, மணம் கொள்ளும் கருத்தின்றி காலம் தாழ்த்தும் தலைவனுக்கு தன் நிலையை எடுத்துரைக்கின்றாள் தலைவி.

இரவுப்பொழுது தனிமை - காத்திருப்பு – அச்சத்தைத் தருவது, வேட்டைக்குச் செல்லும் குறவர்கள் கூடஇரவு தங்காது வீடு நோக்கி வருகின்றனர் என்றால் அவர்களைவிட எனக்குத் துணிச்சல் அதிகம்தான். நான் இரவுநேரம் என்று பயப்படவில்லை. இரவுப்பொழுதை விட வாடைக்காற்று தான் என்னை வருந்தச் செய்கின்றது என்பதை உணர்த்துகின்றாள். இதனை,

**"நும் இல் புலம்பின் நும் உள்ளுதொறும் நலியும்**
**தண்வரல் அசைஇய பண்பு இல் வாடை**
**பதம் பெறுகல்லாது இடம் பார்த்து நீடி**
**மனை மரம் ஒசிய ஒற்றிப்**
**பலர் மடி கங்குல், நெடும் புற நிலையே."**

**(அகம்: 58: 10-14)**

என்று மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார் பாடிய பாடல் வழி அறியலாம்.

"காதல் வாழ்வின் சிறிதளவு நம்பிக்கையின்மை மனதில் தோன்றும் போதே உணர்வுப் போராட்டம் தோன்றிவிடுகின்றது. காதலுறவு வலிமையாகும்போது நம்பிக்கையின்மை வளர்ந்தால் மனத்தில் உணர்வுப் போராட்டமும் வலிமையாகிறது. தலைவனது பிரிவைத் தாங்கமுடியாத தலைவி தோழியுடன் பேசுவது, அவளது உணர்வுப் போராட்ட மனநிலையை வெளிக்காட்டும். பருவங்கண்டு வருந்தும் நிலையில் உணர்வுகளால் ஆட்கொள்ளப்படும் போதும் துன்பம் உண்டாகும் என்பர்."[5]

**பனிகடி கொண்ட பண்புஇல் வாடை**

"களவில் தலைவியோடு புணர்ச்சி நிகழ்த்தும் தலைமகனுக்கு அத்தலைவி எவ்வளவுக்கெவ்வளவு அரியளாகின்றாளோ அவ்வளவுக் கவ்வளவு புணர்ச்சி இன்னும் சிறக்குமாதலானும் தலைவியினது அருமையினை இருள், மழை இவற்றால் களவின் கண்ணே தலைவனுக்குப் புலப்படுத்துவது ஐப்பசியும் கார்த்திகையும் ஆகிய கூதிர்காலமாகும். முன்பனிக்காலமாகிய மார்கழியும். தையும் அத்துணைச் சிறப்பில்லாதது எனினும் பொருத்தமுடைமை பற்றி முன்பனி பின்னர் சேர்க்கப்பட்டது."[6] என்பர். அத்தகு சிறப்புடைய காலமாகிய கூதிரில் தலைவன் வராததால் வருத்தமடைகின்றாள் தலைவி.

தலைவன் பிரிவினை ஆற்றாத தலைவி தோழியிடம், பொருள் தேடுதலே தலைவனின் விருப்பம் பொருள் ஈட்டும் முயற்சியில் நம்மை முற்றிலும் மறந்து போய்விட்டார். இதோ கரிய மேகம் முதலில் பயன்தரும் நிலங்களுக்கு மழையைப் பெய்வித்தது. பின்னர் மழையைச் சேர்ந்து அவ்விடத்தே தங்கும் இரவெல்லாம் தூவலாகத் தூவியது. அது மட்டுமல்லாது, வாடைக்காற்று வீசுவதால் செங்காந்தளின் அரும்புகள் சுடர் கொண்ட அகல் விளக்குகள் போல விரிந்து மலர்ந்துவிட்டன. சுருண்ட அரும்புகளையும் முசுண்டைச் செடியில் மலர்ந்துள்ள வெண்மையான பூக்கள், வாளை அழகு செய்யும் மீன்களைப் போல பசுமையான புதர்களை அழகு செய்தன. நண்டுகள் மழையினால் நீர் பெருக்கொடுத்து ஓட, தன் மண் வளைகளுள் சென்று தங்கின. அகன்ற வயல்களில் கரும்பினது வெண்ணிறப் பூக்கள் மழையில் நனைந்த நாரையைப் போல, ஈரம் உடையனவாய் வளைந்து போயின. இவ்வாறாக பண்பில்லாத வாடைக் காற்று பொங்கிச் சிதைந்து நடுங்கும் குளிரால் அச்சத்தைத் தோற்றுவித்து, மயங்கிய மாலைப்பொழுதுடன் கூடி இரக்கமின்றி வருந்தச் செய்தது என தலைவி கூறுகின்ற கூற்றின் மூலம் தலைவன் பிரிவால் தனக்கு ஏற்பட்ட அச்சமான மனக்கவலையை விலங்குகள் மீதும், தாவரங்கள் மீதும் ஏத்திக் கூறுகின்றாள். தன்பயம் போக்க, பிரிதொன்றைக் கூறுவதுபோல கூறுகின்றாள். தன்னுடைய இயலாமையை வெளியில் காட்டிக்கொள்ளாது போல் பேசுகின்றாள். மழையினால் நண்டுகள் கூட தன் வளைக்குள் போய்ச் சேர்ந்தன. ஆனால் தலைவன் என்னைத் தேடி இல்லறம் நோக்கி வரவில்லையே? மழைக்காலம், இரவுப்பொழுது, வாடைக்காற்று இவை எல்லாம் சேர்ந்து தன்னைக் கொல்லுவதாக உணர்கின்றாள்.

குளிருடன் வந்த வாடைக்காற்றினால் அகன்ற வயல்களில் கிளைகளோடு விரிந்து திரண்ட காம்பினை உடைய கரும்பினது வெண்ணிறப் பூக்கள், மழையில் நனைந்த நாரையைப் போல் ஈரம்

உடையனவாய் எவ்வாறு வளைந்து இருக்கின்றனவோ, அதுபோல் நான் இருக்கின்றேன். எப்படி வயலாகிய இல்லறத்தில் கிளையாகிய உறவுகளோடு மிக்க மகிழ்வோடு இருந்தேன். பிரிவு என்னும் மழையில் நனைந்து, குளிரின் தாக்கத்தால் நாரைபோல நடுங்கிப் போகின்றேன். பொருளுக்கு முக்கியத்துவம் தரும் தலைவன், தலைவியை ஒரு பொருட்டாக நினைக்கவில்லையே என மன வருத்தம்கொள்ளும் தலைவியைக் காணமுடிகின்றது. இந்நிலையை உணர்ச்சியின் மரணப் போராட்டம் என்று கூடச் சொல்லலாம். இதனை

**“பயன் நிலம் குழைய வீச, பெயல்முனிந்து,**
**விண்டு முன்னிய கொண்டல் மாமழை**
**மங்குல் அற்கமொடு பொங்குபு துளிப்ப,**
**வாடையொடு நிவந்த ஆய்இதழ் தோன்றி**
**சுடர்கொள் அகலின் சுருங்குபிணி அவிழ,**
**சுரி முகிழ் முசுண்டைப் பொதி அவிழ் வான்பூ**
**விசும்பு அணி மீனின் பசும்புதல் அணிய,**
**களவன் மண் அளைச் செறிய அகல்வயல்**
**கிளைவரி கரும்பின் கணைக்கால் வான்பூ**
**மாரிஅம் குருகின் ஈரிய குரங்க**
**நனிகடுஞ் சிவப்பொடு நாமம் தோற்றி,**
**பனிகடி கொண்ட பண்புஇல் வாடை**
**மருளின் மாலையொடு அருள் இன்றி நலிய**
**நுதல் இறை கொண்ட அயல்அறி பசலையொடு**
**தொல் நலம் சிதையச் சாஅய்.”**

**(அகம்:235, 4-18)**

எனும் கழார்க்கீரன் எயிற்றியார் பாலைத்திணைப் பாடல் வழி அறியலாம்.

**கடிதுவந்து இறுத்த கண்இல் வாடை**

“களவு குறிஞ்சிக்குரிய ஒழுக்கமாகும். குறிஞ்சி என்பது மலையும் மலைசார்ந்த பகுதியும் ஆகும். இந்நிலம் சார்ந்த உரிப்பொருள் நிகழ்விற்குரிய பெரும்பொழுது கூதிர்காலமும் முன்பனிக்காலமும். சிறுபொழுது யாமம். தலைமக்கள் பிறர் அறியாமல் ஒன்றுகூடுதலாகிய புணர்ச்சிக்குரிய திணையாகக் குறிஞ்சி கூறப்படுகின்றது. குறிஞ்சித் திணை களவொழுக்கத் திணையாகும். புணர்ச்சிக்குத் தனி இடம் வேண்டும். கூதிர்காலம் எனப்படும் வாடைக்காலத்தில் பகலிலும், இரவிலும் சிறு சிறு மழைத்துளிகள் சிதறும். அதனால் மக்கள் நடமாட்டம் மிக்கு இராது. இதனால் களவொழுக்கமுடைய தலைமக்கள் தனித்துச் சந்திக்கவும், கூடி இன்புறவும் எளிதாகும் என்பர்.”[7]

பொருள்காரணமாகப் பிரிந்த தலைவன் காலம் நீட்டித்தான். தலைவன் குறித்துச் சென்ற பருவம் வந்தும், அவன் வரவில்லை. அதனை அறிந்த தோழி தலைவியை ‘நீ ஆற்றியிருக்க வேண்டும் என்று வற்புறுத்த, அதற்குத் தலைவி என் உயிரை கவரும் பொருட்டு கூதிர் வந்தது என்கிறாள். இது குறித்த பாடல் இங்குக் காட்டத் தக்கதாகும். இதனை

**“---------------------------------------------“கல்லெனக்**
**கடிதுவந்து இறுத்த கண் இல்வாடை!**
**‘நெடிதுவந் தனை’ என நில்லாது ஏங்கிப்**
**பலபுலந்து உறையும் துணைஇல் வாழ்க்கை**
**நம் வலத்து அன்மை கூறி, அவர்நிலை**
**அறியுநம் ஆயின், நன்று மன் தில்ல,**
**பனிவார் கண்ணேம் ஆகி, இனிஅது**
**நமக்கே எவ்வம் ஆகின்று,**
**அனைத்தால் - தோழி ! – நம் தொல்வினைப் பயனே!”**

**(அகம்: 243, 7-15)**

காரொடு வந்த கூதிர் தலைவனைப் பிரிந்த தலைவிக்கு எமனாகத் தெரிகின்றது. காரோடு வாடைக்காற்றும் கலந்து வீசுவதால் கூதிர்ப்பருவம் கூற்றுவன் போல வந்ததாகக் தலைவி கூறுகின்றாள். மலைகளும், காடுகளும் மழை பெய்தலால் குளிர்ச்சி அடைந்து வளமையால் மலர்கள் பூத்துக் குலுங்கின. அவை மகிழ்ச்சியாக இருப்பது போல் தலைவனைப் பிரிந்திருக்கும் என்னால் மகிழ்ச்சியாக இருக்க முடியவில்லை. இரவு, மழை, வாடைக்காற்று அனைத்தும் எனக்கு மிகுந்த துன்பம் தருவதாகவே உள்ளது. மழை வரவு – மரம், விலங்கு, பறவைகளுக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. தலைவனைப் பிரிந்திருக்கும் எனக்கு மிகுந்த வேதனையைத் தருகின்றது. தலைவி துன்பப் புலம்பல் புலம்புகின்றாள். பிரிவு ஆற்றாமையின் இறுதிநிலைக்குத் தள்ளப்பட்டாள் தலைவி. ஆற்றியிருக்கும் படிக் கூறும் தோழியிடம் இனி ஆற்றேன். அவன் குறித்துச் சென்ற பருவமும் வந்துவிட்டது. நம்மை விட்டு நீங்காத நமது பழைய தீவினைப் பயனால் வாடைக் காற்றானது நீர் சொரியும் கண்களையுடைய எமக்கே துன்பம் தருவதாக அமைந்துவிட்டது. இதோ அவரையின் அழகிய மலர்கள் உதிர்ந்தன. வளைந்த துளை உடைய சிவந்த பவளம் போன்று இண்டஞ்செடி பூத்தது. மாலைக்காலத்து மலரும் பகன்றை மழைத்துளியால் ஊரின் அருகே அழகாக மலர்ந்து கிடக்கின்றது. மழையின் நீர் வரத்து நின்று இப்பொழுது இரக்கமற்ற வாடைக்காற்றும் வந்துவிட்டது. அந்த வாடைக்காற்றானது தலைவனிடத்தே விரைந்து சென்று ‘நீ வந்து நெடுங்காலம் ஆயிற்று’ என்று கூறினால் நல்லது. ஆதலால் நான் துன்பப்படுவது உறுதி எனக் குறிப்பால் உணர்த்துகின்றாள். காருடன் கூடிய கூதிர்காலத்தில் தலைவன் தலைவியோடு சேர்ந்திருப்பதே சிறப்பும், துன்பம் இல்லாமையும் ஆகும் என்பதற்கு இப்பாடல் ஒரு சிறந்த

எடுத்துக்காட்டாகும். தலைவன் வாழுமிடத்திற்குச் சென்று அவரையும் வருத்துமானால், அதற்கு ஆற்றாது விரைந்து வருவார். அதுமட்டுமன்றி வாடைக்காற்று தலைவனிடம் தூது சென்று அவரைப் பிரிந்து வாழும் நம் துன்ப நிலையினை எடுத்துக் கூறி அவர் நிலையை அறிந்து வந்தும், நம்மிடம் கூறுமாயினும் அதுவும் நல்லதே எனத் தலைவி நினைக்கின்றாள். நமக்கும் மட்டும்தான் துன்பம் தருமா? இது நாம் செய்த தீவினைப் பயனால் நிகழ்ந்துவிட்டதா? என்று மனவேதனை அடையும் தலைவியாக இருக்கின்றாள். இங்கு பிரிவு என்பது தலைவிக்குத்தான் துன்பந் தருவதாக உள்ளது. “வினையே ஆடவர்க்கு உயிரே” என்று தலைவன் தன் கடமை தவறாது இருக்கும் நிலையினைத் தலைவி மூலம் இப்பாடல் எடுத்துரைக்கின்றது. “நமக்கே எவ்வம் ஆகின்ற” நமக்குத்தான் துன்பம் தருகின்றது என்று கூறும் கூற்றின் மூலம் உணரலாம்.

**அறன் இன்று அலைக்கும் ஆனா வாடை**

‘ஒத்த அன்புடையவராய் உணர்ந்து ஒன்றுபட்டு வாழும் தலைவனும் தலைவியும் பிரிவின்போது உள்ளம் நெகிழ்ந்து துன்புறுதல் இயற்கை. இவர்கள் வாழாமையால் ‘உள்ளப் பிரிதல்’ இவர்களின் வாழ்வில் மிகுதியாகும். அறிவுடையவரே ஆயினும் இல் வாழ்க்கையில் அந்த அறிவைக் கொள்ள கொடுத்து அன்பையே பெருக்கி வாழ்வதுதான் காதலர் வாழ்வு. இத்தகைய வாழ்வில் பிரிவு நேரும்போது அறிவு அரண் செய்ய வருவதில்லை. பிரிவு என எண்ணவும் நடுக்கம், பேசவும் நடுக்கம். இவ்வாறு நடுங்கிக் கலங்கிப் பிரியும் போது சொல்லொணத் துயரம், பிரிந்த பின் சாதல் போன்ற துன்பம். இவ்வாறு இவர்களின்

வாழ்வில் உள்ளத்து உணர்வே ஆட்சி செய்கிறது."[8] எனும் கருத்து கருதத்தக்கது.

மேற்குறித்தது போலவே கூதிர்காலத்தில் தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலையும் உள்ளது. தலைவன் பொருளீட்டுவதற்காக கடலின் நீர்ப் பரப்பைக் கிழித்துச் செல்லும் நாவாயில் சென்றுள்ளான். காற்று மிக்கு வீசுகின்றது. இரவு பகலாக ஓரிடத்திலும் நிலைத்து நிற்காது அசைந்து கொண்டிருக்கின்றது. பொருளீட்டும் முயற்சியின் பொருட்டு நம் தலைவன் கடல்கடந்து சென்றுள்ளான். பிரிவோடு சேர்ந்து சிறிதும் அறமில்லாமல் நம்மை வருத்தும்படியாக அன்பில்லாது வாடைக்காற்று வீசுகின்றது. அக்காற்றானது நம்மை வருத்தியது மட்டுமல்லாது மருத நிலத்தில் உள்ள கருவிளை, பகன்றை மலர்கள், பலாக்காய் போன்ற பாகற்கொடிகள் அசையுமாறு வீசுகின்றது. மரம், செடி, கொடி என்று எதையும் விட்டு வைக்காது சிறிதும் அறமில்லாது, அன்பில்லாது வீசும் வாடைக்காற்று. நாம் படும் துன்பத்தைத் தலைவனிடம் போய்ச்சொல்வதற்கும் யாருமில்லை. அப்படி சொல்பவர்கள் இருந்திருந்தால், நாம் படும் துன்பம் நீங்குமாறு உடனே நம் தலைவர் விரைந்து வந்திருப்பார். யாரும் இல்லையே எனப் புலம்புகின்றாள். அன்பில்லா வாடை x அன்பான தலைவன். தலைவன் மீது மிகுந்த நம்பிக்கை வைத்திருக்கும் தலைவி, பிரிவென்னும் துன்பத்திற்கு வாடைக்காற்றைக் குறை கூறுகின்றாள். நம்பிக்கைப் புலம்பல் என்பது தலைவன் மீது கொண்ட அன்பு. துன்பப் புலம்பல் என்பது வாடைக்காற்று மீது கொண்டு வெறுப்பு. "கடிமனை மாடத்துக் கங்குல் வீச" திருந்து இழை நெகிழ்ந்துவிட்டது. எனது பேரழகும் அழிந்து போயிற்று. இவையெல்லாம் நிகழக் காரணம் தலைவன் பிரிவு இல்லை. வாடைக்காற்று வீசியதால் வந்த வினை என்று வாடைக்காற்றைப் பழித்துப் பேசும் தலைவியின் மனநிலை வேதனைக்குரியதாகும். இதனை

**"--------------------------------- தண்பணைப்**

**பொருபுனல் வைப்பின் நம் ஊர் ஆங்கண்,**

**கருவிளை முரணிய தண்புதல் பகன்றை**

**பெருவளம் மலர அல்லி தீண்டி,**

**பலவுக் காய் புறத்த பசும்பழுப் பாகல்**

**கூதள மூதிலைக் கொடி நீரைத் தூங்க,**

**அறன் இன்று அலைக்கும் ஆனாவாடை,**

**கடிமனை மாடத்துக் கங்குல் வீச,**

**'திருந்து இழை நெகிழ்ந்து பெருங்கவின்சாய,**

**நிரைவளை ஊருந் தோள்' என,**

**உரையொடு செல்லும் அன்பினர்ப் பெறினே."**

**(அகம்: 255, 9-19)**

எனும் மதுரை மருதன் இளநாகனார் பாடல் வழி அறியலாம்.

"பிரிந்து வருந்த நேரும் போது தலைவனைவிட மிக நைந்து துயருறுகின்றவள் தலைவியே ஆவாள். காரணம் தலைவனுடைய உள்ளத்தைக் கவர்வதற்கு வெளியுலகம் வந்து துணை செய்கிறது. வெளியிடத்தில் தலைவன் இருந்த போதிலும், பொருள் முயற்சியில் ஈடுபட்டு ஒருவாறு கவலையைக் குறைத்துக் கொள்கிறான் தலைவன். பிரிவாற்றாமை அவனையும் வருத்திய போதிலும் அதற்கு மாற்றம் இருந்து வருகிறது. ஆனால் பழைய இடத்திலே, பழைய சூழலிலேயே வாழும் தலைவியின் துயரத்தை மாற்றுவதற்கு மருந்து ஒன்றுமே இல்லை."[9] பிரிவு என்பது சாதலுக்கு நிகரான துன்பமாக இருப்பது தலைவியின் வாழ்வில்தான். பிரிந்த காதலர் வராமையால் வாடை வீசும் கூதிர்காலத்து மாலைப்பொழுதானது தனித்து வருந்தி ஒழியுமாறு வந்து சென்றது. இனி நான் எவ்வாறு ஆற்றியிருப்பேன்' என தலைவி வருந்திக் கூறுகின்றாள்.

போர்க்காரணமாகப் பிரிந்து சென்ற தலைவன் பாசறையில் இருக்கின்றான். அவன் கூறிச் சென்ற பருவம் கடந்தும் அவன் வரவில்லை. ஆற்றாது இருக்கும் தலைவியை ஆற்றி இருக்குமாறு தோழி கூற அதற்கு தலைவி பகைவர்களுக்கு அச்சம் உண்டாகும்படி பாசறையில் மிக்க சினத்துடன் இருக்கும் மன்னனுடன் உள்ளவராகிய நம் தலைவர் **“பேர் இசை முழக்கமொடு சிறந்துநனி மயங்கி கூதிர் நின்றன்றால், பொழுதே!”** இடியுடன் கூடிய மழை பொழிந்து தெருக்கள் தோறும் நீர் பெருகி ஓடுகின்றது. இவ்வாறாகக் கூதிர்ப்பருவம் வந்தது. மழைக்காலம் முடிந்து கூதிர்காலம் வந்ததால் தெருக்கள் மழை நீரால் குளிர்ச்சி அடைந்து விட்டன. தலைவன் சொல்லிச் சென்ற கார்காலம் போய் கூதிர்காலம் வந்துவிட்டது. இன்னும் தலைவன் வரவில்லை. அரசன் போர் செய்வதில் கடமை தவறாது இருப்பதைப் போல நம் தலைவனும் சொன்ன சொல் தவறாதவனாக இருக்கவில்லையே. இக்கூதிர்ப்பருவத்தில் நாம் அடையும் துன்பத்தைத் தலைவன் அறியவில்லையே. கார்ப்பருவ வரவு தலைவன் வருவான் எனும் மகிழ்ச்சியைத் தருகின்றது. வரவில்லை. கூதிர்கால வரவு துன்பத்துடன் தலைவன் மீது கொண்ட நம்பிக்கையை இழக்கச் செய்கின்றது. தலைவன் நம் நிலை அறியார் ஆயினும், தம் நிலை அறிந்தனர் கொல்லோ” நாம் இறந்துவிட்டால் பின் நாம் அடையும் துன்பநிலை குறித்து அவர் நினைத்துப் பார்க்கவில்லையே என்று வாழ்வின் இறுதி நிலைக்குச் சென்று விட்டாள். தலைவன் அன்பு மீது உறுதிபட இருந்தவள், இறுதி நிலைக்குத் தள்ளப்பட்டாள், அவரைப் பற்றியாவது சிந்தித்துப் பார்த்திருந்தால், நம் நிலைமை புரிந்திருக்கும். அவரையே நினைக்காத போது நம்மை எப்படி நினைப்பார், அவ்வாறு நம்மை நினைக்காத தலைவனுக்காக காத்திருப்பதைவிட இறந்துபடுவதே மேல் என நினைத்து வருந்துகின்ற தலைவியைக் காணமுடிகின்றது.

வாடைக்காற்று, மாலைப்பொழுது, இருள்மிக்க இரவு இவற்றை விட தலைவிக்கு வேறென்ன கொடுமை வேண்டும். இதனை,

**"பேர் இசை முழக்கமொடு சிறந்துநனி மயங்கி**
**கூதிர் நின்றன்றால், பொழுதே!" காதலர்**
**நம்நிலை அறியார் ஆயினும், தம்நிலை**
**அறிந்தனர் கொல்லோ தாமே"**

**(அகம்: 264, 9-12)**

எனும் உம்பற்காட்டு இளங்கண்ணனார் பாடல் வழி அறிய முடிகின்றது.

**தலைவன் நெஞ்சிற்குக் கூறுதல்**

தலைவன் பிரிவால் இல்லத்தில் தலைவி துன்புற்றிருக்க அவளைத் தோழி ஆற்றுவிக்கின்றாள் ஆயின் வினைமேற் சென்று இருக்கும் தலைவன் தானாகப் புலம்புகின்றான்.

தன்னார்வம் அழிந்து பிறர் பொருட்டு எண்ணும் எண்ணமே காதலாகும். அத்தகு காதல் தூயது, பற்று நீங்கப் பெற்றது. "ஆணும் பெண்ணும் கொள்ளும் காதல் ஒருவர் தம்மை மற்றவரில் கலக்கும் நிலையினது என்பர்,"[10]

கூதிர்காலத்தில் தலைவனும் பிரிவுத் துன்பத்தை அனுபவித்திருக்கிறான். உடலும் மனமும் சேர்ந்த போராட்டம் தலைவனுக்கு, அங்கே பொருளுக்கு இடமில்லை. அதாவது பிரிவின்போது மனத்தில் உணர்வுகள் தோன்றுகின்றன. உணர்வுகளுக்கு இடையே போராட்டங்கள் நிகழ்கின்றன.

இரவு நேரத்தில் தலைவன் தலைவியைச் சந்திப்பதற்காக வருகிறான். இரவில் சந்திக்கும் இடத்திற்கு தலைவியும், தோழியும் வராது போகவே வாடைக்காலத்தில் தலைவன் உடல் மெலிந்து உள்ளம்

வருந்தி தன் நெஞ்சோடு புலம்புவதாக இப்பாடல் அமைந்துள்ளது. அவ்வாறு உடல் வருத்தும் வாடைக்காற்றை எண்ணி தலைவன் புலம்புகின்றான். இதனை,

**“தண் மழை தவழும் தாழ்நீர் நனந்தலைக்**
**கடுங்காற்று எடுக்கும் நெடும்பெருங் குன்றத்து**
**மாய இருள் அளை மாய்கல் போல,**
**மாய் கதில் - வாழிய, நெஞ்சே!”**

**(அகம்: 258: 5-8)**

எனும் பரணர் பாடிய பாடல் வழி அறியலாம். அது மட்டுமல்ல தன் நெஞ்சைப் பார்த்து, குகையில் மறைந்து கிடக்கும் ஒளியிழந்த பொன்போல நீயும் ஒளியிழந்து போவாய் என்று தன் மனதைப் பார்த்துச் சொல்வதன் மூலம், உடல் மெலிவும், ஊரார் தூற்றலும், தலைவனுக்கும் உண்டு என்பதை அறிமுடிகின்றது. வாடைக்காற்றைக் கூறும்போது “தீருங்காற்று” அதாவது கடுமையான காற்று என்று தலைவன் கூறுகின்றான். அந்த அளவிற்கு வாடைக்காற்று தலைவனுக்கு துன்பத்தைத் தருவதை அறியமுடிகின்றது.

**தலைவன் நெஞ்சிற்குக் கூறிப் பிரிவு விலக்கல்**

பிரிய விரும்பும் தலைவனின் நெஞ்சிற்குப் பொருளால் தோன்றும் பயன்கள் நினைவுக்கு வருகின்றன. பிரிய மறுக்கும் தலைவனுக்குப் பொருளின் நிலையாமை மனத்துள் படுகிறது. தனது விருப்புடன் முரண்பட்ட நெஞ்சோடு கலந்துரையாடித் தலைவன் பிரிவு விலக்குகின்றான்.

பிரிவினை நன்று எனக் கருதிய நெஞ்சிற்குத் தலைவி தரும் இன்பத்தை எடுத்துரைக்கின்றான். தலைவியைப் பிரிய இயலாத நிலையை விளக்கியும் பொருளின் நிலையாமையைச் சுட்டியும் செலவு

விலக்க முயற்சிக்கின்றான். தலைவியைப் பொருளாக மதிக்குமாறும், அவளை நினைந்து மகிழுமாறும் நெஞ்சிற்கு அறிவுரையும் கூறுகின்றான். கூதிர்காலத்து வாடைக்காற்றானது கொடுமை தரக்கூடியது. தலைவிக்குத் துன்பத்தை விளைவிப்பது. மழையொடு கூடிய ஊதைக்காற்று தலைவியின் உயிரை எடுக்கக்கூடியது. ஆதலால் அவளைப் பிரிதல் நல்லதல்ல என்பதை தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

தான் பொருள்வயிற் பிரிகின்றமையை உணர்ந்து தலைவி வருந்துதலை அறிந்த தலைவன், இத்தகையவளை விட்டுப் பிரிவேன் என்று என் நெஞ்சு கருதுமாயின் அது மிகக் கொடியதே' எனக் கூறிக் கொள்கிறான். இதனை

**------------------------------------ பனி இருள்**
**பெருங்கலி வானம் தலைஇய**
**இருங்குளிர் வாடையொடு வருந்துவள்''**
**(அகம்: 337, 19-21)**

என்கிறான் தலைவன்.

முன்னொரு காலத்தில் பொருள் ஈட்டப் போய்த் தலைவியைப் பிரிந்து வாழ்வதற்கு தலைவனாலும் முடியவில்லை. ஆற்றாமையால் வருந்தி மீண்டு வந்த நெஞ்சம், மீண்டும் தற்பொழுது பொருள் ஈட்ட வேண்டும் என்று ஊக்குவிக்கின்றது. அதனை உணர்ந்த தலைவன் தன் நெஞ்சை இடித்துக் கூறுகின்றான். வாடையால் ஏற்பட்ட பிரிவு தலைவியை மட்டும் வருத்தவில்லை. தலைவனையும் வருந்தச் செய்கின்றது என்பதற்கு இப்பாடல் ஓர் எடுத்துக்காட்டாகும்.

கொடுமையான பாலை வழியில் பலமுறை தூது செல்லும் பார்ப்பான் ஒருவன், கையில் வைத்திருக்கும் வெண்ணிற ஓலைச் சுருளுடன் செல்கின்றான். அப்பாலை வழியில் இருக்கும் ஆறலைக்

கள்வர்கள் பார்ப்பனனின் கையில் இருக்கும் ஓலையை பொன் என்று நினைத்து அவனை அவ்விடத்திலேயே கொன்று போட்டனர். வறுமை காரணமாக உண்ணாது, கிழிந்த ஆடையினையும், குருதி படிந்த அம்பினை உடைய அக்கள்வர்கள் பார்ப்பனனின் கையிலிருப்பது பொன் இல்லை எனத் தெரிந்ததும், நம் செயல் பயனற்றுப் போய்விட்டதே என்ற மன வருத்தத்துடன் அவ்விடத்தை விட்டு அகன்று போயினர். ஓர் ஆண்நரி, அப்பார்ப்பனனின் சரிந்துகிடக்கும் குருதியுடன் கூடிய குடலைக் கடித்துத் தின்ற வண்ணம் கள்ளிச் செடியின் நிழலில் ஊளையிட்டுக் கொண்டு அவைகள் தங்கியிருக்கும் கொடுமையான பாலை வழியாகும். அத்தகுத் துன்பம் தரும் கொடுமையான செயலைவிடத் தலைவியின் பிரிவுத்துன்பம் என்னை வருத்துகின்றது. மழை இல்லாத கொடுமையான பாதை அதைவிட வாடைக்காற்று நம்மைப் பிரிந்திருக்கும் தலைவிக்குத் துன்பம் தருகின்றது. தலைவிக்காக வருத்தப்படும் தலைவனைக் காணமுடிகின்றது. பார்ப்பனனைத் தவறாகக் கொலை செய்தது போன்று, பிரிவினால் என தலைவியும் தவறான முடிவெடுத்துவிடுவாளோ? என்ற அச்சம் தலைவனுக்கு ஏற்பட்டிருக்கலாம். கொடுமையானப் பாலை வழியைவிட தலைவியின் பிரிவு மிக்க வருத்த மளிக்கின்றது. குளிர்தரும் வாடை, பிரிந்தவருக்கு கொலையைவிடக் கொடுமையானதாக உணர்கின்றனர். இக்கூற்றிலிருந்து தலைவன், தலைவி மீது கொண்ட அன்பு புலப்படுகின்றது. அதன்மூலம் அவனுடைய உயர்ந்த நல்ல குணத்தைக் காண முடிகின்றது.

**புலம்போடு வந்த பொழுது கொள் வாடை**

பொருள்காரணமாகப் பிரிய நினைத்த தலைவனைப் பார்த்துத் தோழி கேட்கின்றாள்.

பாண்டிய மன்னனின் படைத்தலைவன் பண்ணி என்பான் எப்பொழுதும் இரவலர்க்கு யானைகளை இல்லை என்று சொல்லாது

வழங்கும் வள்ளல் தன்மை உடையவன். அவன் செய்த களவேள்வியினைப் போல நீர் தேடி வரும் பொருள் பெரிது கிடையாது. இவளுக்கு நீவிர் துணையாக இல்லாமல் பிரிந்து வாழ்வது அறமன்று. நீவிர் தேடி வரும் பொருளைவிட அவளுடைய அன்பே மிகப் பெரியது. இடையறாது யானையைத் தரும் படைத்தலைவனைப் போன்று, இடையறாது நீ அன்பை வழங்கி தலைவியோடு இல்லறத்தில் இருப்பதே சிறந்த அறமாகும். இதனை,

**“----------------------------------- வள வயல்,**
**அழல் நுதி அன்ன தோகை ஈன்ற**
**கழனி நெல் ஈன் கவைமுதல் அலங்கல்**
**நிரம்பு அகன் செறுவில் வரம்பு அணையாத் துயல்வர,**
**புலம்போடு வந்த பொழுது கொள் வாடை,**
**இலங்கு பூங் கரும்பின் ஏர் கழை இருந்த**
**வெண்குருகு நரல, வீசும்**
**நுண் பல் துவலைய தண் பனி நாளே!”**

**(அகம்: 13, 17-24)**

தனிமைத் துன்பம் தரும் பனிப்பருவத்து வாடைக்காற்று, நுண்ணிய துளிகளைக் கொண்ட குளிர்ச்சி உடைய பனிக்காலத்தில் அழகிய பூக்களை உடைய கரும்பின் ஓங்கி உயர்ந்த தண்டின் மீது அமர்ந்திருக்கும் வெண்குருகு துன்புற்று ஒலிக்கும் படியாக வாடைக்காற்று வீசுகின்றது. கரும்பு போன்று இருக்கும் தலைவிக்கு வெண்குருகு போன்று பனிக்காலத்து தலைவன் பிரிவு, மிகுந்த வேதனையைத் தருகின்றது. இவளைப் பிரிந்து வேற்று நாட்டில் தங்குவீராயின். “மாசு இல் தூமடி விரிந்த சேக்கை, கவவு இன்புறாமைக்” கழியும் என்று கூறுகின்றாள். அவருடன் படுக்கையிடத்து நீ முயங்கிப் பெறுகின்ற இன்பம் பனிக்காலத்து வாய்க்கப் பெறாமல் போய்விடும். அவ்வாறு நீ

பிரிந்து போய் தேடுகின்ற பொருளும் அவளுக்கு ஒரு பொருட்டாக இருக்காது. பொருள் தேடச் செல், ஆனால் அப்பொருள் தலைவிக்கு பிரிவு நோயைத் தராமல் இருப்பது சிறந்தது.

**தளிமழை பொழிந்த தண்வரல் வாடை**

தலைவனின் பிரிவில் ஆற்றாதிருக்கும் தலைவிக்குப் பலவாறு ஆறுதல் கூறுகின்றவளாகத் தோழி அடைவாள். தலைவனுடன் களவொழுக்கம் கொண்டு அதனை மீண்டுபெற விரும்பும் ஆசை உணர்விற்கும், அச்ச மனநிலையால் தன் ஆசைகளை அடக்கி நிற்கும் ஏக்க உணர்விற்கும் இடைநின்று தலைவி கொள்ளும் தவிப்பைத் தவிர்ப்பது தோழியின் நோக்கமாகும்."[11] என்பர். அக்கடமையினின்றும் நீங்காது தோழி தலைவியை ஆற்றுவிக்கின்றாள்.

தலைவன் பிரிந்திருக்கும் காலத்தே ஆற்றாமை மிக்க தலைவியைத் தோழி ஆற்றுவிக்கின்றாள். வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகின்ற அளவிற்கு நீங்காமல் மழை பொழிகின்றது. மழையொடு சேர்ந்து வாடைக்காற்றும் வீசுகின்றது. இவ்வாடைக்காற்று கூதிர்காலத்து மிக்கு வீசுவதால் உடலுக்கு வருத்தத்தைக் கொடுக்கின்றது. பல அடுக்கு மெத்தையின் மேல் இணைந்திருக்கும் காதலர், வருந்தும் படியாக வாடைக்காற்றானது வீசுகின்றது. பனைமரத்தில் தனித்திருக்கும் அன்றில் பறவை தன் துணையை அழைக்கும் குரலைக் கேட்கும் போதெல்லாம் என் உள்ளத்தில் பற்றி எரியும் காதல், தீயை ஊதி மேலும் எரியச் செய்வது போல இருக்கின்றது. அருள் இல்லாத என் காதலர் பொருளுக்காகப் பிரிந்து சென்றிருக்கும்போது இந்த நிலைமையில் "பொறுத்திரு" என்று கூறினால் எப்படி வருத்தம் இல்லாமல் இருக்க முடியும்? என்று தலைவி கேட்கும் போது, குளிர்ந்த பனியை உடைய பருவத்தில் நம்மை விட்டுப் பிரிந்துறைவாரோ? இல்லை. அவர் விரைவில் வருவார் எனக் கூறுகின்றாள் தோழி. இதனை,

**“பகலினும் அகலா தாகி, யாமம்,**
**தவல் இல் நீத்தமொடு ஐயெனக் கழிய**
**தளிமழை பொழிந்த தண்வரல் வாடையொடு**
**பனி மீக் கூரும் பைதல் பானாள்**
**பல்படை நிவந்த வறுமை இல் சேக்கை,**
**பருகு வன்ன காதலொடு திருகி,**
**மெய்புகு வன்ன கைகவர் முயக்கத்து,**
**ஓர்உயிர் மாக்களும் புலம்புவர் மாதோ**
**அருளி லாளர் பொருள் வயின் அகல,**
**எவ்வம் தாங்கிய இடும்பை நெஞ்சத்து**
**யான் எவன் உளெனோ – தோழி!.”**

**(அகம்: 305, 1-11)**

எனும் பாடல் வழி அறியலாம்.

அன்றில் பறவைகளில் ஒன்று பிரிந்தால் மற்றொன்று உயிரோடு வாழாது உடனே இறந்து படும். அதுபோல உன் தலைவியை பிரிந்து சென்றாயானால் அவள் இறந்துபடுவது உறுதி. தலைவிக்கு கார், கூதிர், பனி என வருடத்தில் பாதி நாள் பிரிவின் ஏக்கத்திலே கழிந்து விடுகின்றது. பொருள் ஈட்டி வரும் பொருட்டுத் தலைவன் பிரிந்து சென்றால் தலைவி ஆற்றாது இறந்துபடுவாள் என அஞ்சும் தோழி, தலைவியை தன்னைக் காத்துக் கொள்ளுமாறும், ஆற்றிருக்க வேண்டும் என்றும் பக்குவமாக எடுத்துக்கூறுகின்ற தன்மையைக் காணமுடிகின்றது.

**பனிக்காலம்**

பெரும்பொழுது ஆறில் மூன்றாவதாக இடம்பெறும் பருவம் முன்பனிக்காலமாகும். இப்பனிக்காலம் இலக்கியத்தில் “அச்சிரம்” என்னும் சொல்லாடல் மூலம் பொருள்கொண்டது. இப்பருவம் மார்கழி, தை

உள்ளிட்ட இரண்டு மாதங்களை உள்ளடக்கியது. இப்பருவம் மழைபெய்து ஓய்ந்து, மழையும் காற்றும் வாடையாகி, பின் சிறுசிறு துளியோடு குளிர்ந்து பரவும் பருவம் ஆகும். மதியம் பன்னிரெண்டு மணி நேரத்திலிருந்து நடுச்சாமம் பன்னிரெண்டு மணிவரைக் குளிரும் பருவம் முன்பனிக்காலம் ஆகும். "சாயங்காலத்திலிருந்து நள்ளிரவு வரையில் பனி துளிக்கின்ற பருவம். மார்கழி, தை மாதங்களில் இரவின் முற்பகுதியில் பனி மிகுந்திருக்கும்; இரவு ஒன்பது அல்லது பத்து மணிக்கு மேல் புகை சூழ்ந்திருப்பது போன்று காணப்படும். புள்ளி புள்ளியாய்ச் சிறு பனித் திவலைகள் விழுந்து பூக்களை நிரப்பிக் கொண்டிருப்பதை இப்பருவத்தில் காணலாம்"[12] என்பர்.

முன்பனிக் காலம் என்பது பனிக்காலத்தின் முற்பகுதியாகும். இது குறிஞ்சித் திணைக்குரியதாகக் கூறப்படுகின்றது. இதனைத் தொல்காப்பியர்,

**"பனி எதிர் பருவமும் உரித்தென மொழிப"**

**(தொல்.பொருள்.8)**

என்பர். அதாவது முன்பனிக்காலமும் குறிஞ்சித் திணைக்குரியது எனக் கூறுகின்றார். இக்காலத்தில் பிரிந்திருப்போர் பெருந்துன்பம் அடைவர் என்பதைச் சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன. முன்பனிக்காலத்தைச் சங்க இலக்கியத்தில் 'அரும்பனி அச்சிரம்', 'கடும்பனி அச்சிரம்', 'தண்பனி அச்சிரம்', எனப் பலவாறு பாடியுள்ளனர்.

பின்பனிக்காலம் மாசி, பங்குனி ஆகிய மாதங்களை உள்ளடக்கிய காலம் ஆகும். ஆனால் சங்க இலக்கியப் பதிவுகளில் முன்பனி, பின்பனி ஆகிய காலங்களுக்கிடையில் வேறுபாடில்லை. பாலைத்திணைக்குரியதாக இக்காலம் பேசப்படுகிறது. **"மாசிப்பனி மச்சு வீடு வரை குளிரும்"** என்னும் பழமொழி உண்டு. இத்தகைய

கொடுமையான குளிர் தரும் வாடை பற்றிச் சங்க காலப் புலவர்கள் பாடியுள்ளனர்.

தொல்காப்பியர் பின்பனிப் பருவத்தை பாலைத் திணைக்குரியதாகக் கூறுகிறார்.

**“பின்பனி தானும் உரித்தென மொழிப”**

**(தொல்.பொருள்.12)**

“பின்பனிக்கு நண்பகல் துன்பஞ் செய்யா தென்ப தூஉம் அதற்குச் சிறுபொழுது வரைவில் என்பதூஉம் கூற்று”[13] என்பார். நச்சினார்க்கினியர். “வேனிற்பிரிவும் பின்பனிப் பிரிவும் பிரிதல் நிமித்தங்களாக அமையாது பிரிந்து நின்ற பாலையாகவே கூறப்படினும் அது பாலைக்குரியதேயாகும் எனப் புத்துரை கூறுவார் நாவலர் பாரதியார். மேலும் ‘முதுவேனியிற் பிரிந்தார் கார்காலத்து மீண்டு வந்து கூடலும், பின்பனிக்காலம் பிரிந்தார் இளவேனிலில் கூடலும் மரபு’ என்றும் விளக்குவார் தொல்காப்பியர். இருவகைப் பிரிவு என்று கூறுவது வேனிற் காலத்தில் பிரிவதையும், பின்பனிக் காலத்தில் பிரிவதையும் கூறியுள்ளார் என்பவர் நாவலர் பாரதியார் எனச் சாம்பசிவனார் கூறுவார்”.[14]

பின்பனிப்பருவத்தைப் பாலைக்குரியதாகக் கொள்ளவேண்டும். இப்பனிப்பருவத்து, பனியும் வாடைக்காற்றும் வீசுவதுண்டு. இப்பருவம் பற்றிப் பலவாறு பாடியுள்ளனர்.

“பனிக்காலம் என்பது மொழிந்தடங்கிய வெண்மேகம், கடையப்பெற்ற பஞ்சு போன்று சிறு துளியினையும் தூவாதொழிகின்றது. கரும்பின் பூ, கோடைகாலத்துப் பூளைப் பூவினைப் போல வாடைக்காற்றால் அசைகின்றது: நீலநிறக் கிடுகில் பதித்த கண்ணாடி போலப் பசிய இலைகள் செறிந்த புதல் தொறும் பகன்றை மலர்கிறது:

கோழிலை அவரைக் கொழு முகை அவிழ்கின்றது: புலந்தொறும் புள்ளினம் கல்லென ஒலிக்கின்றது. பிரிந்துரை மகளிர் அணிதுறந்து நடுங்குகின்றனர் என்பார்”[15] பனிக்காலத்து நிகழ்வால் பயனற்ற நிலையில் வாழ்க்கை வாழ்வதாகத் தலைவி வேதனை அடைகின்றாள்.

சங்கப் அகப்பாடல்களில் தலைவன், தலைவி இருவருக்கும் இடையேயான பிரிவு பல நிலைகளில் கூறப்படும். “களவு நிலையில் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் தலைவன், தலைவி இருவருக்கும் வரைந்து கொள்ளுதற்கிடையே பிரிவு நிகழ்தலும், கற்பு நிலையில் பொருள்வினை, போர்வினை மற்றும் பரத்தையர் கூட்டம் தொடர்பாகப் பிரிவு நிகழ்தலும் உண்டு. இப்பிரிவுகள் நிகழ்கின்ற காலத்துத் தலைவி பிரிவுத் துன்பத்தால் பெரும்பான்மையும் வருந்துவாளாகக் காட்டப்படுவாள். சில பிரிவு நிலையில் தலைவனுக்கும் பிரிவுத்துன்பம் உண்டு.”[16]

**தலைவியின் ஆற்றாமை**

“இன்ப வாழ்க்கை மேற்கொண்ட தலைமக்கள் கூடுதலும், இடையிடையே கல்வி, பொருள், காவல் முதலியன கருதித் தலைவன் பிரிதலும், பிரிந்த வழித் துன்பம் கொள்ளுதலும், தலைவன் குறித்த காலம் வரும் வரை தலைவி ஆற்றியிருத்தலும் அவ்வாறு ஆற்றியிராது வாய்விட்டுப் புலம்பலும், தலைவன் பரத்தையிற் பிரிந்தான் எனக் கொண்டு அவனொடு புலத்தலும் ஆகிய நிகழ்ச்சிகள் அவர்கள் வாழ்க்கையிடையே நிகழ்வனவாகும் என்பர்.”[17]

**கோடைப் பூளையின் வாடை**

களவுக் காலத்தில் தலைவன் பொருளை ஈட்டுவதற்காகத் தலைவியைப் பிரிய நினைக்கின்றான். தலைவன் பிரிதலை அறிந்த தலைவி தோழியை நோக்கிப் பிரிவுச் செய்தியைக் கூறுகின்றாள். மழை பெய்து முடிந்து மழைத்துளிகள் தூவுதலை விட்டொழிந்து பஞ்சு போன்று

துளித் துளியாக விழும் பனிக்காலம் தொடங்கிவிட்டது. பொருள் காரணமாகப் பிரிய நினைக்கும் தலைவனிடம் “எத்தகைய பொருளைப் பெறுவதாயின் என்னை விட்டுப் பிரியாதீர் என்று தலைவனிடம் கூறுமாறு எனக்குத் துணையாக உள்ள உன்னிடம் (தோழி) நான் கூறினேன். நீயும் கூறியிருப்பாய். அவ்வாறு நீ கூறிய பின்பும் நம்மீது அருள் இல்லாது நம்மைப் பிரிந்து செல்வாரானால் அவரால் நுகரப்பட்ட என் பெண்மை நலத்தினை காமநோய் மேலும் வருத்தச் செய்யும். அதனால் என் மேனி தானே உடைந்து அழியும் என்பதை,

**-------------------------------------------அகல்வயல்**
**நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்**
**கோடைப் பூளையின் வாடையொடு துயல்வா,**
**பாசிலை பொதுளிய புதல்தொறும் பகன்றை**
**நீர் உண் பச்சை நிறம் மறைத்து அடைச்சிய**
**தோல்எறி பாண்டிலின் வாலிய மலர,**
**கோழிலை அவரைக் கொழுமுகை அவிழ,**
**ஊழ் உறு தோன்றி ஒண்பூத் தளைவிட,**
**புலம் தொறும் குருகினம் நரல, கல்லென**
**அகன்று உறை மகளிர் அனிதுறந்து நடுங்க,**
**அற்சிரம் வந்தன்று, அமைந்தன்று இது என,’’**
**எப்பொருள் பெறினும், பிரியன்மினோ’ எனச்**
**செப்புவல் வாழியோ, துணையுடை யீர்க்கே,**
**நல்காக் காதலர் - நலன்உண்டு துறந்த**
**பாழ்படு மேனி நோக்கி, நோய்பொர,**
**இணர்இறுபு உடையும் நெஞ்சமொடு, புணர்வுவேட்டு,**
**எயிறுதீப் பிறப்பத் திருகி,**
**நடுங்குதும் - பிரியின்யாம் கடும்பனி உழந்தே,’’**

**(அகம்: 217: 3 -20)**

எனக் கூறுகின்றாள். அதாவது வயிலில் கரும்பினது வெண்ணிறப் பூக்கள் கோடைக்காலத்திலே பூக்கும் பூளைப் பூக்களைப் போல வாடைக்காற்றில் அசைந்தாடுகின்றன. பசுமை நிற பகன்றை இலைகள் புதர்கள் தோறும் வட்டக்கண்ணாடி போல வெண்மை நிறமாக மலர்ந்தது. அவரையின் அரும்புகள் அலர்ந்தன. தோன்றியின் பேரரும்புகள் மலர்ந்து விரிந்தன. காடுகள் தோறும் பறவைக் கூட்டம் ஒலி செய்விக்கின்றன. ஆடவரைப் பிரிந்து வாழும் பெண்கள் தம் அழகு நலம் இழந்து நடுக்கம் கொள்ளுமாறு பனிக்காலம் தொடங்கிவிட்டது. மழையால் காடுகளும் காட்டிலுள்ள தாவரங்களும், விலங்குகளும் மகிழ்வோடு இருக்கின்றன. தலைவனின் பிரிவு நோயால் நாம் மட்டும் அழகிழந்து போய் இருக்கின்றேன். அவர் புணர்தலை விரும்பி கடும்பனியால் மிகவும் வருந்திப் பற்களை நற நறவென்று தீர்பொறி பறக்கக் கடித்து நடுக்கம் கொண்டு வாழ்கின்றேன். இதைத் தவிர நம்மால் வேறு என்ன செய்ய முடியும் என்று தன் இயலாமையைச் சொல்லிப் புலம்புகின்றாள். மழைப்பொழிவு காடுகளுக்கு மகிழ்ச்சி, தலைவனின் பிரிவு தலைவிக்குத் துன்பம். பிரிவு வந்துவிடுமோ எனும் அச்சத்தில் முன்னறிவிப்பாக தலைவனிடம் கூறும்படி தலைவி தோழியிடம் கூறுகின்றாள். பாழ்படு மேனி நோய் வர, உடையும் நெஞ்சமொடு கடும்பனியால் நடுங்குவதாகக் கூறப்படுகின்றது. பிரிவினால் தனக்கு ஏற்படும் உடல் ரீதியான பாதிப்பை வெளிப்படையாகத் தோழியிடம் கூறுகின்ற தலைவியைக் காணமுடிகின்றது.

**அற்சிரப் பொழுதில் தலைவி நிலை**

‘பொருள்வயிற் பிரியும் தலைவன் தன் நெஞ்சிற்கு கூறும் கூற்றுகள் பிற அகமாந்தர் கேட்ப மொழியும் போது தன் மன நிலையை உணர்த்தும் நோக்கும், பிற சூழல்களில் காதலுக்கும், கடமைக்கும் இடைப்பட்ட தன் மனத்தடுமாற்றத்தை வெளியிடும் நோக்கம் கொண்டு

விளக்குகின்றன என்பர்"[18] பொருள் மீது கொண்ட ஆசையினால் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் நெஞ்சோடு புலம்புகின்றான். மழைபெய்து பள்ளத்தில் நீர் தெளிந்து ஓடுகிறது. வயலில் பயிற்றங்காய்கள் விரிந்த கை விரல்கள் போன்று காய்ந்திருக்கின்றன. இவ்வாறாகப் பனிப்பருவம் தலைகாட்டுகிறது. பொருளீட்டும் முயற்சியில் ஈடுபட்டு, காட்டுவழியில் வந்த நெஞ்சம் ஆண்மை உணர்வோடு செயலாற்ற விரும்புகின்றது. காமம் அதனைத் தடுக்கின்றது. இப்படி என் நெஞ்சம் கவை பட்டுக் கிடக்கிறது. இரண்டு பக்கத்திலும் நெருப்புப் பற்றி எரியும் போது நான் எந்த ஒரு முடிவுக்கும் வர முடியாதபடி நொந்து கொண்டிருக்கின்றேன். என் தலைவியோ இரங்கத்தக்கவள். உடம்புக்கும் உயிருக்கும் உள்ள உறவு போல என்னோடு நட்பு கொண்டிருப்பவள். காதல், உடலில் உயிர் வாழ்வது போன்றது. பொருளுக்காகப் பிரிதல் உடலிலிருந்து உயிர் பிரிவது போன்றது. என் நோயின் தன்மை அறியாது நீ புலம்புகின்றாய் என நெஞ்சினைக் கேட்கின்றாள். இதனை,

**‘‘-----------------------------------------கூம்பிப்**
**பற்றுவிடு விரலின் பயறுகாய் ஊழ்ப்ப,**
**அற்சிரம் நின்றன்றால், பொழுது, முற்பட**
**ஆள்வினைக்கு எழுந்த அசைவு இல் உள்ளத்து**
**ஆண்மை வாங்க, காமம் தட்ப,**
**சுவைபடு நெஞ்சம்! கண்கண் அகைய,**
**இருதலைக் கொள்ளி இடைநின்று வருத்தி,**
**ஒருதலை படா அ உறவி போன்றனம்,’’**

**(அகம்:339, 3-10)**

எனும் பாடல் வழி அறியலாம்.

குவிந்து ஒன்றோடொன்று தொடர்பற்ற விரல்கள் போன்று பயிற்றங் காய்கள் விரிந்து முதிர்ந்துவிடும்படியான பனிப்பருவம் வந்தும் தலைவன் வரவில்லை. பொருள் ஒருபுறம், தலைவி மீதுகொண்ட காதல் மறுபுறம். இருதலைக் கொள்ளியாக இருக்கும் தலைவனின் மனம் சாதல் போல் துன்பத்தைத் தரும். பிரிவு, பயிற்றங் காய்கள் விரிந்து முதிர்ந்தது போல் நம் காதலும் முதிர்ந்து(வயது)விடுமோ என நினைக்கும் தலைவன், பனிக்காலத்தில் பயிற்றங்காய்கள் பூப்பூத்து, காய்காய்த்து முதிரும் நிலைக்கு வந்துவிட்டது என்றால், பொருள் காரணமாக கால நீட்டிப்பு ஏற்படும் என்பதாம். இளமையில் துய்க்கும் இன்ப உணர்வு இன்றி முதிர்வு ஏற்பட்டுவிட்டதே என நினைக்கும் தலைவன் காதல், பொருள் என இரு உணர்வுப் போராட்டத்தால் தலைவன் தவிக்கும் தவிப்பு இப்பாடலில் பதிவு செய்யப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

**தோழி தலைவன் வரவுரைத்தல்**

வேனிற் காலம் மட்டுமல்லாது மற்றைய நான்கு பருவங்களிலும் தலைவன் தலைவியைப் பிரிந்துள்ளான். பிரிந்த தலைவன் தலைவியைக் காண வருகின்றான். கற்புக் காலத்தில் தலைவன் போர்காரணமாகவும், பொருள்காரணமாகவும் பிரிதல் உண்டு. மேற்குறித்த இரு காரணங்களுக்காகத் தலைவன் தலைவியைப் பனிக்காலத்திலும் பிரிந்திருக்கின்றான். அவ்வாறு பிரிந்து சென்ற தலைவன் வினை முடித்து வருகின்றான். அவன் வரும் செய்தியைத் தோழி தலைவியிடம் மடந்தாய் குறித்த பருவத்து வரவில்லையே எனப் புலம்புகின்றாள். இதோ வினை முடிந்தமையால் உடன் சென்றிருந்தவர்கள் வாயிலாக கேட்டறிந்தேன். நம் காதலரும் இப்பனிக்காலத்து ஆங்குத் தங்கி வருந்தாது இப்பொழுது வருவார். அதனால் நீயும் துன்புறாது இனிது இருப்பாயாக’ என உரைக்கின்றாள்.

முத்து மாலை போல் அரும்பு விட்டுப் பூத்திருக்கும் ஈங்கை, மழைக்கட்டிகள் போல மலர்களைக் கொட்டுகின்றது. தேன் சிந்தும் குவளை மலர்களும் பூத்திருக்கின்றன. மதம் பொழியாத யானை போல வறண்ட மேகங்கள் வானில் மேய்கின்றன. பனி கொட்டுகின்றது. நள்ளிரவு வேளையாகவும் இருக்கின்றது. காதலரைப் பிரிந்து தனிமையில் வாழ்வோர், பிரிவுத் துன்பத்தினைப் பொறுக்கும் அளவினை ஆராயாமல், தனியே இருப்பவரின் வலிமையை எண்ணிப் பார்க்காமல் அவர்கள் சினம் கொள்ளும்படி வாடைக்காற்றோ வீசி வருத்துகின்றது. மரபு வழிக் கடவுளாகத் தொழத்தக்க சான்றோரனாகிய தலைவன், ஓதல் வினையின் பொருட்டுச் சென்றுள்ளான். வினைமுடிந்து விரைந்து வந்துவிட்டான். ஆதலால் நீ வருந்தாதே எனத் தலைவிக்குத் தோழி கூறுகின்றாள்.

பனிக்காலத்தில் தலைவன் வருகை, பிரிவுத் துன்பத்திற்கு அருமருந்தாக அமைகின்றது. ஓதல் காரணமாகப் பிரிந்த தலைவன் தனித்திருப்போரின் துன்பத்தை உணர்ந்தவன். பிரிவுத்துன்பத்தை அனுபவித்த தலைவன் தன் பிரிவால் தலைவிக்கு துன்பம் நேர்ந்துவிடக்கூடாது என்று நினைக்கும் தலைவனின் உயர்ந்த குணத்தை கூறும் பாடலாகும்.

**"சூடா வாகைப் பறந்தலை, ஆடுபெற**
**ஒன்பது குடையும் நன்பகல் ஒழித்த**
**பீடுஇல் மன்னர் போல,**
**ஓடுவை மன்னால் - வாடை! – நீ எமக்கே"**

**(அகம்: 125: 19-22)**

தமது ஒன்பது குடைகளையும் நடுப்பகலிலே போட்டுவிட்டுத் தோற்றோடிச் சென்ற பெருமையில்லாத ஒன்பது மன்னர்களைப் போல வாடையே! நீயும் என்னிடம் தோற்று ஓடப் போகிறாய். இதோ என் தலைவன்

வந்துவிட்டான். வாடையே ஒன்றும் செய்ய முடியாது எனத் தோழி பெருமிதம் கொள்வதைக் காணமுடிகின்றது.

இதுபோன்று கலித்தொகைப் பாடலிலும் தலைவன் வரவு உணர்ந்த தோழி மகிழ்ச்சி அடைந்து கூறியதாக அமைந்துள்ளது.

இதனை,

**“ ----------------------- ஈங்கைவாடு உதிர்பு உக,**
**பிரிந்தவர் நுதல் போலப் பீர்வீய, காதலர்ப்**
**புணர்ந்தவர் முகம் போலப் பொய்கைப் பூப்புதிது ஈன,**
**மெய் கூர்ந்த பனியொடு மேல்நின்ற வாடையால்,**
**கையாறு கடைக் கூட்டக் கலக்குநூஉம் பொழுது மன்--**
**-----------------------------------------------------------------**
**-----------------------------------------------------------------**
**பயங்கெழு பல்கதிர் பால் போலும் பொழுதொடு,**
**வயங்கு இழை தண்ணென, வந்த இவ் அசை வாடை:**
**-------------------------------------------------------------------**
**புகை எனப் புதல் சூழ்ந்து, பூ அம்கள் பொதி செய்யா**
**முகை வெண்பல் நுதி பொர, முற்றிய கடும்பனி,**
**என ஆங்கு,**
**வாளாதி, வயங்கிழாய்! ‘வருந்துவள் இவள்’ என,**
**நாள் வரை நிறுத்தத்துத் தாம் சொல்லிய பொய் அன்றி”.**
**(கலி:31: 3-7, 11-12, 19-23)**

எனும் பாடல் மூலம் அறியலாம். இப்பாடலின் தொடக்கம் முன்பனி பற்றியும், இறுதி பின்பனி பற்றியும் கூறுகின்றது.

இளவேனிற்காலத்தே வருவதாகக் கூறிச் சென்ற தலைவன் முன்பனி போய் பின்பனிக்காலமும் வந்துவிட்டது. தலைவன் மீது

இருக்கும் நம்பிக்கையை இழக்கிறாள் தலைவி. ஆனால் தலைவனோ பின்பனிக்காலத்தில் வருகின்றான். அவன் வருகை அறிந்த தோழி பேருவகை அடைந்தவளாய்க் கூறுகின்றாள். மழை பெய்து முடிந்து ஆறுகளில் நீர் ஓடி எங்கும் அழகுடன் திகழ்கின்றன. ஈங்கையின் பூ மலர்ந்து வாடி உதிர்ந்து கிடக்கின்றன. கணவரைப் பிரிந்த மகளிர் போல நெற்றி போல பீர்க்கம் பூக்கள் பூத்துக்கிடக்கின்றன. காதலரைச் சேர்ந்த பெண்களின் முகம் போலக் குளத்தில் தாமரைப் பூத்துக்கிடக்கின்றன. உடலை வருத்துகின்ற பனிக்காலத்தோடும் வாடைக்காற்றும் வீசுகின்றன. இது தலைவனைப் பிரிந்த தலைவியருக்கு மிகுந்த துன்பத்தைத் தருகின்றன.

போரிலே எதிரிகளைக் கொன்று களிறு மீது வரும் தலைவனைக் காண முடியாதளவிற்கு உயிரைக் கொள்ளும் இவ்வாடைக்காற்று என்னைக் கொன்றுவிடுமோ எனத் தலைவி அச்சம் கொள்கின்றாள். பகைவரை வென்று திறை(வரி) பெற்று தேரில் வரும் தலைவனைக் காணமுடியாதபடி கடும்பனி வந்து என்னை கொன்றுவிடுமோ எனத் தலைவி வேதனை அடைகின்றாள்.

வேதனையே அவளுக்குச் சோதனையாக, தலைவிக்கு பனிக்காலம் படுத்தும் பிரிவுத் துன்பம் போக்கும் விதமாக தலைவன் வருகை, அவளுக்கு மிகுந்த மகிழ்வைத் தருகின்றது. வீரம் பொருந்த தலைவன் போர்க்களத்தில் மட்டும் வெற்றி கண்டவன் கிடையாது. அது மட்டும் தன் கடமையாக நினைக்காது, இல்லறக் கடமையையும் இனிது ஆற்றுவதற்கு இதோ வந்துவிட்டான். பனியாக வந்த துன்பம், தூசியாகப் பறந்துவிட்டது. தலைவிக்கு பிணி போல வந்த பனி, தலைவன் வருகையால் கனியாகிப் போய்விட்டது. தலைவன் பிரிவு என்ற பகையையும் வென்று வந்துவிட்டான். பனிப்பருவத்தை வென்ற பலதிறமை கொண்ட தலைவியின் வருகை பிரிவு ஆற்றாமையில் இருக்கும் தலைவிக்கு இன்ப ஊற்றாக மாறுகின்றது.

**முன்பனிக்காலம்**

முன்பனிக்காலம் நீண்ட நாள் காத்திருந்தும் துன்பம் தரும் காலம். கார், கூதிரையும் கடந்த முன்பனி வருகின்றது. பிரிந்த தலைவன் முன்பனிக்காலத்திலாவது வருவான் எனத் தலைவி நினைப்பது முன்பனியில் பிரிவேன் எனத் தலைவன் கூறுவது மரபுக்கு மாறானது. பிரிவினால் ஆகிய தவிப்பு, ஏமாற்றம், காத்திருத்தல் என்பன இறுதி எய்தும் காலமாக அமைதல் வேண்டியது முன்பனிக் காலமாகும்.

**தலைவி ஆற்றாமை**

தலைவன் பிரிந்த காலத்தே ஆற்றாளாகிய தலைவியை, 'நீ ஆற்றுதல் வேண்டும்' எனத் தோழி கூறுகின்றாள். அதற்குத் தலைவி, ஆற்றாமை தோன்ற வாடைக்காற்றை விளித்துக் கூறுகின்றாள்: இதனை,

**"களிறு உயிர்த் தன்ன கண் அழி துவலை**
**முளரி கரியும் முன்பனிப் பானாள்,**
**குன்று நெகிழ்ப்பு அன்ன குளிர் கொள் வாடை!**
**எனக்கே வந்தனை போறி! புனற்கால்"**

**(அகம்: 163: 7-10)**

மழை பொழிந்து, குறைந்த பெயலைக் கொண்ட கூதிர்ப்பருவத்து இறுதி நாள், மனதில் வெறுப்பு மிகுமாறும் என்னைத் தனித்திருக்குமாறும் விட்டுப் பிரிந்து சென்றார். இறத்தற்குக் காரணமான துன்பத்துடன் இருக்கின்றேன். மிகுந்த ஆர்வத்துடன் அவர் வரவை பெரிதும் ஆவலுடன் எதிர்நோக்கிக் காத்திருக்கின்றேன். அவரோ என்னை 'இவள் இரங்கத் தக்கவள் என்று கூடக் கருதவில்லை, "மலையையும் நடுங்கச் செய்யும் குளிரை உடைய வாடைக்காற்றே நீ என்னை வருத்துவதற்காகவே வந்திருக்கின்றாய். "நீரைக் குடித்த யானை பெருமூச்சு விட்டது போல துவலை தூவ, தாமரை மலரே கருகிப்

போய்விடும்படியாக பனித்துளி வீழ்கின்றது. "நீர் ஓடும் வாய்க்காலில் உள்ள நுண்மணல் மேடு கரைந்து அழிந்தது போல என் நெஞ்சமும் நிலை குலைந்து நெகிழ்ந்து போய்விட்டது. வாடையே! கொடியவரான எம் தலைவர் சென்றுள்ள திசையை நோக்கி செல்வாயாக! இதோ என்னை வருத்துவது போல் அவருக்கும் இத்துன்பத்தை தந்தாயானால் பொருளீட்டும் தொழிலை விரைந்து முடித்துக்கொண்டு என்னை நினைத்து வந்துவிடுவார் என்று கூறுகின்றாள். தலைவன் வரவில்லை என்றால் நான் இறந்துபடுவேன். பனித்துளியால் தாமரை மலர் கரிந்து போவதைப் போல நானும் போய்விடுவேன். முன்பனிக்காலத்து நள்ளிரவில் வீசும் வாடைக்காற்று உயிரைக் குடித்துவிடும் போல் வருகின்றது. நள்ளிரவில் மன ஆறுதல் கூறுவதற்கு யாரும் என்னைப் போல் விழித்திருக்க மாட்டார்கள். யாரும் இல்லாத காரணத்தால் வாடையிடம் சொல்லிப் புலம்புகின்றாள். கார்காலத்தில் வருவேன் என்ற நம்பிக்கை போய், பனிக்காலமும் வந்துவிட்டது. தலைவன் வருவான் என்ற நம்பிக்கையும் போய்விட்டது.

பிரிந்த தலைவன் கார்காலத்தும், பின்னர் பனிக்காலத்தும் வாராமையால் வருந்தியிருக்கும் தலைவி. மேகக் கூட்டமானது பனியொடு கிடக்கும் கடலைக் கடந்து, ஓசையுடன் மழையைப் பொழிவிக்கின்றது. மழைக்காலம் முடிந்து குளிர் பனிக்காலத்தில் பிடவம் பூவானது மணம் வீசுகின்றது. அத்துடன் ஊதைக் காற்றும், பனியும் சேர்ந்து வீசுகின்றது. இத்தகைய பனி நம்மை வருந்தச் செய்கின்றது. அதுபோல நம்மைப் பிரிந்து சென்ற தலைவனையும் வருத்துமே என்று என் நெஞ்சம் கலங்குகின்றது. 'நான் எங்ஙனம் ஆற்றியிருப்பேன்' எனப் புலம்புகின்றாள் தலைவி. இதனை,

**"பனி அலைக் கலக்கிய நெஞ்சமொடு**
**வருந்துவம் அல்லமோ, பிரிந்திசினோர் திறத்தே?"**
**(அகம் : 183: 14-15)**

எனும் கருவூர்க் கலிங்கத்தார் பாடல் வழி அறியலாம்.

மற்றுமோர் தலைவிக்கு மழையும் பனியும் கலந்த அச்சிரப் பருவம் மிக்கத் துன்பம் தருகின்றது. பனி மிக்குப் பெய்வதால் களவின்பத்திற்கு இப்பருவம் தான் சிறந்ததாக அமையும். தனித் துறைவோர்க்கு, தாம் ஆற்றவும் பிறர் ஆற்றுவிக்கவும் முடியாத பருவமாக அமையும். பொருளீட்டுவதற்காகச் சென்ற தலைவனை எண்ணித் தலைவி வருத்தமடைகின்றாள். இந்நிலையில் தலைவி ஆற்றாது தோழியிடம்,

**"மழை கால் அற்சிரத்து மாலிருள் நீங்கி,**
**நீடுஅமை நிவந்து நிழல் படு சிலம்பில்**
**கடாஅ யானைக் கவுள் மருங்கு உறழ**
**ஆம் ஊர்பு இழிதரு காமர் சென்னி,**
**புலி உரி வரி அதள் கடுப்ப, கலி சிறந்து,**
**நாட்பூ வேங்கை நறுமலர் உதிர,**

**(அகம்: 205: 15-20)**

எனப் புலம்புகின்றாள். இது நக்கீரர் பாடிய பாடலாகும். மழைப் பொழிந்து ஊற்று ஓடுகின்றன. குரங்குப் கூட்டமானது வேங்கை மரத்தில் ஏறிப் பூக்கள் உதிரும்படி விளையாடிக் கொண்டிருக்கின்றன. அப்படிப்பட்ட வழியில் தான் தலைவன் சென்றுள்ளான். குற்றமற்ற நெஞ்சம் கொண்டவர் போல் "உன்னைப் பிரிய மாட்டேன்" என்று என்னை நம்புமாறு கூறினார். ஆனால் சொன்ன சொல்லைக் காப்பாற்றும் துணிவு என் தலைவனுக்கு இல்லை. என்னை அவர் நினைக்கவும் இல்லை. நான் எவ்வாறு ஆற்றியிருப்பேன் எனப் புலம்புகின்றாள். இப்பாடலில் உடல் சார்ந்த துன்பம் கூறப்படுகின்றது. முன்பனிக்காலத்துத் துயரமும் சொல்லப்படுகின்றது.

"முன்பனிக்காலத்தில் கருவிளையும் கரும்பும் பூப்பதாகவும், பிடாவும் பகன்றையும் பிணிவிடுவதாகவும், தோன்றியும் கோடலும் பூத்துத் தோன்றுவதாகவும், பயறும் உழுந்தும் பழுத்துக் காயைச் சிந்துவதாகவும், அவரை முகை அவிழ்வதாகவும் சங்கப் புலவர்கள் பாடியிருக்கின்றனர்".[19]

**சிதர் சினை தூங்கும் அற்சிரம்**

பனிக்காலத்துப் பூத்து மணக்கும் பூக்களைக் காட்டித் தலைவியின் பிரிவுத் துன்ப நிலைபாடு குறிக்கப்படுவதை மற்றொரு பாடல் வழி அறியலாம். தலைவன் திரும்பி வருவதாகச் சொல்லிச் சென்ற காலமும் வந்து போய் விட்டது. அவன் விரைவில் வந்துவிடுவான் என்று தோழி தலைவிக்கு வற்புறுத்திக் கூறுகின்றாள். முல்லை நிலத்துப் பாடல் ஒன்று தலைவியின் துன்பத்தை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. இதனை,

**புள்ளி நுண் துவலை பூவகம் நிறைய**
**காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்**
**நீர்வார் கண்ணின் கருவிளை மலர,**
**துய்த்தலைப் பூவின் புதல்இவர் ஈங்கை**
**நெய்த்நோய்த் தன்ன நீர்நனை அம்தளிர்**
**இருவகிர் ஈருளின் ஈரிய துயல்வர,**
**அவரைப் பைம்பூப் பயில, அகல்வயல்**
**கதிர்வார் காய்நெல் கட்குஇனிது இறைஞ்ச,**
**சிதர்சினை தூங்கும் அற்சிர அரைநாள்,**
**காய்சின வேந்தன் பாசறை நீடி,**
**நம்நோய் அறியா அறனி லாளர்**
**இந்நிலை களைய வருகுவர் கொல்? என**
**ஆனாது எறிதரும் வாடையொடு**
**நோனேன் - தோழி! என்தனிமை யானே.”**

**(அகம்:294: 3–16)**

எனும் பாடல் புலப்படுத்துகின்றது.

மழைக்காலம் முடிந்தபிறகு நிலங்களெல்லாம் குளிர்ச்சியடைந்து தாவரங்கள் தளிர்த்து பூப்பூக்க ஆரம்பித்துவிட்டனர். பூப்பூக்கும் காலம் வரைத் தலைவன் வரவில்லை. பூக்கள் மலர்ந்துவிட்டன. நெற்கதிர்கள்

முற்றி மண்ணோக்கித் தலை சாய்ந்து கிடக்கின்றன. அத்தகு முன்பனிக்காலம், போர்காரணமாகப் பிரிந்து சென்ற தலைவன், அறமற்றவனாக உள்ளான். தனிமையில் இருக்கும் எனக்கு வாடைக்காற்று மிகுந்த துன்பத்தைத் தருகின்றது. சமூகக் கடமையைச் செய்யும் தலைவன், இல்லறக் கடமையை மறந்து விட்டானே. எனக்கு பிரிவு நோய் தந்த அறம் சிறிதும் இல்லாதவன். காதலர்ப் பிரிந்து வாடும் செயலற்ற மகளிரது நீர் சொரியும் கண்களைப் போல கருவிளை பூ மலர்ந்திருக்கிறது. பல்வேறு பூக்கள் பூத்து காடு முழுவதும் அழகுற இருக்கின்றது. ஆனால் இல்லறத்தில் நான் மட்டும் பிரிவால் வாடிக்கிடக்கின்றேன் என்பது படக்கூறும் தலைவியைக் காணமுடிகின்றது. மேலும் முன்பனிக்காலத்தில் ஏற்படும் பிரிவால் தலைவன் தலைவியரிடையே ஏற்படும் மாற்றங்களையும், செயல்பாடுகளையும் இப்பாடல் உணர்த்துகிறது.

**புலம் புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம்**

மற்றொரு தலைவிக்கு காற்றுடன் கூடிய வாடை கவலையளிக்கிறது. வாடைக்கு இரக்கமில்லை. அதனால் தலைவிக்கு உறக்கமில்லை. உள்ளத்து உணர்வைக் கூற ஒருவரும் இல்லையே என வருந்துகின்றாள். எல்லை இது என்று அறிய இயலாத தன்மையுடன் வருத்தும் வாடைக்காற்று வந்துவிட்டது. அதோடு சேர்ந்து வேட்கை நோய் எனும் முறை முளைத்தது. அது தளர்ந்து துன்பம் என்னும் தண்டாக வளர்ந்தது. ஊர்ப் பெண்கள் கூறும் பழிச் சொற்கள் கிளைகளாகப் பரந்து விரிந்தது. ஆராக்காதல் எனும் தளிர் தளிர்த்து புலவர் பாடும் புகழினைப் பெற்ற நாணமில்லாத பெரிய மரமாகி இந்நிலவுலகம் முழுவதும் நிழல் பரப்பி, அலர் எனும் அரும்புகளைத் தோற்றுவித்தது. இந்நிலையிலும் தலைவன் நம்மை நினைத்து வரவில்லை.

“புலம்புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம்”. புதிதாக வந்த பனிக்காலம் என்னைப் புலம்ப வைக்கின்றது. இப்பொழுதான் பனிக்காலம் ஆரம்பமாகி உள்ளது. இதில் பசலை நோய் வந்து பேரழகையும்

அழித்துவிட்டது. வாடையுடன் கூடிய முன்பனிக்காலம் "தலைவரம்பு அறியாத் தகைவரல் வாடை" ஊரெல்லாம் களவுக்காதல் தெரிந்துவிட்டது. அலர் தூற்றி மக்கள் அசிங்கப்படுத்திவிட்டனர். வாடை வந்தும் என் துன்பம் போகவில்லை. பெண்கள் நிலைமையைச் சிறிதும் நினைத்துப் பாராத தலைவன் பிரிவுத் துன்பம் என்பது பெண்களுக்கு மட்டும் உரியதுதானா? ஆண் உலகம் இதனைப் பற்றி அறியமாட்டாரோ? என மிகுந்த வேதனையுடன் கூறும் தலைவியைக் காணமுடிகின்றது. இப்பொழுதுதான் வாடைக்காற்று வந்துள்ளது. இனியும் தலைவன் வரவில்லை எனில் உயிர் வாழ்தல் அவ்வளவு எளிதன்று ஏனெனில் பெண்ணின் மனநிலை அறியாத தலைவனுடன் வாழ்வது ஒரு புண்ணியமும் இல்லை என்பது படக்கூறுவது போல் உள்ளது. இதனை,

**"விசும்பு விசைத்து எழுந்த கூதளங் கோதையின்,**
**பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ,**
**ஆர்கலி வளவயின் போதொடு பரப்ப,**
**புலம்புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம்,**
**நலம்கவர் பசலை நலியவும், நம்துயர்**
**அறியார் கொல்லோ," தாமே? அறியினும்**
**நம்மனத்து அன்ன மென்மை இன்மையின்,**
**நம்முடை உலகம் உள்ளார் கொல்லோ?**
**யாங்கு என உணர்கோ, யானே? — வீங்குபு**
**தலைவரம்பு அறியாத் தகைவரல் வாடையொடு"**
**முலையிடைத் தோன்றிய நோய்வளர் இளமுளை**
**அசைவுடை நெஞ்சத்து உயவுத்திரள் நீடி,**
**ஊரோர் எடுத்த அம்பல் அம்சினை,**
**ஆராக் காதல் அவிர்தளிர் பரப்பி,**
**புலவர் புகழ்ந்த நார்இல் பெருமரம்**
**நிலவரை எல்லாம் நிழற்றி,**
**அலர்அரும்பு ஊழ்ப்பவும், வாரா தோரே,**

**(அகம்: 273 : 1-17)**

எனும் ஔவையார் பாடல்வழி அறியலாம்.

**வடந்தை தூக்கும் வருபனி அற்சிரம்**

பிரிந்த காதலர் வராமையால் வாடை வீசும் முன்பனிக்காலத்து மாலைப்பொழுதானது தனித்து வருந்தி ஒழியுமாறு வந்து சென்றது. இனி நான் எவ்வாறு ஆற்றியிருப்பேன்' என தலைவி வருந்தித் தோழியிடம் கூறுகின்றாள்.

**"பெருங்கல் நாடன் பிரிந்த புலம்பும்,**
**உடன்ற அன்னை அமரா நோக்கமும்,**
**வடந்தை தூக்கும் வருபனி அற்சிரச்**
**சுடர்கெழு மண்டிலம் அழுங்க,''**
**-----------------------------------------------**
**------------------------------------------ ----------**
**அள்இலைப் பலவின் கனிகவர் கைய**
**கல்லா மந்தி கடுவனோடு உகளும்**
**கடுந்திறல் அணங்கின் நெடும்பெருங் குன்றத்து**
**பாடுஇன் அருவி சூடி,**
**வான்தோய் சிமையம் தோன்ற லானே**

**(அகம்: 378: 11-14, 20-24)**

நின்னை எப்பொழுதும் பிரியேன்' எனப் பழைமையான நட்பினை உடைய காதலர் பிரிந்து சென்றுவிட்டார். வாடையுடன் கூடிய மாலைப்பொழுதும் வந்துவிட்டது. அடுத்து இருள்மிக்க இரவுப்பொழுதும் வந்துவிடும். அவர் வாழ்வதால் நானும் வாழ்கின்றேன். அவர் நாட்டில் ஆண்குரங்கும், பெண்குரங்கும் பலாப் பழத்தினை வைத்து விளையாடிக் கொண்டிருக்கின்றது. அதனைக் கண்ட தலைவனுக்கு நம் நினைவு வரவில்லை. அதனைப் பார்த்து நான் பிரிவாற்றி உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். வாடைக்காற்று, மாலைப்பொழுது, இருள்மிக்க இரவு இவற்றைவிட எனக்கு வேறென்ன கொடுமை வேண்டும் எனப்

புலம்புகின்றான். அசையாது நிற்கின்ற மலைபோல ஓர் இயக்கமுமின்றி நானும் இருக்கின்றேன் எனக் கூறுகின்றாள்.

**வயங்கு கதிர் கரந்த வாடை வைகறை**

தலைவி தன்னைப் பிரிந்து பனிக்காலத்து துன்பத்தால் வருந்தி இல்லத்தே எவ்வாறு இருக்கின்றாளோ எனப் பாசறையில் இருக்கும் தலைவன் புலம்புகின்றான்.

கூர்மையான அரத்தால் அறுத்தெடுக்கப்பட்டு எஞ்சிய சங்கினது நுனிப்பகுதியைப் போன்று வலப்பக்கம் அரிந்த பகன்றை மலரின் அரும்புகள், சிதறுகின்ற, மழைத்துளிகளால் மலருகின்ற, மழை நின்ற முன்பனிக்காலம். அக்காலத்தில் ஞாயிறு தோன்றாத வாடையுடன்கூடிய வைகறைப்பொழுதில் கரிய இருளாக தனிமைத்துயரெனும் துன்ப வெள்ளத்தில் தலைவி வேதனைப்படுவாள் என்று பாசறையின்கண் இருக்கும் தலைவன் வருந்துகின்றான். பாசறையில் இருக்கும் தலைவனுக்கும் பனிக்காலப் பிரிவு மிகுந்த வேதனையைத் தருகின்றது. பனிக்காலத்தின் இரவு பாசறையில் இருக்கும் தலைவனுக்கு மிக நீண்டதாக உள்ளது. யானையின் கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் மணியின் ஓசை, கேடயத்தின் மீது பொழியும் அம்பின் ஓசை, நள்ளிரவில் முரசு முழங்கும் ஓசை எல்லாம் சேர்ந்து தலைவனுக்குத் துன்பம் தருகின்றது. அதுபோல நள்ளிரவில் தனிமையில் இருக்கும் தலைவிக்கு யாருமில்லாத இரவுப்பொழுது, குளிர்ந்த மழைப்பொழிந்து பனிக்காலம் துவங்கிய காலம் எல்லாம் சேர்ந்து தலைவிக்கு வேதனைத் தந்துகொண்டிருக்கும் எனத் தலைவன் நினைக்கின்றான். தான்படும் பிரிவுத் துன்பம் தன் தலைவிக்கும் நிகழுமே என நினைக்கும் இல்லற மாண்புடைய இனிய தலைவனைக் காணமுடிகின்றது. இதனை,

**-------------------------- சுரிமுகப் பகன்றை,**
**சிதரல் அம் துவலை தூவலின், மலரும்**
**தைஇ நின்ற தண் பெயல் கடை நாள்**
**வயங்கு கதிர் கரந்த வாடை வைகறை,**
**விசும்பு உரிவது போல், வியல் இடத்து ஒழுகி,**
**மங்குல் மாமழை, தெள் புலம் படரும்**
**பனி இருங் கங்குலும் தமியள் நீந்தி,**
**தம் ஊரோளே,**

**(அகம்:24: 3-10)**

எனத் தலைவன் நெஞ்சினோடு புலம்புதலை ஆவூர் மூலங்கிழார் பாடல் வழி அறியலாம்.

“இவ்வாறு விலங்குகளின், பறவைகளின் காதல் செய்கைகளிடையே தம் காதல் நினைவுகளைக் காணமுயன்றனர். இயற்கைக் காட்சிகள், அஃறிணை உயிர்கள் ஆகியவற்றின் செயல்திறன் கண்டு தம் காதல் உணர்வுகளை வெளிப்படுத்தினார்” என்று வ.சு.ப மாணிக்கம் கூறுவதன் மூலம் உணரலாம்.[20]

**வாடைதூக்கும் வருபனி அற்சிரம்**

தலைவன், தலைவியைத் திருமணம் முடிக்காமல், காலம் தாழ்த்திப் பிரிந்து சென்று மீண்டும் தலைவியைக் காண வருகின்றான். அப்போது தோழி, பிரிவினைத் தாங்க முடியாமல் தலைவி அடைந்த துன்பத்தை தலைவனுக்கு விளக்குகிறாள். ஆளியை நினைத்து அஞ்சும் பெண்யானையை கரிய நிறத்தை உடைய களிறானது தன் பெரிய துதிக்கையால் அணைத்துகாத்து நிற்கின்றது. மூங்கிலின் அழகிய பூக்கள் உதிர, நீண்ட இதழ்களை உடைய காந்தள் பூவின் நெடிய மடல் ஒடியுமாறு பனிக்காலத்தில் வாடைக்காற்று குளிர

வீசிக்கொண்டிருக்கின்றது. அத்தகு கொடுமையான காலத்தில் அவளை விட்டு பிரிந்து வந்த சில நாட்களிலே தலைவி தனிமைத் துன்பத்தினால் என்ன ஆனாளோ? என்று நினைத்துப் பார்க்காத தலைவனாக இருக்கின்றாயே எனத் தோழி கூறுகின்றாள். இதனை,

**கடுஞ்சூல் மடப்பிடி நடுங்கும் சாரல்,**
**தேம் பிழி நறவின் குறவர் முன்றில்,**
**முந்தூழ் ஆய் மலர் உதிர, காந்தள்**
**நீடு இதழ் நெடுந் துடுப்பு ஒசிய, தண்ணென**
**வாடை தூக்கும் வருபனி அற்சிரம்**
**நம் இல் புலம்பின், தம் ஊர்த் தமியர்**
**என் ஆகுவர் கொல் அளியர் தாம்?' என**
**எம் விட்டு அகன்ற சில் நாள், சிறிதும்."**
**(அகம்:78: 6-13)**

எனும் மதுரை நக்கீரனார் பாடல் மூலம் அறியலாம்.

தலைவி காந்தள் பூவைப் போன்று மென்மையானவள், வாடைக்காற்றுக்குத் தாங்காது காந்தள் பூவின் மடல் ஒடிந்து போவது போல் தலைவியும் தனிமைத் துயரால் மனம் உடைந்து போவாள். ஆளியை நினைத்து அஞ்சும் பெண்யானை போன்றவள், பனிக்காற்றால் அஞ்சிநடுங்கும் தலைவிக்கு, களிறு போன்று அணைத்துக் காத்துக்கொள்ள தலைவன் நீ இல்லையே! மூவேந்தரையும் வென்ற பாரியின் சுனையில் பூத்த தேன் மணக்கும் புதுமலர் நாற்றம் போல மணங்கமழும் நெற்றியை உடைய உன் தலைவியைச் சிறிதேனும் நினைத்துப் பார்க்கவில்லையே? அவள் சுனையில் பூத்த புதுமலர் மணம் வீசும். யாரும் பறித்துச் சென்றால் என்ன செய்வாய். மூவேந்தரையும் வென்ற பாரி போன்று வீரம் படைத்த நீ தலைவியை விரைவில் மணம் முடித்துச் செல்ல வேண்டும் என்று கூறுகின்றாள். தனிமைத் துன்பத்தில்

தவிக்கும் தலைவிக்கு ஆறுதல் கூற யாரும் இல்லை. வாடையால் வந்த அரும்பனி பாடாய் படுத்துகிறது தலைவியை. அவள் உணர்வைப் புரிந்துகொள் எனக்கூறும் தோழியின் மனப்பாங்கினைக் காணமுடிகின்றது.

**தோழி வரைவு மலிந்து சொல்லுதல்**

பகல், இரவு என்று இல்லாது பெருமழையைப் பொழிகின்ற விடியற்காலப்பொழுதில் தலைவியை மணமுடிக்க தன் உற்றார் உறவினரோடு தலைவன் வருதலை அறிந்த தோழித் தலைவியிடம் கூறி மகிழ்கின்றாள்.

குளிர்ந்த முன்பனிக்காலமானது தனித்திருப்போருக்குப் பெரும் துன்பம் தரும் காலமாகும். மழைக்காலம் முடிந்து, பனிக்காலமும் தொடங்கிவிட்டது. ஆனாலும் இரவு, பகல் இல்லாது மழை பெய்து கொண்டிருக்கின்றது. தலைவன் நாட்டிலிருக்கும் பன்றியானது சுனை நீரைக் குடித்து, சேம்பங்கிழங்கைத் தின்றுவிட்டு, யானை போன்று வருத்தமின்றி கல்லின் மீது இறங்கி வருகின்றது. மேலும் புதரிலுள்ள கூதாளஞ் செடியில் உள்ள மலரின் மீது புரண்டதால், அதிலுள்ள பூந்தாதுக்கள் பன்றியின் மீது உதிர்ந்து கிடக்கின்றது. அது பொன் உரைத்து அறியும் கட்டளைக் கல் போன்று அழகுற இருக்கின்றது. பின்பு நன்கு விளைந்த தினைக் கதிரினை மேய்ந்து இனிதாக உறங்குகின்றது. அத்தகு நாட்டுக்குத் தலைவன், அவன் நாட்டுப் பன்றியே இவ்வளவு சீரும் சிறப்புடன் பசியின்றி உண்டு அழகுடன் இருக்கின்ற போது, உன் தலைவன் உன்னை பிரிவுத் துயரால் வருத்தமடையச் செய்ய மாட்டான் பனிக்காலத்துக் குளிரினை அவனும் உணர்ந்துள்ளான் போலும், நீ பட்ட தனிமைத் துயர், அவனுக்கும் துன்பத்தைத் தந்த காரணத்தால், உன்னை இதோ மணம் முடிக்க தலைவன் வந்து கொண்டிருக்கின்றான். அவன் வந்தபின்பு, இந்த மழையும், பனிக்காலமும் உன்னை என்ன செய்துவிட முடியும்

மனதாலும், உணர்வாலும் ஒன்றுபட்ட நின் தலைவன் உன்னுடன் இருக்கும் பொழுது, இப்பருவங்களைப் பற்றிக் கவலைப் படத் தேவையில்லை என்றும், நீ மகிழ்வோடு இருப்பாய் எனக்கூறி தலைவியை மகிழ்ச்சிப்படுத்துகிறாள். இதனை

**"எல்லையும் இரவும் என்னாது, கல்லெனக்**
**கொண்டல் வான்மழை பொழிந்த வைகறைத்**
**தண்பனி அற்சிரம் தமியோர்க்கு அரிது, என,**
**கனவினும் பிரிவு அறியலனே, அதன் தலை**
**முன் தான் கண்ட ஞான்றினும்**
**பின் பெரிது அளிக்கும் தன் பண்பினானே."**

**(அகம்:178: 17-22)**

எனும் பரணர் பாடலின் மூலம் அறியலாம்.

## முடிவுரை

பனிக்காலம் நம்பிக்கை தரும் காலமாகும். கார், கூதிரையும் கடந்து முன்பனி வருகின்றது. பிரிந்த தலைவன் முன்பனிக் காலத்திலாவது வருவான் எனத் தலைவி நினைப்பது இயல்பு. முன்பனியில் பிரிவேன் எனத் தலைவன் கூறுவது மரபுக்கு மாறானது.

பிரிவினால் ஆகிய தவிப்பு, ஏமாற்றம், காத்திருத்தல் என்பன இறுதி எய்தும் காலமாக அமைதல் வேண்டியது முன்பனிக் காலமாகும்.

தலைவன் உடன் இருந்தால் எல்லாப் பண்பாட்டுப் பழக்க வழக்கத்திலும் தலைவிக்குரிய இடம் சமுதாயத்தில் ஏற்புடையதாக இருக்கும். அவன் இல்லையென்றால் எல்லாச் செயல்களின் இயக்கமும் நின்று விடுகின்றன. அதற்குத் தனித்து ஒருவருக்கு மட்டும் இச் சமுதாயம் இடம் தராது.

இருவருமே கலந்துகொள்ள வேண்டிய சூழல், ஆதலால் தலைவி தன்னுடன் தலைவன் இருக்க வேண்டும் என்று எண்ணுகிறாள். உடல் சார்ந்த துன்பத்தையும், மனம் சார்ந்த துன்பத்தையும் எதிர்நோக்கும் நிலையிலும் இருவரும் இருக்கின்றனர். இத்துன்பம் போக்கும் மருந்தாக இருப்பது இருவரும் சேர்ந்திருக்கும் நிலையேயாகும்.

பின்பனிக்காலம் பனி புகை போலச் சிறு புதர்களைச் சூழ்ந்துள்ளது. பூவின் தேன், நெல் கள்ளை மூடி மறைத்துக் கொண்டிராத முல்லை அரும்புகள் போல பற்கள் ஒன்றோடு ஒன்று மோதிக் கொள்ளும்படியான முற்றிய கடும்பனி வந்தது என்று பின்பனி தலைவியின் இயலாமையை முழுமையாக வெளிப்படுத்தும் பருவமாக அமைந்துள்ளது.

பின்பனிக்காலம் என்பது கார்காலத் தொடக்கத்தில் விதைக்கப்பட்ட நெல்அறுவடை செய்யும் காலம். கார்காலத்தில் விதைக்கப்பட்ட

பயிரினங்கள் பூத்துக் காய்த்து பனிக்காலத்தில் பலன் தருகின்றது. இல்லம் நோக்கி எடுத்து வரப்படுகின்றது. வரகு கதிர் விளைந்து விட்டதால் கார்காலத்தின் இறுதி காலம் வந்துவிட்டது என்று கார்காலத்தின் இறுதி நிலையை வரகு கதிர் மூலம் அறிந்துகொள்ளமுடிகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. வா.சா. பானு நூர்மைதீன், பழந்தமிழ் அகப்பாடல்களில் நிலமும் பொழுதும், ப.25
2. மு.இராகவையங்கார், தொல், பொரு, ஆராய்ச்சி, ப.22
3. பானு நூர்மைதீன், மு.நூ.ப:189
4. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.570
5. தெ.கலியாணசுந்தரம், சங்க அகப்பாடல்களில் உணர்வுப் போராட்டம், ப.15
6. ச.சாம்பசிவனார், தமிழா இதோ உன் புதையல், ப.51
7. மேலது, ப.50
8. மு.வரதராசன், ஓவச்செய்தி, ப.150
9. மேலது, ப.151
10. ஈ.கோ. பாஸ்கரதாஸ், மானிட மதிப்புகள், ப.119
11. ஆ.இராமகிருட்டிணன், அகத்திணை மாந்தர் - ஓர் ஆய்வு ப.41
12. அ.சிதம்பரநாதன், முன்பனிக்காலம் முதலிய இலக்கிய கட்டுரைகள், ப:1
13. இளம். (உ.ஆ) தொல். பொருள், ப.12
14. ச.சாம்பசிவனார், தமிழா, இதோ உன் புதையல், ப.148
15. இரா.மாயாண்டி, சங்க இலக்கியத்தில் கற்பனை, ப.161
16. மு.மணிவேல், தமிழ் இலக்கிய அகப்பொருள் மரபுகள், ப.77
17. நற்றிணைச் சொற்பொழிவுகள், ப.17
18. ஆ.இராமகிருட்டிணன், அகத்திணை, மாந்தர் - ஓர் ஆய்வு, ப.189
19. அ.சிதம்பரநாதன் மு.நூ: ப.3
20. வ.சு.ப மாணிக்கம், தமிழ்க் காதல், ப.202.

# இயல்-3



# வெயில்காலமும் மாந்தர்கள் நிலையும்

## இயல்-3

## வெயில்காலமும் மாந்தர்கள் நிலையும்

### முன்னுரை

வேனில் என்பது இளவேனில், முதுவேனில் ஆகிய இரு பொழுதுகளையும் கொண்டது. சித்திரை தொடங்கி ஆடி முடிய உள்ள நான்கு திங்கள் நீடிப்பது இக்காலம். எனவே மாசி முதல் ஆடி ஈறாக உள்ள ஆறு திங்கள் ஓர் ஆண்டின் பாதி நாட்கள் பாலைக்குரியதாக ஆகின்றன. இவ்விரு பொழுதுகளும் வெயில்காலம் என்றே இக்கட்டுரையில் எடுத்தியம்பப்படுகின்றது.

‘‘வேனிற் காலமும் நண்பகல் நேரமும் பாலைத் திணைக்குப் பொருத்தமானவை’’ என்பது பற்றி நச்சினார்க்கினியர், ‘‘காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமைகூரச் சோலை தேம்பிக் கூவல்மாறி, நீரும் நிகழும் இன்றி, நிலம் பயம் துறந்து, புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெருகுதொரு காலமாதலின் இன்பத்திற்கு இடையூறாகிய பிரிவிற்கு நண்பகலும் வேனிலும் சிறப்புடைத்தாயிற்று.’’[1] என விளக்கம் வரைந்துள்ளார்.

தலைவனும் தலைவியும் பெறக்கருதும் இன்பத்திற்கு இடையூறாக அமையும் பிரிவு நிகழ்கின்ற காலம் வேனிற்காலமும் நடுப்பகலும் ஆகும். ‘வேனிற்காலத்துக் காலைநேரமும் மாலைநேரமும் கூட நண்பகல் போலக் கொடுமையான வெப்பம் உடையன. சோலைகள் வாடும், கிணறுகளில் நீர் இராது. நீரும் நிழலும் இன்றி நிலமெல்லாம் வறண்டு கிடக்கும். பறவைகளும் விலங்குகளும் இன்பமாக வாழ முடியாதவாறு வெப்பம் பெருகி நிற்கும். எல்லா உயிர்களும் இன்பமாக வாழ விரும்பியும் வெப்பத்தின் கொடுமையால் துன்பமே அடையும். இவ்விளக்கத்தின் வாயிலாகப் பாலைத் திணைக்கும் வேனில் நண்பகல் ஆகிய காலப்

பகுதிகளுக்கும் உள்ள பொதுப்பண்பு தெளிவாகும் என்பார் அறிஞர் மு.வரதராசன்.[2]

இளவேனிற் காலத்தை வசந்தகாலம் என்று கூறுவார் மா.இராசமாணிக்கனார் ‘‘பங்குனித் திங்களில் இளவேனிற் பருவம் என்னும் வசந்தகாலம் தோன்றியது மரங்கள் கணவரிடம் ஊடிய மகளிர் போல் வெம்பிய இலையை உதிர்த்தன உயிர் போன்ற கணவரைக் கூடிய மகளிரைப் போலக் குழைகள் தோன்றித் தழைத்தன. கணவரைப் பிரிந்து வாடுகின்ற மகளிர் கண்ணீர் ஒழுக, உடல்பசந்து, காம வேட்கை மிகுந்த மகளிரின் பழிச் சொல் போலப் பூக்கள் மலர்ந்து நெருங்கி இருந்தன. தென்றல் காற்று தள்ளுவதால் பூங்கொம்புகள் அசைந்து ஆடின. தெளிந்த தேன் துளித்தது. வண்டுகள் இசை பாடின’’ என்பர்.[3]

**இளவேனிற் பருவம்**

இளவேனிற் பருவம் என்பது பொதுவாக உயிரினங்களுக்குத் துன்பம் தரக்கூடியதாகச் சங்கப் பாடல்களில் புனையப்பட்டுள்ளது. இயற்கையாக இப்பருவத்தில் தான் இலையுதிர்ந்த மரங்கள் துளிர்விட்டு அழகு பெறும். பறவை, விலங்கினங்கள் மற்றும் வழிப்போக்கர்கள் வெயிலின் கொடுமையால் இளைப்பாற நிழல் தரும் மரங்கள் பொலிவு பெறுகின்றன.

இளவேனிற்பருவத்தில் வாடிய கிளைகள் யாவும் தளிர்த்து, இலை, மலர், காய், கனி என்று உருமாறிக் கண்ணுக்கினிய பருவமாய்க் காட்சியளிக்கும். பனியும், வாடையும் கையறவையும் கலக்கத்தையும் மிகுதியாக்க, பிரிந்தோர் நுதல் போல் பீர்க்கம் பூ உதிரப் ‘‘புணர்ந்தவர் முகம் போல் பொலிவுடன் பொய்கை புதுப்பூ ஈன இளவேனில் வரும்’’.[4]

வெயில் அதிகமாக இருந்தாலும், மரங்கள் தளிர்த்திருப்பதால் எல்லா உயிரினங்களுக்கும் சிறிது இன்பம் தரக்கூடியதாக அமையும்.

ஆனால் இதனை, ‘‘இயற்கை வழி இளவேனிற் பொழுது வரவை அறிவுறுத்தி நிற்கும், பிரிந்து நின்று மீண்டு வந்த தலைவரைப் பெற்ற பெண்டிர் இளவேனிற் பொழுது கண்டு மகிழ்வர். பிரிந்து சென்றவர் இப்போதும் வரவில்லையே என்று பிரிந்து நின்ற மகளிர் துடிப்பர். அவர்தம் துடிப்பைச் சங்க இளவேனில் கவிதைகள் எடுத்துரைக்கும். இளவேனிலைக் கண்டு இளமகளிர் துடிப்பது தமிழக இயற்கைச் சூழலில் பொருந்துமா? இளவேனிற்காலம் என்பது தமிழகத்தில் சித்திரையும் வைகாசியும் ஆகும். அம்மாதங்களில் தமிழகம் முழுவதும் கோடையில் அவியும். ஆற்றில் நீரற்றுப் போகும். கோடையால் ஆடவர் பெண்டிர் தவிப்பர். இத்தவிப்புச் சூழலைச் சங்க இலக்கியம் தட்ப காலம் போல விவரித்திருக்கிறது.’’ என்பார் க.ப.அறவாணன்.[5]

**இளவேனில் இயல்பு**

‘‘இளவேனிற்காலம் ஆரிய நாட்டில் வசந்தம் தருவது ஆகும். இயற்கைச் சூழலில் வசந்த காலம் என்பது இனிய காலம் ஆகும். ஆனால் இப்பொழுது தென்னிந்தியச் சூழலுக்கு ஒத்து வருவதில்லை. வேனிற்காலம் காதலர்க்கு இனியது அன்று. ஏனெனில் அது கொடுங் கோடைக்காலம் ஆகும். இளவேனிற் பருவம் கண்டு தலை மக்கள் துடிப்பதாகச் கூறும் பாடல்கள் தமிழகத்தின் இயற்கை அமைவிற்கு முரணானதாகும் என்ற கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதன்று. இளவேனிற் காலத்தில் தான் பல்வகையான பூக்கள் மலர்கின்றன. எனவே இது பூப்பூக்கும் காலமாகும். மரம், செடி, கொடிகளில் இலைகள் தளிர்க்கின்ற காலமாகும். தலைவன் பொருள் தேடிச் செல்லும் காலமுமாகும். கால்நடைக்கு உணவு தேடும் காலமுமாகும். விழாக்கள் அதிகம் நடைபெறும் காலமும் இதுவாகும். அறுவடை செய்த தானியங்களை வீட்டில் சேர்த்துவிட்டு உழவர்கள் ஓய்வெடுக்கும் காலமுமாகும். இவ்வாறு பல்வேறு நிகழ்வு நடைபெறும் இக்காலத்தில்

தலைவியும் தலைவனோடு சேர்ந்திருக்க எண்ணுகின்றாள்”[6] என்றும் கூறுவர்.

“வெப்பம் மிகுந்த அரிய வெயில் மிக்கதாய், காடுகள் கவின் இழந்து மரங்கள் வாடியிருக்கக்கூடிய ஆனி, ஆடி மாதங்கள் முதுவேனிற் காலத்திற்கு உரியனவாகும். இது கோடை என்றும், மேல்காற்று வீசும் பருவம் என்றும் குறிக்கப்படுகின்றது. உயிரினமும் பயிரினமும் வாடி செழுமை பெறாத பருவம் இப்பருவம் என்பர்”.[7] மொத்தத்தில் இப்பருவம் எல்லாருக்கும் துன்பம் தரும் பருவமாக உள்ளது. பிற பருவங்களைக் காட்டிலும் சங்க இலக்கியத்தில் வேனிற்காலம் மிகுதியாகப் பாடப்பட்டுள்ளது. வேனிலின் மிகுந்த வெம்மையால் மழையின்றிக் காய்ந்திருக்கும் மலையும் காடும் புலவர்களால் சிறந்த முறையில் புனைந்துரைக்கப்பெற்றுள்ளன. பிரிதலாகிய காதலொழுக்கத்திற்குத் துன்பச்சூழல் கொண்ட பாலை நிலம் சிறந்த பின்னணியாகப் படைக்கப்பெற்றுள்ளது.

“இலக்கியங்களில் படைக்கப்பெறுகின்ற துன்பநிலை அவற்றைப் பயில்பவர் உள்ளத்தில் இலக்கிய இன்பத்தை மிகுதியாக விளைவிக்கும் என்பதற்கு சங்க இலக்கியத்தில் வேனிற் (பாலை) காலத்துப் பாடல்கள் சிறந்த சான்றுகளாகத் திகழும் என்பர்.”[8]

எல்லாரும் வெறுக்கின்ற இப்பருவத்தையும் சங்கப் புலவர்கள் தாம் கண்ட நோக்கில் எடுத்தியம்பியுள்ளனர். இப்பருவம் குறித்த பொழுதில் தலைவன் தலைவியரின் நிலைப்பாடு குறித்துச் சங்கப் புலவர்கள் பாடியுள்ளமை எடுத்துக் காட்டத்தக்கன.

**அழல் போன்ற வெங்கதிர்**

பிரிந்து சென்ற தலைவனை நினைத்து வருந்துகின்றாள் ஒரு தலைவி. பிரிவிடை ஆற்றாத தலைவியை நோக்கி, ‘நீ தலைவன்

வரும்வரை ஆற்றியிருக்க வேண்டும்' எனக் கூறுகின்றாள் தோழி. அதற்குத் தலைவி, 'நம்மை பிரியேம்' என்று சொல்லி சென்ற சொல்லை மறந்துவிட்டாரோ என்று தன் ஆற்றாமையைக் கூறுகின்றாள்.

**" ……………..………………………….நிலம் பக**
**அழல் போல் வெங்கதிர் பைது அறத் தெறுதலின்,**
**நிழல் தேய்ந்து உலறிய மரத்த, அறைகாய்பு,**
**அறுநீர்ப் பைஞ் சுனை ஆம் அறப் புலர்தலின்,**
**உகு நெல் பொரியும் வெம்மைய: யாவரும்**
**வழங்குநர் இன்மையின், வௌவுநர் மடிய,**
**சுரம் புல்லென்ற ஆற்ற: அலங்கு சினை**
**நார் இல் முருங்கை நவிரல் வான் பூச்**
**சூரல் அம் கடுவளி எடுப்ப, ஆருற்று,"**

**(அகம்:1, 9-17)**

இது மாமூலனார் பாடிய பாடலாகும். இப்பாடலில் முருங்கை மலர் பூத்த பருவம் முதுவேனிற் பருவமாகக் கூறப்படுகின்றது. முதுவேனில் காலத்தில் மூங்கில் போன்ற என் தோள் வாடும்படி விட்டுவிட்டு செல்வத்தை தேடி வர தலைவன் சென்றுவிடுகின்றான். நெருப்புப் போன்ற காடு ஞாயிற்றின் கதிர்கள் நிலம் பிளக்குமாறு சுடுவதால், நிழல் இல்லாது வாடிய மரங்களை உடைய பாலைவழி பாறைகள் கொதித்து நீரற்றுப் போய் பைஞ்சுனைகளில் ஈரம்கூட இல்லாது காய்ந்து கிடக்கின்றது. அதில் மூங்கில் நெல் சொரிதலால் வெப்பத்தில் பொரிந்து போய்விடுகின்றது. அத்தகு கொடுமையான இடமாக உள்ளது. வழிப்போக்கர் இல்லாத காடு சூறாவளிக் காற்றுச் சூழன்று அடிப்பதால் நார் இல்லாத முருங்கை மரத்திலுள்ள வெண்மையான பூக்கள் உடைந்த கடல் அலையின் வெண்மையான துளிகளைப் போல பரந்து கிடக்கின்றது. அத்தகு கொடுமையான பாலை வழியில் பொருளீட்டச்

சென்றுள்ளார் நம் தலைவன், அரக்கொடு சேர்த்துச் செய்த கல்லைப் போல நின்னைப் பிரியேன் என்று சொல்லிச் சென்றவன், அச்சொல்லையே மறந்துவிட்டான். ஈரம்கூட இல்லாது காய்ந்து கிடக்கின்ற நீர்ச்சுனை போல் உன் வாழ்க்கையும் வெறுமையாக உள்ளது. ஞாயிற்றின் வெப்பக் கதிர்களால் நிலம் பிளந்து சுடுவது போல், தலைவனது பிரிவும் உன் மனதைப் பிளக்கின்றது. பொருள் ஈட்டுவதையேக் குறிக்கோளாகக் கொண்ட தலைவன் உன்னை மறந்துவிட்டான் எனத்தோழி வேனிற்காலத்து வெப்பத்தைப் போல தலைவனுடைய பிரிவு தலைவிக்கு இருப்பதாகக் குறிப்பால் உணர்த்துகின்றாள்.

**நெருப்பு எனச் சிவந்த உருப்பு**

தலைவன் பொருள் தேடும் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து வேற்று நாட்டிற்குச் செல்கின்றான். தலைவி பிரிவினால் வருந்தி உடல் மெலிந்து இருக்கின்றாள். தலைவியைக் கண்ட பலரும் அலர் தூற்றுகின்றனர். அலர்கூறும் பெண்டிரின் கொடுமையைத் தோழியிடம் வருந்திக் கூறுகின்றாள் தலைவி. சூரியன் நெருப்பைப் போலச் சிவந்து, நிலமெல்லாம் காயும்படிச் சுட்டெரிக்கின்றது. மரத்தில் வாழக்கூடிய உயிர்கள் வாடி வதங்கிக் கொண்டிருக்கின்றன. மழையே இல்லாமல் உயிரினங்களும் மடியும் காலம் முதுவேனில்காலம் ஆகும். இக்காலத்தில் இலைகள் இல்லாத யா மரத்தில் கழுகுக் கூடு கட்டி குஞ்சுகள் பொரித்துள்ளன. அக்குஞ்சுகளுக்கு இரையாக, அம்பு பட்டு வீழ்ந்தோரின் நிணத்தசைகளையும், கண்களையும் கொண்டு சென்று குஞ்சுகளுக்கு ஊட்டுகின்றன. அத்தகைய கொடுமையான வழிகளையும் கடந்தும், வெயில் தாக்கி உயிரினம் மடியும் கோடைகாலத்தில் ஆண்டு முழுவதும் மழை பெய்யாது உயிர்கள் மடிந்து போகுமாறு ஒழிந்தது. ஞாயிற்றின் கதிர்களால் நிலத்திலுள்ள பயிர்களெல்லாம், காய்ந்து அழிந்து போய்விட்டன. இலைகள் உதிர்ந்த யாமரத்துக் கிளைகளிலிருக்கும் குஞ்சுகளுக்கு உணவாகக் கொடுமையான வழியில்

தவறாது பொருப்புடன் இரை தேடிகொடுக்கும் கடமை தவறாத கழுகைப் போன்று நம் தலைவன் இல்லையே என்பது போல் வருத்தமடைகின்றாள். கட்டுக்கோப்பு மாறாது குஞ்சுகளுடன் தாய் பறவை இருக்கினற காட்சி, அந்தக் கொடுமையான வழியில் போவோருக்கு மகிழ்ச்சியைத் தருவது போல் தலைவன் எனக்கு இன்பத்தைத் தரவில்லை. தலைவனின் பிரிவு, இலைகள் உதிர்ந்து நிற்கும் யாமரத்தினைப் போல தலைவி இருப்பதைக் காணமுடிகின்றது. இதனை,

**"நெருப்பு எனச் சிவந்த உருப்பு அவிர் மண்டிலம்**
**புலங்கடை மடங்கத் தெறுதலின், ஞொள்கி,**
**நிலம் புடை பெயர்வது அன்றுகொல், இன்று? என,**
**மன் உயிர் மடிந்த மழை மாறு அமையத்து,**
**இலை இல ஓங்கிய நிலை உயர் யா அத்து**
**மேற் கவட்டு இருந்த பார்ப்பினங்கட்கு"**

**(அகம்: 31, 1-6)**

எனும் மாமூலனார் பாடிய பாடல் வழி அறியலாம்.

**அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில்**

சுள்ளிகள் நிறைந்த காடு புள்ளிகளை உடைய கலைமானின் கொம்புகள் சிதைந்து உதிருமாறு புலி அதனைத் துரத்திப் பற்றிக் கொன்று தின்னும். அப்புலி தின்று கைவிட்டுப் போன தசையைத் தின்பதற்கு பெரிய தலைகளை உடைய எருவையும் பருந்துகள் பலவும் சூழ்ந்திருக்கும். அத்தகைய அரிய பாலை வழியை நம் தலைவர் கடந்து சென்றுள்ளார். பொருளீட்டச் சென்ற தலைவன் கார்காலத் தொடக்கத்தே வருவேன் என்று கூறிச் சென்றான். கார்காலம் முடிந்து, பனிக்காலமும் நீங்கி, இப்பொழுது அரிய செவ்வியை உடைய இளவேனிற்காலமும் வந்துவிட்டது.

**“அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில்**

**அறல் அவிர் வார் மணல் அகல் யாற்று அடைகரை,**

**துறை அணி மருதமொடு இகல் கொள ஓங்கி,**

**கலிழ் தளிர் அணிந்த இருஞ்சினை மாஅத்து**

**இணர் ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்**

**புகை புரை அம் மஞ்சு ஊர,**

**நுகர் குயில் அகவும் குரல் கேட்போர்க்கே”?**

**(அகம்: 97, 17-23)**

ஆற்றின் கரையில் வரிசையாக வளர்ந்துள்ள மருத மரங்கள் அழகுடன் உள்ளன. தளிர்கள் நிறைந்ததும் கொத்துக்களாகப் பூக்கள் பூத்திருக்கும் அம்மருத மரத்திலே உள்ள குயில்கள் இனிமையாகக் கூவி (பாடி) இன்புற்றிருக்கும். அவைகளின் குரல்களைக் கேட்குந் தோறும் கண்களிலிருந்து வழியும் கண்ணீரை நிறுத்த முடியாது தவிக்கின்றேன். குயிலுக்குக் கிடைத்திருக்கும் இன்பம் எனக்குக் கிடைக்கவில்லை. கார்காலத்தில் வருவேன் எனும் சொல் நம்பிக்கையைத் தந்தது. பனிக்காலம் வந்தது கொஞ்சம் தலைவன் மீது நம்பிக்கை இருந்தது. கடைசியாக வேனிற்காலமும் வந்துவிட்டது. ஆனால் தலைவன் இன்னும் வரவில்லை. கொஞ்சமிருந்த நம்பிக்கையும் போய்விட்டது. தலைவி இனி எந்தக் காலத்தை நினைத்துக் காத்திருப்பது. தலைவிக்கு இது வேதனையே தவிர வேறொன்றும் இல்லை. காலங்கள் தவறாமல் வருகின்றன. தாவரங்கள் தவறாமல் அதனதன் காலத்தில் பூத்துக் காய்த்து, பலனைத் தருகின்றன. எந்தவிதப் பலனும் கிடைக்காமல் வெறுமையில் தனிமையில் தவித்திருக்கும் தலைவிக்கு கண்ணீர்தான் பதிலாக வருகின்றது. மனவேதனைக்கு மாற்றுமருந்து தலைவன் வருகை ஒன்றுதான் என்பது தலைவனுக்குப் புரியவில்லையே என்பது போல் தலைவி கூறுகின்ற நிலையைக் காணமுடிகின்றது.

**பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிறு**

தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்து சென்றான். பிரிவாற்றாத தலைவி தோழியை நோக்கி, ‘‘நன்மை செய்தால் தீமை வராது’’ என்னும் பழமொழி உண்மையாய் நிகழ்வதை என் வாழ்வில் கண்டு கொண்டேன், எனக் கூறுகின்றாள்.

> **‘‘அகல் இரு, விசும்பிற்கு ஓடம் போல,**
> **பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிற்று**
> **உருப்பு அவிர்பு உளரிய கழன்று வருகோடை,**
> **புன கால் முருங்கை ஊழ் கழி பல் மலர்,**
> **தண் கார் ஆலியின், தாவன உதிரும்**
> **பனி படு பல் மலை இறந்தோர்க்கு**
> **முனி தகு பண்பு யாம் செய்தன்றோ இலமே!’’**
>
> **(அகம்: 101, 12-18)**

என முதுவேனிற் காலம் கொடியதாக இருந்து துன்பம் தரும் போது தலைவனை அத்துன்பத்தில் இருந்து அகற்றிய முருங்கைப் பூவை உவமைப்படுத்துகின்றாள். அகன்ற பெருவானம் ஆகிய கடலைக் கடந்து செல்லும் ஓடம் போல, ஞாயிறு தன் வெயில் (சினத்தை) அவிழ்த்து விடும் பகல் பொழுது மிகுதியாக இருக்கும் கோடைக் காலத்தில் தலைவன் செல்கின்றான். வழியில் வலிமையில்லாத கொம்புகளில் முருங்கைப் பூக்கள் பூத்துக் குலுங்குகின்றன. மழைக்காலத்தில் ஆலங்கட்டிகள் கொட்டுவது போல முருங்கைப் பூக்களும் உதிர்ந்து கிடக்கின்றன. தலைவியை விட்டுவிட்டு மலைப்பாதையில் செல்லும் தலைவனுக்கு இன்னல்கள் ஏதும் நிகழாமல் இருக்க அவரின் பண்பு நலன் (நன்மை) கருதி முருங்கைப் பூவானது உதிர்ந்து அவருக்கு நன்மை செய்கிறது. இவ்வாறு இயற்கையே தலைவனுக்கு நன்மை செய்ய நினைக்கும் போது, தலைவி மட்டும் எப்படி தீங்கு நினைப்பாள்.

இதில் தலைவனுக்கு நன்மையே நிகழ வேண்டும் என்று எண்ணுகின்ற தலைவியைக் காணமுடிகின்றது. தலைவன் பிரிவால் தலைவியின் தவிப்பெல்லாம் தன் அன்புத் தலைவனின் நலம் நோக்கியே அமைகின்றது.

**வேனிற் பருவத்து வேதனை**

மற்றொரு தலைவியோ ஆறுதல் கூறும் தோழியை நோக்கி

**“பேதுற் றிசினே – காதல்அம் தோழி!**
**காய்கதிர் திருகலின் கனைந்துகால் கடுகி,**
**ஆடுதளிர் இருப்பைக் கூடுகுவி வான்பூ,**
**கோடுகடை கழங்கின், அறைமிசைத் தாஅம்**
**காடுஇறந் தனரே, காதலர்: அடுபோர்”**

**(அகம் 135, 6-10)**

எரிகின்ற ஞாயிற்றின் வெம்மை மிகுவதால் காற்று மிகுதியாக விரைந்து வீச, அதனால் அசைந்தாடும் இருப்பை மரத்தின் இதழ் குவிந்த வெண்ணிறப் பூக்கள், யானையின் தந்தத்தினால் கடைந்து செய்த கழற்சிக்காயைப் போன்று பாறை மீது பரந்து கிடக்கின்ற காட்டினைக் கடந்து தலைவர் சென்றார். எம்மை விட்டுப் பிரிந்த எம் தலைவர் விரைந்து வருவார் என்று தெளிவுற்று இருந்த என் நெஞ்சம் கையற்றுக் கலங்கியது. மாமை நிறமும், தளிர் போன்ற அழகும் கெட்டொழிந்தன. பீர்க்கம் பூவினைப்போல பசலை நிறம் நெற்றியில் படர்ந்தது. ஓவியம் வரைவதற்குரிய அழகிய குளிர்ந்த கண்கள் அழுமாறு துன்பம் மிக, ஆதி மந்தியைப் போல நான் அறிவு திரிந்து மயங்கித் துன்புற்றிருக்கின்றேன் எனப் புலம்புகின்றாள். பிரிவுத் துன்பம் அழகையும் அழித்தது, மனதையும் வதைத்தது, ஞாயிற்றின் வெப்பத்தைப் போன்றும், வெப்ப மிகுந்த பாறையில் கிடக்கும் இருப்பைப் பூக்களைப் போன்றும்

அவள்படும் வேதனை, காமூரைப் போல கலங்கிக்கிடக்கின்ற மனது, தலைவன் பிரிவினால் தலைவியின் துன்பப்புலம்பலாக உள்ளது. மனமும் அழகும் ஒரு சேர அழிந்து விட்டது. இருப்பை மரத்தின் இதழ் குவிந்த வெண்ணிறப் பூக்கள் போல இருந்த நான் தலைவன் பிரிவால் வெப்பமிக்க பாறையில் உள்ள பூப்போல வாடிக்கிடக்கின்றேன் எனப் புலம்பும் தலைவியைக் காணமுடிகின்றது.

**பகல் செய் பல்கதிர்ப் பருதி**

'வினையே ஆடவர்க்கு உயிரே' என்பதற்கு ஏற்ப, தலைவன் தலைவியைத் திருமணம் செய்தற் பொருட்டு பொருளீட்டச் செல்கின்றான். ஆகையால் வாழ்க்கையில் பொருள் அவசியம் என்பதை உணர்ந்த தலைவனாகக் காணப்படுகின்றான். பொருள் ஒரு தேவையாக இருந்தாலும் காதலிக்கு பிரிவு என்பது இறத்தலுக்கு நிகரானது என்பதை,

**"பகல் செய் பல்கதிர்ப் பருதிஅம் செல்வன்**
**அகல் வாய் வானத்து ஆழி போழ்ந்தென,**
**நீர்அற வறந்த நிரம்பா நீள் இடை,**
**கயந்தலைக் குழவிக் கவிஉகிர் மடப்பிடி**
**குளகுமறுத்து உயங்கிய மருங்குல் பலஉடன்**
**பாழஊர்க் குரம்பையின் தோன்றும் ஆங்கண்,**
**நெடுஞ்சேண் இடைய குன்றம் போகி**
**பொய்வ லாளர் முயன்றுசெய் பெரும்பொருள்**
**நம் இன்று ஆயினும் முடிக, வல்லென,**
**பெருந்துனி மேவல்! –நல்கூர் குறுமகள்!"**

**(அகம்:229, 1-10)**

எனும் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் பாடலில் சூரியன் சுட்டெரிக்கும் வேளையில் பாலை நிலத்தில் வறண்ட நிலப்பரப்பில் தன்

கன்று நீர் உண்ண வேண்டி உணவு உண்பதை மறுத்தது. அதனால் உடல்மெலிந்து, பாழ்பட்ட ஊரில் சிதைந்த குடிசை போல் காட்சியளித்து. அப்படிப்பட்ட பகல்பொழுதில் கொடிய காட்டின் வழியே தலைவன் பொருளீட்டச் சென்றுள்ளான். தலைவன் வருவதற்குள் அவனது நினைவுகள் தலைவியை இல்லாமலாக்கிவிடும் என்ற நிலை ஏற்படுகின்றது. அது மட்டுமல்லாது தலைவன் ஈட்டு வந்த பொருளை வைத்து தலைவனே சிறப்பாக வாழட்டும் என்று தலைவி விரக்தியில் பேசும் நிலையையும் ஏற்படுத்துகின்றது. பொருளீட்டப் பிரிந்தபோது ஏற்படும் மன உளைச்சல் தலைவியின் கையறு நிலைக்கு ஆட்படுத்தப்பட்டுள்ளது என்பதற்கு இப்பாடல் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இளவேனிற் பருவத்தைச் சுட்டிக்காட்டி தோழி ஆற்றியிருக்குமாறு கூற அதற்குத் தலைவி,

**“கோங்கும் கொய்குழை உற்றன: குயிலும்**
**தேம்பாய் மாஅத்து ஓங்குசினை விளிக்கும்**
**………………………………………………**
**மதவுடை நாக்கொடு அசைவீடப் பருகி,**
**குறுங்காற் காஞ்சிக் கோதை மெல்இணர்ப்**
**பொன்தகை நுண்தாது உறைப்ப, தொக்குஉடன்,**
**குப்பை வார்மணல் எக்கர்த் துஞ்சும்,**
**யாணர் வேனில் மன்இது-**
**மாண்நலம் நுகரும் துணைஉடை யோர்க்கே?**

**(அகம்:341: 2-3, 8-13)**

கோங்கம், காஞ்சி, மா மரங்களில் தளிர் தழைத்து அழகமைந்த சோலையாக உள்ளது. அச்சோலையில் உள்ள மா மரத்துக் கிளையில் இருந்துகொண்டு குயில் தன்துணையை அழைத்துக் கொண்டிருக்கின்றன.

அறுகம் புல்லை மேய்ந்த நாக்கோடு காளை மாடுகள் காவிரி நீரை அசதி தீரப் பருகிவிட்டு காஞ்சி மரத்தடியில் படுத்திருக்க, அதன் மீது காஞ்சி மலரின் பொன்னிறத் தாதுகள் உதிர, பொன்னிற மேனியுடன் மணல் குவியலுக்குச் சென்று படுத்து உறங்குகின்றது. இப்படிப்பட்ட இந்த இன்பவேனில் தன் உடலின்பத்தைத் துய்க்கும் காதல் துணைவர் உள்ளவருக்குத்தான். அவர் அருகில் இல்லாத எனக்கு இல்லை என்கின்றாள் தலைவி. மா, காஞ்சி, கோங்கம் போன்ற மரங்கள் தளிர்த்து அழகுற இருப்பதாகவும், குயிலும் காளையும் இன்புற்று இருப்பதாகவும் தலைவி கூறுகின்றாள். அவற்றின் இன்பம் தலைவிக்குத் துன்பமாக உள்ளது. இனிய வேனிற்காலம் வந்தும், தலைவன் வரவில்லை. அதனால் தான் பெற்ற பயன்தான் என்ன? துணையைப் பிரிந்து வாழும் யாம் உயிர் பிழைத்து வாழ முடியுமா? என்று கேட்கின்றாள் தலைவி. நீர்நிலைகளில் பிற உயிரினங்கள் இளவேனிற் பருவத்தே இன்பம் துய்த்து இனிதே வாழ்கின்ற போது, நான் மட்டும் துன்பத்துடன் வாழ்வதைவிட உயிர்விடுவதே மேல் என வாழ்வின் எல்லைக்குச் சென்றுவிடுகின்றாள் தலைவி. மனம் மகிழ்ச்சியுடைய தலைவனோடு வாழவேண்டிய எல்லாக் காலமும் கடந்து போய் விட்டது. காத்திருப்பு மனதில் கலக்கத்தை உருவாக்குகின்றது. கார், பனி, காலம் போய் வேனிற்காலம் வந்த பின்பும் தலைவன் வராது இருக்கும் போது, வாழ்வதில் என்ன பொருள் இருக்கின்றது. தலைவன் அருள் (அன்பு) இருந்தால் போதும் என்று நினைக்கும் தலைவிக்கு அது கிடைக்காத போது வாழ்ந்தும் பயனில்லை என்ற இறுதி முடிவுக்கு வந்துவிடுகின்றாள்.

அதேபோல் மற்றுமோர் தலைவி, தோழியை நோக்கி இளவேனிற் பருவத்தே சோலைகள் தோறும் குயில்கள் கூவிக் கொண்டிருக்கின்றன. நம் தலைவனோ பொருளை விரும்பி என் மேல் சிறிதும் அருள் இன்றிச் சென்றவன் இன்னும் வரவில்லை எனத் தலைவி புலம்புகின்றாள்.

கிளைகள் தளிர்த்த மாமரச் சோலையில் குயில்கள் அமர்ந்து கொண்டு கூவுகின்றன. மலர்களில் வண்டினங்கள் இசை எழுப்புகின்றன. பிரியும் பொழுதே இன்னாமையைத் தருவதாகிய இளவேனிற் காலத்தில் பொருள்வயிற்பிரிவது ஆடவர்க்கு இயல்பாகும். மாமரங்கள் செழுமையாக தளிர்களை ஈன்றன. குயில் அம்மரத்தின் கிளைகளில் அமர்ந்து தன் இனிய குரலால் பலமுறைக் கூவி நீர் நிலைகளை அடுத்துள்ள பூஞ்சோலையில் உள்ள மரங்களின் கிளைகளில் உள்ள இலைகள் உதிர, அக்கிளைகளில் மலர்ந்த பூக்களில் கிடக்கும் வண்டினங்களானது யாழில் வல்லவன் இசைக்கும் பாலைப் பண்ணின் இசைப் போன்று ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கும். அத்தகு அழகு மிகுந்த சோலைகளில்

**"தாதுஉகு தண்பொழில் அல்கி, காதலர்**
**செழுமனை மறக்கும் செவ்வி வேனில்**
**தானே வந்தன்று ஆயின்"**

**(அகம்:355, 7-9)**

வீட்டை மறந்து மணந்த காதலர்கள் தூய மணல் மேட்டில் அமர்ந்து மகிழும் படியான இளவேனிற் காலம் வந்துவிட்டது. இவர்களைப் போல எனக்கும் தலைவனுடன் இருக்க ஆசை இருக்காதா? தோழியே நாம் தலைவனிடம் சென்று

**"இலங்குவளை நெகிழ்ந்த எவ்வம் காட்டிப்**
**புலந்தனம் வருகம் சென்மோ - தோழி !-**
**யாமே எமியம் ஆக: நீயே**
**பொன்நயந்து அருளிலை யாகி,**
**இன்னை ஆகுதல் ஒத்தன்றால் எனவே,"**

**(அகம்:355, 10-14)**

வலையல் நெகிழ்ந்து வீழ்வதைக் காட்டி துன்ப நிலையை எடுத்துக்கூறுவோம். நாம் இங்கே தனித்திருக்க நீ பொருளை விரும்பி எம்பால் சிறிதும் அருள் இன்றிச் சென்ற இடத்தில் தங்கிவிட்டாய். இவ்வாறு இருத்தல் தகுதிக்கு ஏற்றதன்று எனக்கூறி அவனோடு ஊடி வருவதற்குப் புறப்பட்டுச் செல்வோம் எனத் தலைவி பிரிவு ஆற்றாமையால் பிற தலைவியர் போல புலம்பாமல் ஒரு மன உறுதியோடு துணிச்சலுடன் கூறும் பாங்கினை அறிய முடிகின்றது. மரம் செடி கொடிகள் பூத்துக்குலுங்கும் புத்துணர்ச்சி தரும் காலமாக இளவேனிற் பருவம் உள்ளது. என்னுடைய அனைத்து வகையான துன்பத்திற்கும் உன் பிரிவுதான் காரணம் என்று தலைவனிடம் கேட்க வேண்டுமென்ற தலைவியின் ஆதங்கத்தின் வெளிப்பாட்டைக் காணமுடிகின்றது. பூஞ்சோலையில் உள்ள மரங்களில் உள்ள இலைகள் யாவும் உதிர்ந்து வாடிக் கிடப்பதைப் போல் நானும் வாடிக்கிடக்கின்றேன். வண்டின் இனிய ஓசை என் காதிற்குள் கேட்கின்றது. இணைபிரியாத காதலர்களை என் கண்கள் பார்க்கின்றது. மரத்திலுள்ள மலரின் மணம் மூக்கு நுகர்கின்றது. இளவேனிற் பருவம் என் மெய்தொட்டுத் துன்பத்தைத் தருகின்ற போது, என் மனம் மட்டும் எப்படி மகிழ்ச்சியாக இருக்க முடியும். ஐம்புலன்களையும் அடக்கி இருக்க நினைத்தாலும், இளவேனிற் பருவத்து எல்லா செயல்களும் எனக்கு ஒரு சேர தொல்லை தருகின்றன. பொருளே குறியாகச் சென்ற தலைவனுக்கு அருளைப் பற்றி என்ன தெரியும். அவனுக்கு அன்பு என்றால் என்ன என்பதை அறிவுறுத்தி வருவோம். அதை உணர்ந்திருக்கின்றாயா? எனக் கேட்டுத் தெரிந்து வருவோம். நாம் படும் வேதனை உனக்கு இல்லையா? என அவனிடம் ஊடி வருவோம் என்பது படத் தலைவி பேசுவதாக இப்பாடல் அமைகின்றது.

**தெறுகதிர் ஈரம் நைத்த நீர்அறு நனந்தலை**

பிரிந்து செல்லும் தலைவனுக்காக ஏதம் நினைந்து வருந்துகிறாள் ஒரு தலைவி. பிரிவிடை ஆற்றாது மெலிந்த தலைவியை நோக்கி, 'நீ தலைவன் வரும் வரை ஆற்றியிருக்க வேண்டும்' எனக் கூறுகின்றாள் தோழி. அதற்குத் தலைவி, 'நானோ ஆற்றிருக்க முயல்கின்றேன். என் கண்களோ அவரை மறக்க இயலாதவனாகி நினைந்து நினைந்து நீரைப் பெருக்குகின்றன. ஆயினும் நான் ஒருவாறு ஆற்றியிருப்பேன்' எனக் கூறுகின்றாள்.

**"……………………………….. தெறுகதிர்**
**ஈரம் நைத்த நீர்அறு நனந்தலை**
**ஆழல் மேய்ந்து உண்ட நிழல்மாய் இயவின்,**
**வறல் மரத்து அன்ன கவைமருப்பு எழிற்கலை,**
**அறல் அவிர்ந் தன்ன தேர்நகைஇ ஓடி,**
**புலம்புவழிப் பட்ட உலமரல் உள்ளமொடு,**
**மேய்பிணைப் பயிரும் மெலிந்து அழி படர்குரல்**
**அருஞ்சுரம் செல்லுநர் ஆள்செத்து ஓர்க்கும்,**
**திருந்துஅரை ஞெமைய, பெரும்புனக் குன்றத்து,**
**ஆடுகழை இருவெதிர் நரலும்**
**கோடுகாய் கடற்ற காடு இறந் தோரே!"**

**(அகம்:395, 5-15)**

இது எயினந்தை மகனார் இளங்கீரனார் பாடிய பாடலாகும். இப்பாடலில் ஞெமை மரமும், மூங்கில் மரமும் வெம்பிய பருவம் முதுவேனில் பருவமாகக் கூறப்படுகின்றன. முதுவேனில் காலத்து நிழலோ, நீரோ இல்லாத நிலப்பரப்பில் சூடு பறக்கும் புல்லை மேய்ந்து விட்டு கானல் நீரை உண்ண ஓடி வந்தும், நீரைப் பெறமுடியாமல் ஆண்மான் தன் பெண்மானை அழைக்கும் அவலக்குரல் ஆளின் குரல் போல் கேட்கும்

வழியைக் கடந்து நம் தலைவரும் செல்கின்றார். அது எத்தகு கொடுமையான வழி. அதை நினைத்து விட்டால் என் கண்கள் கண்ணீரை தாமாக உகுக்கின்றன. அழுது புலம்புகின்றன. உறங்காது கண்ணீரை உகுப்பதால், மழையில் நனையும் குவளை மலர் போன்று என் கண்கள் உள்ளன. நான் அவர் பிரிவுக்கு வருந்தவில்லை. மான்கள் துன்பப்படும் சிறுநெறியை உடைய அருஞ்சுரத்தை எவ்வாறு கடப்பாரோ என நினைக்கும் போது தான் ஆற்றாமை உண்டாகிறது. எனினும் நான் தலைவன் பிரிவினை ஆற்றுகிறேன் என்கின்றாள். இப்பாடலில் வெயிலின் கொடுமை, தண்ணீர் இல்லாது படும் துன்பம், போன்றவை காட்டப்படுகின்றன. இங்ஙனம் அமைந்த பல பாடல்கள் கலித்தொகையிலும் அகநானூற்றிலும் காணத்தக்கனவாய் உள்ளன. (கலி:20, 24: அகம்:37,45,185,187, 241,293,333,389,391)

**தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்குதல்**

“விளைச்சல் இல்லாத வேனிற்காலத்தில் முக்கியமாகப் பொருளீட்டல் காரணமாகப் பிரியும் பிரிவே பாலைக்கு உரியதாகக் காட்டப்பட்டுள்ளது. இது எந்நிலப் பின்னணியிலேயும் பாடப் படலாம். சிறப்பாகக் குறிஞ்சியே பாலைப் பின்னணியாக உள்ளது. முல்லை பிரிதல் பற்றியதாக இருந்தாலும் அங்கு நிகழும் பிரிதல் பெரும்பான்மையும் வினைவயின் பிரிவாகவே உள்ளது. பொருள்வயின் பிரிவு எல்லா நிலத்திற்கும் உண்டு”.[9] என்பர். அப்படி பாலைத் திணையின் வழியில் தலைவன் செல்லும்போது, தலைவன் காணும் அச்சங்கள், கோடையின் வெம்மை, வறட்சி, ஆறலைக் கள்வரின் தாக்குதல், உச்சிச் சூரியனின் கடுமை, செல்லும் வழியின் தொலைவு ஆகிய இவையாவும் தலைவன் பாலைநிலம் வழியாகச் செல்லும் கொடுமையான இயல்பைக் காட்ட உதவுகின்றன.

**வேனில் நீடிய வேய் உயர் நனந்தலை**

“பிரிவு வலித்த தலைவனின் கூற்றுக்கள், பிரிய விரும்பும் நெஞ்சினைத் தெருட்டிச் செலவழுங்க விரும்பும் அவனது விருப்பத்தை வெளியிடுவனவாக அமைந்துள்ளன. பிரிய விரும்பும் தலைவனின் நெஞ்சிற்குப் பொருளால் ஆகும் பயன்கள் நினைவுக்கு வருகின்றன. பிரிய மறுக்கும் தலைவனுக்குப் பொருளின் நிலையாமை மனத்துள்படுகிறது. தனது விருப்புடன் முரண்பட்ட நெஞ்சோடு கலந்துரையாடித் தலைவன் செலவழுங்குவிப்பதும் உண்டு.[10] பொருள்வயின் பிரியக் கருதும் தலைவன், தலைவியை நினைந்து நெஞ்சொடு கூறுகின்றான். வெப்பமும், வெறுமையும் நிறைந்த காலமாக வெயில்காலம் அமைகின்றது. திரும்பிய திசையெல்லாம் கானல்நீர் பட, கருகிய மரஞ்செடி கொடிகளைத் தலைவன் காணும் போது மனதில் ஒருவித வேதனை உண்டாகின்றது. சுரவழியில் இத்தகு காட்சியைக் கண்ட தலைவன்

**“ஆள் வழக்கு அற்ற சுரத்திடைக் கதிர் தெற,**
**நீள் எரி பரந்த நெடுந்தாள் யாத்து,**
**போழ் வளி முழங்கும், புலிலென் உயர்சினை,**
**முடை நசை இருக்கைப் பெடை முகம் நோக்கி,**
**ஊன் பதித்தன்ன வெருவரு செஞ் செவி,**
**எருவைச் சேவல் கரிபு சிறை தீய,**
**வேனில் நீடிய வேய் உயர் நனந்தலை:”**

**(அகம்: 51, 1-7)**

எனக் கூறுகின்றான். மனித நடமாட்டமே இல்லாத பாலை நிலத்து வழியிலே சுட்டெரிக்கும் வெயிலால் எரிந்து உயர்ந்தோங்கி இருக்கும் யா மரம். அம்மரக்கிளையில் ஊனாகிய இரையைப் பெரிதும் விரும்பி வீற்றிருக்கும் பெண்பருந்தின் முகம் நோக்கி, ஆண்பருந்தானது வெயிலில்

அதன் சிறகு கரிந்து தீய்ந்துபோகுமாறு. வேனிற்காலம் உள்ளது. உயர்ந்த மூங்கில்கள் நிறைந்த காட்டைக் கடந்து செல்ல வேண்டிருப்பதால் நெஞ்சே! நாம் இப்போது பிரிந்து சென்றால் தலைவி ஆற்றாது வருந்தி இறந்துபடுவாள். ஆதலால் அவளை விட்டுப் பிரிவதை மறந்து அவள் ஆற்றும் இல்லறக் கடமைகளில் நாமும் அவளுடன் மகிழ்ந்திருக்க வேண்டும் என்ற நினைப்புடன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான். பொருளைவிடத் தலைவியின் அன்பே சிறந்தது என நினைக்கும் தலைவனைக் காண முடிகின்றது. ஊன் இரை தேடி வரும் ஆண்பருந்தின் இறகுகள் தீய்ந்து போகும்படியான வெப்பம் மிகுந்த காட்டுப் பகுதி. அப்பருந்து போல் என் உடம்பு காய்ந்து போய்விட்டால், என் தலைவியோடு இல்லறக் கடமைகளை ஆற்றமுடியாது போய்விடும் என்பதுபடக் கூறும் தலைவனைக் காணமுடிகின்றது.

**வேனில் நீடிய வான் உயர் வழிநாள்**

பொருளீட்டும் பொருட்டுப் பிரியக் கருதும் தலைவனை நோக்கி தோழி, ''நீவிர் வினைமேற் செல்லும் பொழுது எம் தலைவியும் உடன் வருவாள்' எனக் கூறுகின்றாள். அதனை கேட்ட தலைவன் தோழி கேட்டுமாறு தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

மிக உயர்ந்த வழியில் சுட்டெரிக்கும் வெம்மையுடைய வேனில்காலத்தில் குளங்களில் நீர் வறண்டது. குடிப்பதற்குப் பயன்படாத கலங்கல் நீரினால் இளம் பிடியானது தன் தலையைக் கழுவியது. பின்னர் எஞ்சிய சேற்றோடு கூடிய நீரை ஆண்யானை தன் மீது ஊற்றிக் கொண்டு, மராமரத்தின் மீது தன் முதுகினைத் தேய்த்துக்கொண்டது. சூறாவளிக் காற்றினால் வீசி எறியப்படட பனை ஓலையின் ஓசையைக் கேட்ட ஆண்மான், தன் பெண்மானின் குரல் எனக் கருதி அச்சம் கொண்டு, தன் துணையினை அழைத்திடும். அத்தகைய இடர்பாடுகளை உடைய காட்டினை கடந்து செல்ல என்னுடன் என் தலைவி வருவாள்

எனக் கூறும் போது நகைப்பு தான் பிறக்கின்றது எனக் கூறுகின்றான். இதனை,

**"நாம் நகை உடையம் நெஞ்சே! – கடுந்தெறல்,**
**வேனில் நீடிய வான் உயர் வழிநாள்,**
**வறுமை கூரிய மண்நீர்ச் சிறுகுளத்**
**தொடுகுழி மருங்கில் துவ்வாக் கலங்கல்**
**கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணி"**

**(அகம்:121, 1-5)**

எனும் மதுரை மருதன் இளநாகனார் பாடல் மூலம் அறியலாம். களிறு தன் பிடியைக் கழுவியும், ஆண்மான் தனது துணையை அழைத்தும் தன் அன்பினை வெளிப்படுத்துவது போலத் தலைவனும் தன் தலைவியின் மீது அன்பினை பொழிகின்றான் என்பதை உணரமுடிகின்றது. கொடுமையான காட்டு வழியில் செல்வது ஆண்மகனின் கடமை. பெண் வருவது என்பது வழக்கத்திற்கு மாறானது. மரபை மீறுதல் என்பது, ஏற்றுக்கொள்ளத்தக்கதல்ல. சுட்டெரிக்கும் வெம்மை மிக்க கோடை வெயில், சூறாவளிக் காற்று வீசுகின்ற காட்டுப் பகுதியில், அச்சம் தரும் முகமுடைய குரங்குகள் நிறைந்த இடத்தைக் கடந்து வருதல் அவ்வளவு எளிதானதல்ல. மென்மைத் தன்மை நிறைந்த தலைவியால் வெளியில் வருவது என்பது நடைமுறையானதல்ல எனத் தலைவியின் தன்மையை அறிந்த தலைவன் நடக்காத காரியம் ஆதலால் அவனுக்கு நகைப்பாக உள்ளது.

**அலங்கு கதிர் வேய்ந்த அழல் திகழ் நனந்தலை**

பொருளீட்டும் பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிகின்றான். இடைவழியில் அவனுக்குத் தலைவியின் நினைவு வருகின்றது. அப்போது தன் நெஞ்சை நோக்கி நம்மைப் பிரிந்து வாழும் தலைவியின்

பிரிவாற்றாமையை எண்ணி அவள் துன்புற்று வருந்தி இருப்பாள். அவள் இரங்கத் தக்கவள் என்று வருந்திக்கூறுகின்றான்.

**“மரம்தலை கரிந்து நிலம் பயம் வாட,**
**அலங்கு கதிர் வேய்ந்த அழல் திகழ் நனந்தலை**
**புலிதொலைத்து உண்ட பெருங்களிற்று ஒழிஊன்**
**கலிகெழு மறவர் காழ்க் கோத்து ஒழிந்ததை:**
**ஞெலிகோற் சிறுதீ மாட்டி, ஒலிதிரைக்**
**கடல் விளை அமிழ்தின் கணம் சால் உமணர்**
**சுனை கொள் தீம் நீர்ச் சோற்று உலைக் கூட்டும்**
**சுரம் பல கடந்த நம் வயின் படர்ந்து: நனி**
**பசலை பாய்ந்த மேனியள், நெடிது நினைந்து”**
**(அகம்: 169, 1-9)**

எனும் தொண்டியாமூர்ச்சாத்தனார் பாடலில் வேனிற்காலத்தின் கொடுமை கூறப்படுகின்றது.

ஞாயிற்றின் கதிர்கள் சூழ்ந்த அகன்ற பாலை நிலம். வெப்பம் காய்தலால் மரங்கள் கரிந்து போயின. நில வளம் குன்றியது. புலியானது யானையைக் கொன்று உண்டு கைவிட்டுப் போன ஊனை ஆறலைக்கும் வீரர்கள் தங்கள் கோலிற் கோத்துக்கொண்டு செல்வர். எஞ்சிய ஊனை கடலில் உப்பினைக் கொண்டு வரும் உமணர்கள் தீக்கடைக் கோலால் தீயை உண்டாக்கி அதில் வாட்டி எடுத்து, சுனையிலிருந்து எடுத்து வந்த நீரோடு சேர்த்து உலையிற் போட்டு ஒன்று சேர்த்து ஊன் சோறு சமைத்து அனைவரும் உண்பர். அத்தகு சுரவழிகள் பலவற்றைக் கடந்து வந்துள்ள நம்மையே தலைவி நினைத்துக்கொண்டிருப்பாள். அதனால் பசலை நோய் உண்டாகும். கண்ணீரை வடித்துக்கொண்டு நம் நினைவால் தோள்கள் மெலிந்து பிரிவதால் துன்பம் மிக உழன்று நம்மையே நினைந்து உருகும் தலைவி இரங்கத்தக்கவள் என புலம்புகின்றான். உண்பதற்கு எதுவும்

கிடைக்காத சுரவழி, கொடிய விலங்குகள் உலவுகின்ற வழி, அத்தகு தன்மையுடைய சுரத்தினைக் கடந்து போகும் தன் தலைவனுக்கு ஏதம் ஏதும் நிகழ்ந்து விடுமோ? எனத் தலைவி புலம்புவதாக எண்ணுகின்றான் தலைவன். அவன் கூறும் கூற்றின் மூலம் வெயிலின் கொடுமையைக் கண்டு அவன் அச்சம் கொள்ளவில்லை என்பதையும், வேனிற்காலக் கொடுமையினையும் அறிய முடிகின்றது. தனக்காகத் தலைவி கவலைகொள்வதாக கூறுகின்ற தலைவனையும் காணமுடிகிறது.

**வேனிற் பாதிரிக் கூனி மாமலர்**

களவொழுக்கத்தில் தலைவியை அழைத்துக்கொண்டு செல்லும் தலைவன் வேனிற்காலத்தின் சுரமும், இடையூறும் கடந்து போகும் தலைவியைப் பார்த்து,

> **"வேனிற் பாதிரிக் கூனி மாமலர்**
> **நறைவாய் வாடல் நாறும் நாள், சுரம்**
> **அரிஆர் சிலம்பின் சீறடி சிவப்ப,**
> **எம்மொடு ஓர்ஆறு படீஇயர், யாழநின்**
> **பொம்மல் ஓதி பொதுள வாரி,**
> **அரும்பு அற மலர்ந்த ஆய்பூ மரா அத்துச்**
> **சுரும்பு சூழ் அலரி தைஇ, வேய்ந்த நின்**
> **தேம்பாய் கூந்தல் குறும்பல மொசிக்கும்**
> **வண்டு கடிந்து ஓம்பல் தேற்றாய், அணிகொள**
> **நுண் கோல் எல்வளை தெளிர்க்கும் முன்கை**
> **மெல்இறைப் பணைத் தோள் விளங்க வீசி,**
> **வல்லுவை மன்னால் நடையே – கள்வர்**
> **பகைமிகு கவலைச் செல்நெறி காண்மார்"**
>
> **(அகம்:257, 1-13)**

எனக் கூறுகின்றான். இது உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாடிய பாடலாகும்.

தலைவனுடன் போகத் துணிந்தாள் தலைவி. மணந்து கொள்ளத் தன்னுடன் காட்டு வழியில் வரும் தலைவியைத் தலைவன் பாராட்டுகின்றான். பாதிரிப் பூக்கள் கோடையின் கொடுமையால் வாடி நாற்றம் அடிக்கும் காட்டில், சிலம்பு அணிந்த உன் கால்கள் சிவக்கும்படி, நான் செல்லும் வழியில் நீ வருகின்றாய். உன் கூந்தலை வாரி அதில் மராம் பூவை சூட்டி நான் உன்னை அழகுபடுத்திவிட்டால், தோளை வீசிக்கொண்டு நீ நடக்கு முடியும். வெம்மையும் ஆறலைக் கள்வரால் உண்டாகும் ஏதமும் கொண்ட கொடிய பாலை நிலத்து வழியில் எம்முடன் சேர்ந்து வருவதற்கு துணிந்து கொண்டாய். உன் சீறடி சிவக்க கைகளை வீசி நடக்கும் ஆற்றலைப் பெற்றாய். இத்துணிவிற்குக் காரணம் என்மீது கொண்ட அன்பே காரணமாகும் என்று தலைவியின் துணிச்சலைப் பாராட்டுகின்றான். வேனிற்காலத்துப் பகற்பொழுது மிகுந்த துன்பம் தரக்கூடியது. அதனால் பொருட்படுத்தாது, பரல்கற்கள் நிறைந்த சுரவழியில் கால்கள் சிவந்து போகும்படியாக நடந்து வந்த தலைவியின் செயல் மூலம் வேனிற்காலத்து நிலையை அறிய முடிகின்றது.

மழை இல்லாத வறட்சியான பாலைவனம், ஆறலைக் கள்வர் வழிகளில் மறைந்திருந்து வழிப்போக்கரிடம் உள்ள பொருள்களைப் பறித்துக் கொள்வதும், யானை நீரில்லாமல் யா மரத்து பட்டையை உரித்து தின்னும் கொடுமையும் பாடல்களில் கூறப்பட்டுள்ளன. துன்பம் தரும் இடங்களை எல்லாம் கடந்து தலைவி வருவதற்கு காரணம் தலைவன் மேல் கொண்டுள்ள அன்பே என்பதை புலப்படுத்துகின்றது.

**ஒரு தனி நெடுவீழ் உதைத்த கோடை**

பொருள்மீது கொண்ட ஆசையினால் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் நெஞ்சோடு புலம்புகின்றான். பெரிய அடியினை உடைய ஆலமரத்தில் தனித்து வீழ்ந்திருக்கும் விழுதினைக் கோடைக்காற்றானது

மோதி அசைக்கின்றது. அந்த ஆலமரத்தில் இருந்த ஆணும் பெண்ணுமான இரட்டைப்புறாக்கள் அவ்விடத்தை விட்டுச் செல்லும்படியாகக் கோடைக்காற்று வீசுகின்றது. அத்தகு கொடுமையான இடைச்சுரத்தில் பொருள்தேடச் செல்கின்றோம். நெஞ்சே! நம் தலைவி, நம்மைக் காண வேண்டுமென்ற விரதங்கொண்டுள்ள நெஞ்சத்தோடு வேறுதுணையின்றி பகற்பொழுதே தனக்குத் துணையாக வருந்தி இருப்பாள் என்று கூறுவதன் மூலம் தலைவி மீது கொண்ட அன்பு வெளிப்படுகின்றது. ஆலமரத்திலிருந்தும் இரட்டைப்புறாக்கள் சேர்ந்தே அவ்விடத்தை விட்டுச் செல்கின்றது. ஆனால் நானோ, தலைவி பிரிவுத் துன்பத்தில் வாடும்படி நான் மட்டும் அவளைப் பிரிந்து வந்துள்ளேன். அந்தப் புறாவைப் போல வாழ வேண்டும் என்ற உணர்வு நமக்கு வரவில்லையே என்பதுபட நினைக்கின்றான் தலைவன். இதனை,

**“ஒரு தனி நெடுவீழ் உதைத்த கோடை**
**துணைப்புறா இரிக்கும் தூய்மழை நனந்தலை,**
**கணைக்கால் அம்பிணை ஏறுபுறம் நக்க,**
**ஒல்குநிலை யாஅத்து ஓங்குசினை பயந்த**
**அல்குறு வரிநிழல் அசையினம் நோக்க”**

**(அகம்:287, 8-12)**

எனும் பாடல் வழி அறியலாம். விலங்குகளின், பறவைகளின் காதல் செய்கைகளிடையே இருவரின் காதல் நினைவுகளைக் காண முடிகின்றன. இயற்கைக் காட்சிகள், அஃறிணை உயிர்கள் ஆகியவற்றின் செயல்திறன் மூலம் தலைவன், தலைவி இருவரின் காதல் உணர்வுகளைக் காணமுடிகின்றன.

**இன்னா வேனில் இன் துணை ஆர**

முன்பொரு காலத்தில் பொருள் தேடிச் சென்று வந்த தலைவன் மீண்டும் பொருள் தேடச் தூண்டும் நெஞ்சினை நோக்கி, தலைவியைப் பிரிவதால் வரும் துன்பத்திற்கு அஞ்சி வருந்துகின்றேன். அதனை நினையாது பொருள் மேற்சென்று மீளும் மகிழ்ச்சியை உடையதாய் இருக்கின்றாய். நாம் செல்லுகின்ற அருவழியில் யா மரம் இருக்கின்றது. அதனைக் கண்ட களிறானது சினம் கொண்டு அதன் கொம்பு முரியும் அளவுக்கு அம்மரத்தின் பட்டைகளைப் பிளந்து, தன் பெண்யானைக்கு ஊட்டும். அத்தகைய துன்ப நிலை கொண்டிருக்கும் கோடைக்கால வெம்மையை உடைய சுரவழியில் நம் தலைவியை அழைத்துக்கொண்டு செல்லுதற்கு அரியன அல்ல. ஆயினும் தலைவியை அழைத்துக்கொண்டு செல்வது அரிது. நெஞ்சமே! என்னை வருத்தாதே, தலைவி அடையும் துன்பத்தைத் தாங்கிக்கொள்ள முடியாது. அதனால் பொருளீட்டுமாறு என்னை வருத்தாதே' என்கின்றான். பொருளினும் தலைவியுடன் இருத்தலே சிறந்தது என நினைக்கும் அன்பிற்குரியவனாகத் தலைவன் விளங்குதலைக் காண முடிகின்றது. இதனை,

**"யானும் அறிவென் மன்னே, யானை தன்**
**கொல்மருப்பு ஒடியக் குத்தி, சினம்சிறந்து,**
**இன்னா வேனில் இன்துணை ஆர,**
**முளிசினை மராஅத்துப் பொளிபிளந்து ஊட்ட,**
**புலம்புவீற் றிருந்த நிலம்பகு வெஞ்சுரம்**
**அரிய அல்லமன்".**

**(அகம்:335, 4-9)**

என்ற மதுரைத் தத்தங்கண்ணனார் பாடல் வழி அறியலாம். பொருள் இல்லாதார்க்கு ஈதல் இயலாது என்பதனைத் தலைவன் அறிந்திருந்தாலும், தலைவியைப் பிரிய மனமில்லாத அன்பான தலைவன்.

இணையான இரண்டு யானைகளும் இணை பிரியாது இருக்கின்றன. துன்பம் தருகின்ற வேனிற்காலமாக இருந்தாலும் இன்பம் பெறுகின்ற தன் பிடி உண்ணுவதைக் கண்டு களிறு இன்பமடைகின்றது. இதுபோல் நானும் தலைவிக்கு இன்பம் தரவில்லையே என மனம் வேதனை அடையும் தலைவனைக் காணமுடிகின்றது.

மற்றுமோர் தலைவன் இடைச்சுரத்துத் தலைவியை நினைத்துக் காதல் மிகுதியாக அது தணியாது புலம்புகின்றான்.

**“ ................................... கதிர்தெற,**
**கழல் இலை உகுத்த கால்பொரு தாழ்சினை**
**அழல் அகைந் தன்ன அம்குழைப் பொதும்பில்,**
**புழல்வீ இருப்பைப் புன்காட்டு அத்தம்,**
**மறுதரல் உள்ளமொடு குறுக,”**

**(அகம்:351, 5-9)**

எனும் பொருந்தில் இளங்கீரனார் பாடலில் தலைவன் தன் நெஞ்சை நோக்கி, வேற்று நாட்டில் விருப்பத்துடன் தங்கியிருந்தேன். இங்கு என் உறவினர்கள் என்னை வழியனுப்பி வைத்தனர். வேண்டிய அளவு பொருளைச் சேர்த்துக்கொண்டேன். என் குறை தீர்ந்து இப்போது ஊருக்குத் திரும்பச் செல்கின்றேன். இதனை என் தலைவி அறிவாளோ, அறியமாட்டாளோ எனக்குத் தெரியவில்லை. என் தலைவியை விட்டு பிரியும் போது, வெயிலின் காய்ச்சலால் இருப்பை மரங்களின் இலைகள் உதிர்ந்திருந்தன. மரச்சோலையில் கூட அனல் பறந்தது. அந்தக் காட்டு வழியில் நான் திரும்பி வருவேன் என்று எண்ணிக் கொண்டு, எத்தனை நாட்கள் ஆகிவிட்டன என்று சுவரில் போட்ட வட்டங்களை எண்ணிப் பார்த்து அழுதுகொண்டிருப்பாள் எனக் கூறுகின்றான். என்னை நினைக்கும் பொழுதெல்லாம் பல்லியானது நல்நிமித்தமாக ஒலி எழுப்புவதாக நினைத்து என் வருகைக்காக மகிழ்ச்சியோடு எதிர்பார்த்து

இருப்பாள் என மன வருத்தம்கொள்கின்றான். ஞாயிறு சுட்டெரிக்க, இலைகள் உதிருமாறு காற்று சுழன்றடிக்க, இருப்பை மரங்களின் தளிர்களும், பூக்களும் வெப்பத்தால் கருகிப் போய்விட்ட அத்தகு கொடுமையான சுரவழியில் தான் வருவது கூட தலைவனுக்குத் துன்பமாகத் தெரியவில்லை. தலைவி தன்னைப் பிரிந்து துன்பப்படுவாளே என்றுதான் தலைவன் கவலைப்படுகிறான் என்பது புலனாகின்றது. கோடை காலத்தில் நிலத்தின் வெப்பம் தணியாது இருக்கும். அதுபோல இருவரும் பிரிந்திருப்பதால் காதல் வெப்பம் தணியாது இருக்கின்றன என்பதை அறியமுடிகின்றது.

**கடுவெயில் திருகிய வேனில் வெங்காட்டு**

தான் பொருள்வயிற் பிரிகின்றமையை உணர்ந்து தலைவி வருந்துதலை அறிந்த தலைவன் 'இத்தகையாளை விட்டுப் பிரிவேன் என்று என் நெஞ்சு கருதுமாயின் அது மிகக் கொடியதே' எனக் கூறிக்கொள்கின்றான்.

**"……................................... செந்திலை**
**அமைஆடு அம்கழை தீண்டி, கல்லென**
**ஞெமைஇலை உதிர்த்த எரிவாய்க் கோடை**
**நெடுவெண் களரி நீறுமுகந்து சுழல**
**கடுவெயில் திருகிய வேனில்வெங் காட்டு,**
**உயங்குநடை மடப்பிணை தழீஇய, வயங்குபொறி,**
**அறுகோட்டு எழிற்கலை அறுகயம் நோக்கி,**
**தெண்நீர் வேட்ட சிறுமையின், தழைமறந்து,**
**உண்நீர் இன்மையின் ஒல்குவன தளர,**
**மரம்நிழல் அற்ற இயவின் சுரன்இறந்து".**

**(அகம்:353, 6-15)**

என்கின்றான் தலைவன். வெம்மையுடைய கோடைக்காற்றினால் உயர்ந்தோங்கிய மூங்கில் மோதி ஞெமை இலைகள் உதிர்கின்றன. கடு வெயிலில் காடு வெம்பிக் கிடக்கின்றது. பெண்மானைத் தழுவிக்கொண்டு கிளைக்கொம்புகளை உடைய ஆண்மான் தண்ணீரைத் தேடி வருந்துகின்றது. உண்ண நீர் இல்லாமையால் அவை தழைகளைக் கூட உண்ண விரும்பவில்லை. தளர்ந்த நிலையில் தங்க நிழலும் இல்லாமல் அவை வருந்துகின்றன. இத்தகைய பாலைநிலத்து நெடுவழியை நாம் கடந்து செல்ல வேண்டும் என எண்ணுகின்றான். கோடைக்காலத்தில் தலைவனும் பிரிவுத் துன்பத்தை அனுபவித்துதிருப்பதால்தான் இவ்வாறு கூறுகின்றான். வெப்பம், காற்றடித்து இலை உதிர்ந்து, புழுதிவாரிவரும்படி சுழன்றடிக்கும் காற்று வெஞ்சுரமான வழியில் தளர்ந்த பெண்மானுடன் ஆண்மான் நீர் பருகும் வேட்கையுடன் தழை உண்பதை விட்டுவிட்டு, தாகம் தீரத் தண்ணீர் தேடி அலைந்து மெலிந்து, தளர்வுற்று களைப்பு நீங்க நிழல் அற்ற மரங்கள் கொண்ட வழியை நாம் கடந்து செல்ல வேண்டும். இது தலைவன் நிலை.

நாள்தோறும் வரும் விருந்தினரைப் பேணுவதற்குத் தலைவியின் இல்லறத்தின் முன் இடப்பட்ட பந்தல் வருமையுற்று வாடி வருவோரைப் பாதுகாக்கும். பள்ளியறையில் பணிவான மொழிகள் பேசும் தலைவி, தாழை மடல் சேர்த்துப் பின்னிய அழகிய கூந்தலையும், பேரழகுக் கலன்களையும் உடையவள். இத்தகைய தலைவியின் குணப்பண்புகளை மனமே நீ நினைத்து மயங்குவாய் என நெஞ்சிடம் கேட்கும்போது, பொருளீட்டச் சென்ற வழிக்கொடுமையானதாக உள்ளது. ஆனால் தலைவியின் அழகு நலன் தன்னை ஆறுதல் படுத்துவதாக நினைக்கிறான். அன்புடையாளைக் கைவிட்டுப் பொருளீட்டும் வேட்கை கொண்டு இனிப்போதல் இல்லை எனத் தன் நெஞ்சை நோக்கிக் கூறுகின்றான். துன்பம் சுரவழி x தலைவியின் நினைவு மகிழ்ச்சி. தலைவியின் பிரிவு இழப்பு x பொருள் ஈட்டுதல் மகிழ்வு. தலைவனுக்கு

ஒன்றை இழந்து ஒன்றைப் பெறுதல் இயல்பானது என்பதை உணர்த்துகின்றது. விருந்தோம்பல் இல்லறக்கடமை இவைகள் பொருளில்லை என்றால் இந்த பண்புகளை செய்ய முடியாது. உடலும் மனமும் சேர்ந்த போராட்டம் தலைவனுக்கு அங்கே பொருளுக்கு இடமில்லை. அதாவது பிரிவின்போது மனதில் உணர்வுகள் தோன்றுகின்றன. உணர்வுகளுக்கு இடையே போரட்டங்கள் நிகழ்கின்றன. உடலும் மனமும் சேர்ந்த போராட்டத்தில் உண்மையான அன்பு வெளிப்படுவதைக் காணமுடிகின்றது.

**அழல்கான்று திரிதரும் அலங்கு கதிர்**

தலைவி தன்னைப் பிரிந்து இக்கோடைக்காலத்து துன்பத்தால் வருந்தி இல்லத்தே எவ்வாறு இருக்கின்றாளோ எனப் பொருள் தேடச் சென்றிருக்கும் தலைவன் புலம்புகின்றான். இதனை,

**"ஆளி நல்மான் அணங்குடை ஒருத்தல்**
**மீளி வேழத்து நெடுந்தகை புலம்ப,**
**ஏந்தல் வெண்கோடு வாங்கி, குருகு அருந்தும்**
**அஞ்சுவரத் தகுந ஆங்கண், மஞ்சுதப,**
**அழல்கான்று திரிதரும் அலங்குகதிர் மண்டிலம்**
**நிழல் சூன்று உண்ட நிரம்பா நீள் இடை**
**கற்றுஉரிக் குடம்பைக் கதநாய் வடுகர்**
**வில்சினம் தணிந்த வெருவரு கவலை,**
**குருதி ஆடிய புலவுநாறு இருஞ்சிறை**
**எருவைச் சேவல் ஈண்டுகிளைத் தொழுதி"**

**(அகம்:381, 1-10)**

எனக் கூறுகின்றான். தீப்போலும் வெப்பத்தினை ஞாயிறானது கக்கிச் செல்லும் கடத்தற்கரிய நீண்ட இடைச்சுரம் பொருளீட்டச் சென்றோம்.

பொலிவற்ற மேனியளாய், குவளை மலர்கள் போன்ற செவ்வரி படர்ந்த கண்கள் நீர் சொரிய பெருமூச்செறிந்து, துன்பம் மீக்கூர வருந்தி இருப்பாளோ? எனத் துன்பப்படுகின்றான் தலைவன். பொருளீட்டும் செயலால் இருவருமே துன்பப்படுகின்றனர். தலைவன் சுரவழியில் துன்பப்படுகின்றான். தலைவியோ பிரிவாற்றாது துன்பமடைகின்றாள். இவருடைய துன்பம் வாழ்க்கையின் எதிர்காலத்தில் இன்பம் பயப்பதற்கே. ஆளியானது களிறு வருந்துமாறு தந்தத்தைப் பறித்து உண்ணும் செயல் அச்சம்தருவதாகும். மழையில்லாத, நிழலில்லாத சுரவழியைக் கடந்துசென்று தலைவன் பொருளீட்டச் செல்வதற்குக் காரணமே இல்லறத்தில் இனிமேல் துன்பம் இல்லாது வாழ்வதற்கே என்பதாகும்.

இங்ஙனம் அமைந்த பாடல்கள் அகநானூற்றில் காணத்தக்கனவாய் உள்ளன. (அகம்:41,77,225,261,327,343,377) இவற்றில் கவின் தரு பொழுது இளவேனிற் பொழுதாக எடுத்துரைக்கப்படுகிறது. இருப்பை மலர், பாதிரி மலர் போன்ற மலர்களின் மூலம் இளவேனிற் பொழுதின் வருகை கூறப்படுகின்றது. இத்தகு கொடுமையான பொழுதில் துன்பப்படும் தலைவியைத் தோழி ஆற்றுவிக்கின்றாள்.

**தோழி ஆற்றுவித்தல்**

தலைவன் சென்ற சுரத்தில் காணலாகும் இயற்கைப் பின்புலங்கள் தலைவிக்கு ஆறுதல் தரும் விதத்தில் எடுத்துரைக்கப்படுகின்றன. ‘‘இயற்கையில் காணப்படும் அன்புறு காட்சிகளைக் கண்டு தலைவன் விரைவில் மீள்வான் என நம்பிக்கை ஊட்டுகிறாள் தோழி. வறட்சிமிக்க சூழலிலும் அன்பு மிகுதியைக் காட்டி வறட்சித் துன்பத்தை உணரவிடாது செய்யும் இயற்கை உயிர்கள் தலைவனுக்கு அன்பின் பெருமையை நினைவுறுத்தும் என ஆறுதல்படுத்துகிறாள். பெடைகளின் துன்பங்களை தாம் ஏற்று வாழும் ஆணினங்கள், வளம் வற்றிய போதும் உளம் ஒன்றித் துன்பத்தை பகிர்ந்து வாழும் இயற்கைக் காட்சிகள் தலைவனை

மீளுமாறு செய்யும்'' எனத் தேற்றுகின்றாள்.[11] பிரிவினால் துன்பப்படும் தலைவியைக் கண்டு பலவாறு ஆற்றுவிக்கின்றாள்.

**விளங்கு பகல் உதவிய பல்கதிர் ஞாயிறு**

தலைவனின் பிரிவை ஆற்றாது பெரிதும் வருந்திய தலைவியை நோக்கி, 'தலைவன் உன்னிடத்தில் பெரிதும் அன்புடையவன். அவன் சென்ற பாலை வழியில் ஆண்யானைத் தன் பெண்யானையின் பசி போக்கும் பொருட்டு சுனையில் உள்ள நீர்ப்பாசிகளை பிய்த்து தின்னக் கொடுக்கும். பின்பு பெண்யானையுடன் உறங்கிக்கிடக்கும். இந்நிகழ்ச்சியைக் கண்டவுடன் தலைவன் உன்னை நினைத்து மீள்வான்' எனத் தோழி ஆற்றுவிக்கின்றாள். இப்பாடலில் வேனிலின் கொடுமை கூறப்பட்டுள்ளதை அறியலாம். நீர் இல்லாமல் மரங்கள் தழைகள் இல்லாது கிளைகளை மட்டும் தாங்கியுள்ளன. தன் பசியினைத் தீர்க்காது பிடியின் பசியைப் போக்கும் களிற்று யானையின் அன்பு(அருள்) வெளிப்படுவது கொடுமையிலும் இன்பமாகத் தெரிகின்றது. உன்பால் அன்புடையவன் ஆதலால் தலைவன் கண்டிப்பாக வருவான். அவன் மறந்தாலும் கொடுமையான காட்டிடைக் காணும் யானையின் அன்புக் காட்சியினைக் கண்ட அளவில் உன் நினைவு தலைவனுக்கு வந்துவிடும் எனக் கூறுகின்றாள்.

**"விளங்கு பகல் உதவிய பல்கதிர் ஞாயிறு**
**வளம்கெழு மா மலை பயம் கெடத் தெறுதலின்,**
**அருவி ஆன்ற பெருவரை மருங்கில்**
**சூர்ச் சுனை துழைஇ நீர்ப்பயம் காணாது,**
**பாசி தின்ற பைங் கண் யானை**
**ஓய் பசிப் பிடியொடு ஒரு திறன் ஒடுங்க,**
**வேய் கண் உடைந்த வெயில் அவிர், நனந்தலை**
**அரும் பொருள் வேட்கையின் அகன்றனர் ஆயினும்,**
**பெரும் பேர் அன்பினர் - தோழி!''**

**(அகம்:91, 1-9)**

எனத் தலைவனின் அன்புடைமை கூறப்படுகின்றது. இது பாலை பாடிய மாமூலனாரின் பாடலாகும். முதுவேனிற் பருவத்தில் நீர் இல்லாமல் சுனைகள் வறண்டுக் காணப்படுவதும் உண்டு. இங்கு நீர் வேட்கையால் வருத்தமடையும் ஆண்யானை பசியால் நீர் இல்லாத சுனையில் படர்ந்திருக்கும் பாசியினை தின்று தன் பிடியுடன் ஒடுங்கிக் கிடக்கும். மூங்கிலின் கணுக்கள் உடைந்து தெறிக்குமாறு வெப்பம் மிகுந்த கானகத்தைக் கடந்து தலைவர் சென்றுள்ளார் எனக் கூறப்படுகின்றது. இதில் பாசி என்பது பொருள் மீது கொண்ட ஆசை, களிறு என்பது தலைவன், பிடி என்பது தலைவி. முதுவேனிற் பருவத்துத் தலைவன் வாராத செய்தி நேரடியாகக் கூறப்படாது கருப்பொருள் மூலம் உணர்த்தப்பட்டுள்ளமை காணலாம். மழை இல்லாது நீரில்லாமல் இருக்கும் சுனை போல முதுவேனிற் பருவத்தில் தலைவன் வாராது தலைவி வருந்தியிருக்கும் நிலை உணர்த்தப்படுகின்றது. தலைவி மேல் உள்ள பேரன்பின் காரணமாக களிறு தன் பிடியுடன் சேர்வதைப் போல தலைவனும் தலைவியுடன் சேர்வான் என்று துன்பத்தில் இருக்கும் தலைவிக்கு நம்பிக்கையூட்டுபவளாகத் தோழி இருக்கின்றாள்.

**காடுகவின் அழியும் கோடை**

பொருளீட்டச் சென்று தலைவன் திரும்பி வராது காலம் நீட்டிப்பதை புலம்புகின்றாள். அதனை அறிந்த தோழி தலைவியை ஆற்றுவிக்கின்றாள். தலைவியை நோக்கித் தோழி,

**“பகடுதுறை ஏற்றத்து உமண்விளி வெரீஇ,**
**உழைமான் அம்பிணை இனன் இரிந்து ஓட**
**காடுகவின் அழிய உரைஇ, கோடை**
**நின்றுதின விளந்த அம்பணை, நெடுவேய்க்**
**கண்விடத் தெறிக்கும் மண்ணா முத்தம்**
**கழங்கு உறழ் தோன்றல,”**

**(அகம்:173, 10-15)**

எனக் கூறுகின்றாள். இது முள்ளியூர்ப்பூதியார் பாடலாகும். தலைவி மீது விருப்பமுடைய தலைவன் தன் கடமையினின்று மாறாது வினை முடித்து வருவான். வரும் வழியில் உமணர் எருதுகளை அதட்டி ஓட்டும் ஒலியைக் கேட்டு ஆண்மானும், பெண்மானும், அஞ்சி ஓடும். கோடைக் காலத்து வெப்பம் பரவி நிலைத்து நின்றதனால் காடுகளின் அழகு அழிந்தும், வெப்பத்தால் மூங்கில் வெடித்து முத்துக்களைச் சிதறி குழிகளிலே விழச் செய்யும். இத்தகைய மலையைக் கடந்து சென்ற நம் தலைவன் தன் கடமை மாறாது வினை முடித்து வருவான் என்று கூறும் தோழி கூற்றாக வரும் பாடலில் வெயிலின் கொடுமை கூறப்படுகின்றது. முதுவேனில் பருவத்தில் தான் வெயில் மிகுதியாக இருக்கும். விலங்குகள் கோடை வெப்பத்தால் மிக்க துன்பமடையும். அவ்வாறே தலைவியும் தலைவன் உடனில்லாமையால் மிக வருந்துவாள் என நேரடியாக உறுதிபடக் கூறும் தோழியைக் காணமுடிகின்றது.

**குயில் குரல் கற்ற வேனில்:**

மற்றுமோர் தோழி, பொருள்வயிற் காரணமாகப் பிரிந்த தலைவன் குறித்துக் சென்ற பருவம் வந்தும் அவன் வரவில்லை. அதனால் பிரிவாற்றாது வருந்துகின்ற தலைவியை நோக்கி, முற்றாத இளவேனிற் காலத்தை எதிர்நோக்கிய காட்டு மல்லிகை மலரும், பருத்த அடியை உடைய பாதிரியின் குறுகிய நுண்ணிய மலரும் சேர்ந்து, கருமணலிற் சிதறி அழகு செய்யும். குரா மரத்தின் அரும்புகள் மணம் வீசும் படியாக தென்றல் காற்று வீசும். மலர்களை கண்டு வண்டுகள் ஒலிக்கும். குயில்கள் கூவும். அத்தகைய வேனிற்காலத்தில் தூக்கமின்றி வருந்துமாறுவிட்டுச் சென்ற நம் தலைவன், பொருள் ஈட்டும் வினை காரணமாகச் சென்ற இடத்தில் தங்கமாட்டார். விரைந்து வருவார் எனக் கூறுகின்றாள். இதனை,

**“புன் காற் பாதிரி அரிநிறத் திரள்வீ**

**நுண்கொடி அதிரலொடு நுணங்குஅறல் வரிப்ப,**

**அரவுஎயிற்று அன்ன அரும்புமுதிர் குரவின்**

**தேன் இமிர் நறுஞ்சினைத் தென்றல் போழ,**

**குயில்குரல் கற்ற வேனிலும் துயில் துறந்து”**

**(அகம்:237, 1-5)**

எனும் தாயங்கண்ணனார் பாடல் வழி அறியலாம். இப்பாடலில் பாதிரிப் பூக்கள் மல்லிகை பூக்கள் இரண்டும் கருமணலிற் சிதறி அழகு செய்தலும், தென்றல் வீசுதலும், வண்டுகள் ஒலித்தலும், குயில் கூவுதலும் உடைய அனைத்து செயல்பாடும் இளவேனிற் காலத்தில் நிகழும் நிகழ்வு குறித்து கூறப்பட்டுள்ளது. இத்தகைய இளவேனிற் காலத்தில் காதலரோடு கூடின மகளிர்க்குப் பேரின்பம் தரக்கூடியதாகவும், காதலரை பிரிந்து இருப்போருக்கு பெருந்துன்பம் தரக் கூடியதாகவும் இருக்கின்றது. இன்பம்xதுன்பம் என்ற எதிர்வினைகளை உருவாக்கக்கூடியதாக இவ்விளவேனில் பொழுது இருக்கின்றது என்பதை அறியமுடிகின்றது.

**தலைவியைத் தலைவன் உடன் அழைத்து செல்லல்**

தலைவன் பிரிவினை உணர்ந்த தலைவி வருத்தமடைகின்றாள். அதுகண்ட தோழி தலைவனிடம் சென்று தலைவியையும் உடன் அழைத்துச் செல்ல வேண்டுகின்றாள். அதற்கு தலைவனும் உடன்பட்டான். இச்செய்தியைத் தோழி தலைவியிடம் சென்று கூறுகின்றாள். இதனை,

**“காடுதேர் மடப்பிணை அலற, கலையின்**

**ஓடுகுறங்கு அறுத்த செந்நாய் ஏற்றை**

**வெயில்புலந்து இளைக்கும் வெம்மைய,பயில்வரி**

**இரும்புலி வேங்கைக் கருந்தோல் அன்ன**

**கல்எடுத்து எறிந்த பல்கிழி உடுக்கை**

**உலறுகுடை வம்பலர் உயர்மரம் ஏறி,”**

**(அகம்:285, 5-10)**

எனும் காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடல் மூலம் அறியலாம். கூர்மையான பற்களால் ஊன் தின்னும் பெண்செந்நாயின் பசியைப் போக்க ஆண்செந்நாய் காட்டில் திரியும் பெண்மான் அலறும்படி ஆண்மானின் தசையைப் பிடுங்கிக் கொண்டு சென்று, வெயிலின் கொடுமை தாங்கமுடியாமல் இளைப்பாறும். அத்தகைய வெஞ்சுரத்து அருவழியில் என்னோடு வரட்டும் என்று தலைவன் கூறிய செய்தியைத் தோழி தலைவியிடம் மகிழ்ந்து கூறுகின்றாள். இதில் ஒருபுறம் தலைவி, தோழியின் மகிழ்ச்சி. மறுபுறம் காட்டில் ஆண்மான் இருக்கும் இடந்தேடி அலைந்து திரியும் பெண்மான். செந்நாய் வெயிலை வெறுத்து இளைப்பினை அடையும் என்பதிலிருந்து கானகத்தின் வெம்மை மிகுதியினை அறிந்து கொள்ள முடிகிறது.

**தோழியின் ஆற்றாமை**

பொருள்வயிற் பிரிந்த தலைவனை எண்ணி தலைவி வருந்துகின்றாள். அதனை அறிந்த தோழி தலைவியை ஆற்றுவித்து பின்வருமாறு கூறுகின்றாள்.

**“நிலம்நீர் அற்று நீள்சுனை வறப்ப,**
**குன்றுகோடு அகைய கடுங்கதிர் தெறுதலின்,**
**என்றூழ் நீடிய வேய்படு நனந்தலை,**
**நிலவுநிற மருப்பின் பெருங்கை சேர்த்தி,**
**வேங்கை வென்ற வெருவரு பணைத்தோள்**
**ஓங்கல் யானை உயங்கி மதம் தேம்பி,**
**பல்மர ஒருசிறைப் பிடியொடு வதியும்**
**கல்லுடை அதர கானம் நீந்தி,”**

**(அகம்:295 1-8)**

மழை பெய்யாது ஒழிந்த பாலை நிலத்தில் சிவந்த கதிர்களை உடைய ஞாயிறு வெப்பத்தால் நிலமானது நீரின்றி வற்றிப் போனது. அதனால் உலகம் மிகவருந்தித் துன்புற்ற காலத்துத் தலைவன் பொருள்வயிற் பிரிந்து சென்றான் என்பது இப்பாடலில் கூறப்பட்டுள்ளது. ‘பொருள்வயிற் சென்ற நிலத்தில் நீர் இல்லை. நிலத்தில் ஊறும் நீர் தரும் சுனை வறண்டு போயிற்று. குன்றின் அருகில் இருந்த மரக்கிளைகள் எரிந்தன. கடுமையான வெயில் காய்ந்த கோடையில் வெம்மை மிகுதியால் மூங்கில்கள் வெப்பம் பொறுக்காது வெடித்துச் சிதறின. வெப்ப மிகுதியால் ஆண்யானை பலமரங்கள் இருக்கும் பகுதியில் தன் பெண்யானையுடன் ஒடிங்கிக்கிடக்கும். இத்தகைய பரற்கற்கள் நிறைந்த பாதையைக் கடந்து தலைவர் சென்றுள்ளார். அத்தகுக் கொடுமையான சுரத்தின் வழியே பொருளீட்டச் சென்றுள்ள தலைவனுக்குத் தீங்கு வருதலை நினைக்காமல் பிரிவிற்கு வருந்தியிருக்கின்றாய். அவர் உன்னை விட்டு சென்றிருந்தாலும், விரைவாக வந்து உன் இன்னலைப் போக்கி இன்பம் தருவார் என ஆறுதல் கூறும் தோழியைக் காணமுடிகின்றது. கோடைக்காலத்து முதுவேனில் பருவம் தலைவன் தலைவி இருவருக்கும் துன்பம் தரும் பருவமாக இருக்கின்றது என்பதையும் உணர முடிகின்றது.

**தலைவனின் அன்பு கூறி ஆற்றுவித்தல்**

சங்கத் தலைவியர் பொருள்வயின் சென்ற தலைவர் தம் பிரிவைத் தாங்க முடியாதவர்களே தவிர அவர்மீது அன்பில் குறைபாடில்லாதவர்கள்: தலைவர் மீது நம்பிக்கை கொண்டிருப்பவர்கள். வெயில்காலத்திலும் தலைவன் வரவில்லையே என வருந்தியிருக்கும் தலைவியருக்குத் தலைவர் மீது நம்பிக்கை உண்டாகுமாறு ஆற்றுவிக்கும் தோழியர்களாகச் சங்க அகப்பாடல்களில் தோழியரைச் சங்க புலவர்கள் படைத்தள்ளனர்.

தோழி தலைவியை நோக்கி, ‘நம் தலைவன் தொலைதூரத்தில் இருக்கின்றான். தூரத்தில் இருந்தாலும் மிகுந்த அன்புடையவன்: ஆதலால் தவறாது வருவான்: வருந்தாதே’ என்கின்றாள். நம்பிக்கைதான் வாழ்க்கை அதை இழத்தல் கூடாது எனத் தோழி குறிப்பால் உணர்த்தித் தலைவனின் அன்பைத் தலைவிக்குப் புலப்படுத்துகின்றாள். தலைவன் வாராமைக்குக் காரணம் அவன் நீண்ட தொலைவில் உள்ள நாட்டில் இருப்பதும் காரணமாகலாம். இது சோகத்தில் உள்ளீடாய் இருக்கும் தலைவியின் மனத்தைத் தேற்றிக் கொள்வதற்காக கூறப்படுவது எனக் கருதலாம்.

தலைவன் பொருள்வயிற் சென்று வாராது கண்டு வருந்தும் தலைவியை நோக்கி,

**“மைஇல் பளிங்கின் அன்ன தோற்றப்**
**பல்கோள் நெல்லிப் பைங்காய் அருந்தி,**
**மெல்கிடு மடமரை ஓர்க்கும் அத்தம்,**
**காய்கதிர் கடுகிய கவின் அழி பிறங்கல்,**
**வேய்கண் உடைந்த சிமைய,**
**வாய்படு மருங்கின் மலைஇறந் தோரே?**

**(அகம்:399, 13-18)**

என ஆற்றுவிக்கின்றாள். பளிங்கு போன்ற தோற்றத்துடன் உதிர்ந்து கிடக்கும் நெல்லிக்காய்களை மேயும் மான்கள் மென்று கொண்டே கோவலர் ஊதும் புல்லாங்குழல் இசையை உற்றுக் கேட்கும். வெயில் கடுமையாகக் காய்வதால் மூங்கில் வெடித்து, அந்த கல்லுப்பாதை பொலிவு இழந்து காணப்படும். இத்தகைய மலைப்பகுதி வழியே தலைவன் சென்றுள்ளான். இப்படிப்பட்ட தலைவன் உன்னை வருத்தாது, தாகத்துக்கு நீர் அருந்துவது போன்ற உள்ளக் காதலோடு, அவர் பொருள் ஈட்டும் அவ்விடத்தில் காலம் நீட்டிக்க மாட்டார் எனக் கூறுகின்றாள். தலைவனின் சிறந்த குணங்களையும், அன்பினையும் சொல்லித் தோழி தலைவியை ஆற்றுவிக்கின்றாள். காலம்தான் நம்பிக்கைக்குரிய நண்பன்: காலத்தைப் பழித்துக் கூறாத சிறந்த மனநிலையில் தோழி ஆற்றுவிக்கும் விதத்தைக் காணமுடிகின்றது.

இங்ஙனம் அமைந்த பல பாடல்கள் கலித்தொகையிலும், அகநானூற்றிலும் காணத்தக்கனவாய் உள்ளன. (கலி:7,10,20,26,27,28, 29,30,31,32,33,35,36)(அகம்:25,27,69,187,201,211,213,233,259,277,293,393)

**செவிலி-நற்றாய் புலம்பல்**

தோழியைச் செவிலியின் மகளாகத் தொல்காப்பியர் குறிப்பிடினும், சங்க இலக்கியங்களில் இவர்களது தாய்-மகள் உறவு நிலையைக் கூறும் பாடல்கள் இல்லை.

சங்க அகப்பாடல்களில் தலைவியைப் பிரிந்து தாய் படும் துயரம் அளவிறந்து காட்டப்படுகிறது. மகட் போக்கிய தாய் தன்னை விட்டொழித்த தன்னை மறந்து துறந்த தலைவியை நொந்துரைக்கின்றாள். வளையாடும் கைகளில் விளையாடி நின்று உடலின்பம் தந்தவற்றையும், உணர்வோடு உறவாடி மன இன்பம் தந்தவர்களையும் விடுத்துச் சென்ற, தலைவியின் வன்னெஞ்சம் தாய்க்கு

வியப்பும், அதிர்ச்சியும் தருகின்றது.''[12] எனக் கூறும் கருத்து நினைக்கத்தக்கது.

**முகை தலை திறந்த வேனிற்**

களவொழுக்கத்தில் தலைவன் தலைவியர்க்குத் தடைகள் பல ஏற்பட்டன. ஆதலால் தலைவன் தலைவியை அழைத்துக் கொண்டு வெப்பம் மிகுந்த காட்டுவழியே செல்லலுற்றான். அதனை அறிந்த நற்றாய் தனது மகள் செல்லும் வழியின் அருமையையும், மகளின் மென்மையையும் கருதி வருந்திப் புலம்புகின்றாள்.

**“கனை எரி நடந்த கல்காய் கானத்து**
**வினை வல் அம்பின் விழுத் தொடை மறவர்**
**தேம் பிழி நறுங் கள் மகிழின், முனை கடந்து,**
**வீங்கு மென் சுரைய ஏற்றினம் தரூஉம்**
**முகை தலை சிறந்த வேனிற்**
**பகை தலைமணந்த பல் அதர்ச் செலவே?”**

**(அகம்:105, 12-17)**

எனும் தாயங்கண்ணனார் பாடலில் வேனிற்காலத்தின் கொடுமை கூறப்படுகின்றது. வேந்தன் விடுத்த கட்டளையை நிறைவேற்றுவதற்காக கறக்கச் சுறக்கும் மடி கொண்ட பசுவும், காளைகளும் கொண்ட ஆநிரைகளை அவன் (எழினி) கைப்பற்றிச் செல்லும் பாலை நில வழியும், மலைக்குகைகள் வெடிக்கும்படியான வேனிற்காலத்தில் பெற்றெடுக்காத தாய்மார்களையும், அவளது அரண்மனை செல்வத்தையும் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை தலைவி (புதல்வி). இவள் எப்படிக் கரடுமுரடான காட்டுவழியில் வெம்மை மிக்க, நிழலில்லாதக் காட்டுவழிச் செல்கின்றாளோ? என செவிலி புலம்புகின்றாள். வேனிற்பருவக் கொடுமையிலும் தலைவனுடன் செல்வது தலைவிக்கு இனிமையானது

நற்றாய்க்குக் கொடுமையாகிறது. தலைவனுடன் செல்வதால் தலைவிக்கு அச்சம் தரும் வழியெல்லாம் துச்சமாகத் தெரிகிறது.

**தெறுகதிர் உலைஇய வேனில் வெங்காட்டு**

தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்றதை அறிந்த செவிலித்தாய், தலைவியின் மென்மையையும், அவள் செல்லத் துணிந்த பாலை வழியின் கொடுமையையும் நினைத்து பெரிதும் வருந்துகின்றாள்.

**"நோகோ யானே: நோதகும் உள்ளம்:**
**அம்தீம் கிளவி ஆயமொடு கெழீஇ,**
**பந்துவழிப் படர்குவள் ஆயினும், நொந்துநனி,**
**வெம்பும்மண், அளியள்தானே - இனியே,**
**வன்க ணாளன் மார்புஉற வளைஇ,**
**இன்சொற் பிணிப்ப நம்பி, நம்கண்**
**உறுதரு விழுமம் உள்ளாள், ஒய்யெனத்**
**தெறுகதிர் உலைஇய வேனில் வெங்காட்டு**
**உறுவளி ஒலிகழைக் கண்உறுபு தீண்டலின்"**

**(அகம்:153, 4-13)**

எனும் சேரமான் இளங்குட்டுவன் பாடலில் செவிலித்தாய் தன் மகளை நினைத்து கூறுகின்றாள். என் உள்ளமும் நொந்து கொண்டிருக்கின்றது. நானும் நொந்து கொண்டு இருக்கின்றேன். இனிமையாகப் பேசும் தோழியருடன் சேர்ந்து விளையாடும்போது என் உடம்பு வலிக்கின்றது என்பாள். அத்தகைய தன்மை உடைய என் மகள் முதுவேனிற் காலத்துச் சுடுகின்ற கதிரவனின் வெம்மை காய்ந்த காட்டில், பெருங்காற்று வீசும்போது மூங்கில்கள் உரசி அங்குத் தீப்பற்றி, மூங்கிலின் கணுக்கள் உடைந்து தீப்பொறிகள் தெறித்துவிழும். உச்சி மலையே பற்றி எரியும் தன்மையுடையது. அந்த நிலம் காலடி வைத்து நடப்பதற்கு உகந்தது அல்ல. அதில் என் மகளால் எப்படி நடந்து செல்ல முடியும்? என்

மகள் சுரநெறியிற் சென்று வருந்துவாளே எனப் புலம்புகின்றாள். இதில் மகள் மீது தாய் கொண்ட அன்பு, தலைவன் மீது தலைவி கொண்ட காதல், இடைச்சுரத்தின் தன்மை, முதுவேனிற் பருவத்தில் சுடும்நிலை ஆகியன உணர்த்தப்படுகின்றன. அத்தகைய கொடுமையான வழியில் தலைவனுடன் செல்வது தலைவிக்கு இனிமையைத் தருகிறது. தலைவனுடன் செல்லத் துணிந்த தலைவிக்கு தைரியம் வரக்காரணம் தலைவன் மேல் கொண்ட காதலே என்பதை இப்பாடல் மூலம் அறியலாம். பயனற்ற வழியில் தலைவன் செல்கின்றான். அத்தகைய பயனற்ற வழியில் தலைவி செல்வது ஏற்படையதல்ல. இத்தகைய பயனற்ற வாழ்க்கையை வாழ நினைக்கும் தலைவியை எண்ணி செவிலி புலம்புகின்றாள்.

**அழல் எறி கோடை**

தலைவனோடு தலைவி உடன்போக்குச் சென்றதை அறிந்த செவிலித்தாய் பெரிதும் வருந்துகின்றாள்.

**“பொன்வார்ந்த தன்ன வைவால் எயிற்றுச்**
**செந்நாய் வெரீஇய புகர் உழை ஒருத்தல்**
**பொரிஅரை விளவின் புன்புற விளைபுழல்,**
**அழல்எறி கோடை தூக்கலின், கோவலர்**
**குழல் என நினையும் நீர்இல் நீள்இடை,**
**மடத்தகை மெலியச் சாஅய்,**
**நடக்கும் கொல்?’ என, நோவல் யானே”.**

**(அகம்:219, 12-18)**

எனும் கயமனார் பாடலில், கூர்மையான பற்களை உடைய செந்நாய் துரத்தத் தப்பி ஓடிவந்த மான் விளாமரத்து அருநிழலில் விளாம்பழத்தை உண்ண முயன்று கொண்டிருக்கும். அப்போது தீ எரிவது போன்ற வெப்பத்துடன் கோடைக்காற்று வீசுகின்றது. காற்றின் ஓசையை, கோவலர்

ஊதும் குழல் ஓசையோடு ஒப்பிட்டு அந்த மான் நினைத்துப் பார்க்கும். அத்தகைய நீரில்லாத நீண்ட சுரவழியில் என் மகள் மடப்பத்தையுடைய தன் அழகு கெடுமாறு மெலிந்து, நடப்பதற்கு வல்லமை உடையவளோ? என்று தான் நான் கவலைப்படுகின்றேன் எனத் தாய் புலம்புகின்றாள்.

கொடுமையான சுரவழியைத் தன் மகள் எப்படிக் கடந்து சென்றாளோ என வருந்துபவளாகத் தாய் காட்டப்படுகின்றாள். தலைவியின் மென்மைப் பண்புகளும், செயல்களும், உடன்போகத் துணிந்த வன்மை எண்ணங்களுடனும், கூடிய துணிவையும் அறியமுடிகின்றது.

மற்றுமோர் செவிலித்தாய் தன்னுடன் இருந்த காலத்தில் தலைவி கொண்டிருந்த வெள்ளை மனத்தையும், உடன் போகத் துணிந்த காலத்து அவள் கொண்ட வலிய உணர்வுகளையும் தாய் ஒப்பிட்டுப் பார்க்கின்றாள். தலைவி செல்லும் சுரத்தின் கடுமையை எண்ணித் தாயின் மனம் பதைக்கிறது. அவளது மெல்லிய சாயல் கொடிய விலங்குகள் திரியும் காட்டின் சிறுநெறியில் செல்லத் துணிந்த துணிவு ஒப்பிடப்படுகின்றது.

**"கடும்பகட்டு ஒருத்தல் நடுங்கக்குத்தி,**
**போழ்புண் படுத்த பொரிஅரை ஓமைப்**
**பெரும்பொளிச் சேயரை நோக்கி, ஊன்செத்து,**
**கடுங்கால் யாத்துப் பருந்துவந்து இறுக்கும்**
**சேண் உயர்ந்து ஓங்கிய வான்உயர் நெடுங்கோட்டுக்**
**கோடை வெவ்வளிக்கு உலமரும்**
**புல்இலை வெதிர நெல்விளை காடே".**

**(அகம்:397, 10-16)**

எனும் கயமனார் பாடல்வழி அறியலாம். பெருமையையுடைய ஆண்யானை மரம் அசையும்படிக் குத்திப் பிளத்ததால் புண் உண்டாகியது. ஓமை மரத்தின் பட்டையுரிந்த சிவந்த அடிமரத்தினை நோக்கி, அதனை ஊன் எனக் கருதி யாமரத்திலுள்ள பருந்து வந்து ஓமைமரத்தில் தங்கும். பெருமூங்கில்நெல் கோடைக்காற்றால் உதிர்ந்து கிடக்கும். இப்படிப்பட்ட காட்டில் முதுவேனிற் பருவத்தில் என் மகள் காதலனோடு சென்றுவிட்டாள் என்று செவிலி புலம்புகின்றாள்.

தலைவி தலைவனுடன் சென்றது தாய்க்கு அச்சமில்லை. அவள் சென்ற வழி கொடுமையானது. வெப்பம் மிகுந்தது என்பது தாயின் அச்சத்திற்கு பெரிதும் காரணமாகின்றது. யாமரத்தில் உள்ள பருந்து ஓமை மரத்திற்கு சென்று தங்குவது போல என் மகளை கவர்ந்து சென்றான் தலைவன். தலைவனைத்தான் குறைகூறுகிறாளே தவிர தலைவியை (தன் மகளை) தாய் குறைகூறுவதில்லை என்பதை அறியமுடிகின்றது.

## முடிவுரை

வேனிற் காலத்தில் காடு மிக்க கொடுமையானதாக இருந்தாலும், பொருளீட்டித் தலைவன் வருவான் என்ற நம்பிக்கையும், மனஉறுதியும், எதற்கும் அஞ்சாத வலிமையும் கொண்ட தலைவியைக் காண முடிகின்றது.

இளவேனில் காலத்தில் பாதிரிப்பூ, காட்டுமல்லி, குவளை மலர், முருக்கம் மலர், மாமலர் ஆகிய குறிப்புகள் காணப்பட்டாலும் பாதிரிப்பூ, குவளை மலர், காட்டு மல்லி ஆகிய மலரினை மட்டும், தலைவி தலையில் சூடுவதை அறிய முடிகின்றது.

வேனிற் பருவத்தில் தலைவன் பொருள் தேடச் செல்லும் பிரிவாக உள்ளது. பாலை நிலத்தைக் கடந்து செல்லும் வழியில் கோடையின் வெப்பம், வறட்சி, ஆறலைக் கள்வரின் தாக்குதல், உச்சி சூரியனின் கடுமை, வழியின் தூரம் ஆகியனயாவும் தலைவன் பாலைநிலம் வழியாகச் செல்லும் கொடுமையான பருவ இயல்பைக் காட்ட உதவுகின்றன.

தலைவனோடு உடன்போக்குச் செல்லும் தலைவிக்கு வேனிற்காலம் துன்பம் தந்ததாக இல்லை. இனிமையாகவே இருக்கின்றது. மரங்கள் தளிர்விட்டு வளமை தருவதாக இளவேனிற் காலம் உள்ளது.

முதுவேனிற் பருவம் மேற்காற்று வீசும் காலமாகும். உயிரினங்கள் இருக்கும் இடத்தை விட்டு ஓடுமளவிற்குக்குரிய வெப்பம் மிகுந்த காலமாகும். தாகம் தீர்க்கத் தண்ணீர் இன்றிக் கொடுமையான ஆறலைக் கள்வர்கள் வாழும் நிலமாக இக்காலத்தில் பாலை நிலம் உள்ளது.

முதுவேனிற் பருவம் வெயில், வறுமை, வறட்சி என அமைந்த இக்காலம் சில நேரங்களில் தலைவிக்கு அவநம்பிக்கையைத் தருகின்றது.

முதுவேனிற் பருவத்தில் வருந்தும் உயிரினங்களும், வாடும் பயிரினங்களும் அப்புலம் விட்டே ஓடும் குடிகளும் குறித்துக் கூறப்படுகின்றது. முகில் பெய்யாது கோடையால் அலைக்கழிக்கப்பட்டுத் தாகம் தீர்ப்பதற்குத் தண்ணீர் இன்றி வெண்மையால் வெந்து போகும் தன்மை காட்டப் பெறுகின்றது.

வெப்பம் மிகுந்த அவ்வழியில் பொருளீட்டத் தலைவன் செல்வதை நினைத்து ஒரு தலைவி வருந்துவதும், கொடுமையான காடாயினும் உடன் வருவேன் எனச் சொல்லத் துடிக்கும் மற்றொர் தலைவியும் பாடல்களில் காட்டப்படுகின்றனர்.

செழுமையாக வாழ்க்கை வாழ்ந்த தன் புதல்வி தலைவனோடு கொடிய காட்டிடை எவ்வாறு சென்றாளோ? எனப் புலம்பும் நற்றாயின் நிலையும் அகப் பாடல்களில் காட்டப்படுகின்றது.

வேனிற்பருவக் கொடுமையிலும் தலைவனுடன் செல்வது தலைவிக்கு இனிமையானது நற்றாய்க்குக் கொடுமையாகிறது என்பதை அறிய முடிகின்றது.

மகள் மீது தாய் கொண்ட அன்பு, தலைவன் மீது தலைவி கொண்ட காதல், இடைச்சுரத்தின் தன்மை, நண்பகற் பொழுதில் சுடும் நிலை ஆகியன (முதுவேனிற் பருவத்தில்) உணர்த்தப்படுகின்றன.

தலைவி தலைவனுடன் சென்றது தாய்க்கு அச்சமில்லை: அவள் சென்ற வழி கொடுமையானது: வெப்பம் மிகுந்தது என்பது தாயின் அச்சத்திற்குப் பெரிதும் காரணமாகின்றது. தலைவியின் மென்மைப் பண்புகளும், செயல்களும், உடன் போகத் துணிந்த வன்மை எண்ணங்களுடனும், வலிய இடங்களுடனும் ஒப்பிட்டுப் பார்க்கப்படுகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. நச். (உ.ஆ) தொல். பொருள். 12
2. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.26
3. மா.இராசமாணிக்கனார், இலக்கிய ஓவியங்கள், ப.126
4. வா.சா.பானு நூர்மைதீன், பழந்தமிழ் அகப்பாடல்களில் நிலமும் பொழுதும், ப.223
5. க.ப.அறவாணன், அற்றை நாள் காதலும் வீரமும், ப.21
6. கெ.செல்லத்தாய், சங்கப்பாடல்களில் கால நிகழ்வும், காதல் வாழ்க்கையும், ப.98
7. வா.சா.பானு நூர்மைதீன், மு.நூ.ப.231
8. இரா.மாயாண்டி, சங்க இலக்கியத்தில் கற்பனை, ப.151
9. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக் கவிதை மரபும், பக்:168-169
10. ஆ.இராமகிருட்டிணன், அகத்திணை மாந்தர் -ஓர் ஆய்வு, ப.173
11. மேலது, ப.94
12. மேலது, ப.195

# இயல் - 4

## பகற்பொழுதும் மாந்தர்கள் நிலையும்

### முன்னுரை

மனிதன் காலத்தை வரையறை செய்ததில் இரண்டாவதாக இடம்பெறுவது சிறுபொழுதுக் காலம் ஆகும். சூரியன் சந்திரன் ஆகிய கோள்களின் இயக்கத்தினால் பகல், இரவு என்ற ஒரு நாள் பொழுது பிறக்கிறது. அது ஆறு வகையாகப் பிரித்துப் பார்க்கப்படுகிறது. அது மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு எனும் வரிசையில் அமைந்துள்ளது. நாட்டார் வழக்காறுகளில் இப்பொழுதுகள் யாமம் என்பது – சாமம் என்றும், மாலை என்பது – அந்திப் பொழுது என்றும், சாயங்காலம் (பொழுது சாய) இரவு – ரா என்றும், நண்பகல் - மதியம் என்றும் பேசப்பட்டு வருகின்றன.

“காலம் என்பது உலகெலாந்தோன்றி ஒடுங்குதற்கிடமாயது. இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் வழக்கினுக்கு ஏதுவாயது. உலகம் வழங்கி வரும் இக்காலப் பகுதியை நாள் என்றும், வாரம் என்றும், மாதம் என்றும், பருவம் என்றும், ஆண்டு என்றும் மாந்தர் வரையறுத்திருக்கின்றனர்.”[1] இயற்கைச் சூழலில் ஆண்டின் கால நிகழ்வுகளைப் பெரும்பொழுதுகளாகவும், நாளின் கால நிகழ்வுகளை சிறுபொழுதுகளாகவும் பிரித்துள்ளனர்.

“சிறுபொழுது பாகுபாட்டிற்குத் துணையாய் இருப்பன ஞாயிறும் திங்களும் ஆகிய இரு சுடர்களாகும். இவற்றின் இயக்கத்தால் இரவும் பகலும் உருவாகி நாட்கூறுகள் உருவாகின்றன. இ∴து ஆறு வகைப்படும். அவை மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு எனும் வரிசையில் கூறப்படுகின்றன. சிலர் நாளின் தொடக்கம்

வைகறை என்றும், சிலர் நண்பகல் என்றும்,மற்றும் சிலர் மாலை என்றும் கூறுகின்றனர். ஆயின் நாள் தொடக்கம் வைகறை என்பதே பெரும்பான்மை வழக்கு."[2]

"சிறுபொழுதினைப் பகல்கூறு, இரவுக்கூறு என இரண்டாகப் பிரித்துள்ளனர். பகல்கூறு முற்பகல், நடுப்பகல் (நண்பகல்) பிற்பகல் என்றும், இரவுக்கூறு முதல் யாமம், இடையாமம், கடையாமம் என்றும் பகுக்கப்பெற்றுள்ளன. கதிரவன் தோன்றுவது முதல் மறைவது வரை மீண்டும் மறுநாள் தோன்றும் காலம் ஒருநாள் எனப்படும்."[3]

"மேற்குறித்த சிறுபொழுதுகளில் வைகறை என்பது இராப்பொழுதின் பிற்கூறு: விடியல் பகற்பொழுதின் முற்கூறு, எற்பாடு என்பது பகற்பொழுதின் பிற்கூறு; நண்பகல் பற்பொழுதின் நடுக்கூறு; யாமம் என்பது இராப்பொழுதின் நடுக்கூறு ஒவ்வொரு பகுதியும் பத்து நாழிகை கொண்டமையாகும்."[4]

**விடியல் - காலை 6 மணி முதல் 10 மணி வரை**
**நண்பகல் - பகல் 10 மணி முதல் 2 மணி வரை**
**எற்பாடு - பிற்பகல் 2 மணி முதல் 6 மணி வரை**
**மாலை - பிற்பகல் 6 மணி முதல் 10 மணி வரை**
**யாமம் - இரவு 10 மணி முதல் 2 மணி வரை**
**வைகறை - காலை 2 மணி முதல் 6 மணி வரை**

ஆறு சிறு பொழுதுகளில் மாலை பொழுதுக்குச் சிறப்புண்டு. மாலைப்பொழுது உயிரினங்கள் உழைத்து ஓய்ந்து இல்லம் திரும்பும் காலமாகும். அன்றாடப் பணிகளில் அயர்வு தீருவதற்காகப் பல்வகை ஆடல், பாடல் நிகழ்வுகளை நடத்தியும், நிலவுப் பயன் நுகர்ந்தும் இனிதாய் கழிப்பதற்குரிய பொழுதாகும்.

இவ்வாறு நாட்கள் சேர்ந்து வாரமாகவும், மாதமாகவும், பருவங்களாகவும், ஆண்டாகவும் வருகின்றன. ஒரு நாளின் ஆறு பொழுதுகள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் நிலத்தின் தன்மைக்கேற்ப அமைந்து, அதில் மாந்தர்களின் மன இயல்பை (தலைவன், தலைவி) அகநானூறு, கலித்தொகை பாடல்களில் ஆராயலாம்.

**வைகறைப் பொழுதில் தலைவியின் நிலை**

வயலும் வயல் சார்ந்த பகுதியாகிய, மருதத்திணையின் சிறுபொழுது வைகறை, விடியல் என்ற இரண்டு பொழுதுகளும் உள்ளடக்கியுள்ளது. வைகறை என்பது இரவும் பகலுமாக மாறுதவற்கு முன்புள்ள பொழுதாகும். வைகறைக் காலத்திற்குரிய நிகழ்வுகள் சங்க இலக்கிய அகப் பாடல்களில் கூறப்பெறுகின்றன. விடியற்காலைப் பொழுது பகற்பொழுதின் முற்கூறு என்றும், வைகறைப் பொழுது இராப்பொழுதின் பிற்கூறு என்றும் கூறப்படுகின்றன.

வயலும் வயல் சார்ந்த நிலப்பகுதியான மருதத்திணை, நாகரீக வளர்ச்சிக்கு முதன்மைத் தன்மை உடையதாக அமைவது, விவசாயத்தின் பொருட்டு வளமை அடைந்த நிலம் மருத நிலம். இங்குதான் சில நேரங்களில் தவறான வாழ்க்கை முறையினைத் தலைவன் பின்பற்றுவதைக் காணமுடிகின்றது. தலைவன் பரத்தையிடம் பிரிந்து செல்லும் சூழல் நிகழ்கின்றது. தலைவியைப் பிரிந்து தலைவன் பரத்தையிடம் பிரிந்து செல்கின்றான். இந்நிகழ்வு நடைபெறுவதற்கு வைகறைப் பொழுது உரித்தாக்குகின்றது. விடியற்காலைப் பொழுது யாவரும் அயர்ந்து தூங்கும் பொழுது சில நேரங்களில் தவறுகள் நிகழ்வதற்குரிய பொழுதாகவும் அமைகின்றது. பரத்தையிடம் சென்றவன் விடியற்காலைப் பொழுதில் தம் இல்லம் நோக்கி வருகின்றார். அப்போது தலைவியோ, தோழியோ வாயில் மறுத்து அவன் செய்த

செயலை மறைமுகமாகவோ நேரடியாகவோ, சுட்டிக்காட்டி வாயில் நேர்வதும் உண்டு. சில நேரங்களில் வாயிற் மறுப்பதும் உண்டு. இவ்வாறு தலைவன் தலைவியரின் ஊடல் நிகழ்வுக்குக் காரணமான பொழுதாக இப்பொழுது அமைகின்றன.

பரத்தையர் சேரியில் தங்கியிருந்து வந்த தலைவனிடம் தலைவி ஊடல் கொள்கின்றாள். இதனை

**பகுவாய் வராஅல் பல் வரி இரும் போத்துக்**
**கொடு வாய் இரும்பின் கோள் இரை துற்றி,**
**ஆம்பல் மெல் அடை கிழிய, குவளைக்**
**கூம்பு விடு பல் மலர் சிதையப் பாய்ந்து, எழுந்து,**
**அரில் படு வள்ளை ஆய் கொடி மயங்கி,**
**தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது**
**கயிறு இடு கதச் சேப் போல, மதம் மிக்கு,**
**நாள், கயம் உழக்கும் பூக் கேழ் ஊர!**
**வரு புனல் வையை வார்மணல் அகன் துறை,**
**திரு மருது ஓங்கிய விரி மலர்க் காவில்,**
**நறும் பல் கூந்தற் குறுந் தொடி மடந்தையொடு**
**வதுவை அயர்ந்தனை என்ப அலரே,"**

**(அகம்:36: 1-12)**

எனும் மதுரை நக்கீரர் பாடலில் தலைவி தலைவனுடன் ஊடல் கொள்வது கூறப்படுகின்றது.

நாள், கயம் உழக்கும் பூக்கேழ் ஊர”(அகம்:36,8) என்று தலைவி கூறுகின்றாள். இங்கு நாள் என்பது வைகறைப் பொழுதாகும். தூண்டிலில் சிக்கிய வரால்மீன், ஆம்பற் கொடியைக் கிழித்து, குவளை மலா்களைச் சிதைத்து, ஒன்றோடு ஒன்று பின்னிய வள்ளைக் கொடிகளையும் சிதைத்தது. பெரிய வரால்மீன் என்பதால் சினம் மிக்க எருதினைப் போன்று செருக்குற்று வைகறைப் பொழுதில் குளங்களைக் கலக்கிக்கொண்டு இருக்கும் வாரல் மீனை கரை சோ்க்க முடியாது தவித்துக்கொண்டிருக்கின்றான் தூண்டில் போட்டவன். இத்தகு நீா்வளம் நிறைந்த நாட்டுத் தலைவன் என்று தலைவி குறிப்பிடுவது, நீ பரத்தையிடம் சென்றது அலராகி ஊா்முழுவதும் தெரிந்து விட்டது. வைகறைப் பொழுதில் தூண்டிலில் சிக்கிய மீன் குளத்தைக் கலக்கியது போல, (நீ பரத்தையை மணம் செய்துகொண்டாய் என்று ஊரார் அலா் தூற்றுகின்றனா்) ஊரார் காணும்படி நீயும் அனைவரையும் கலக்க முறுமாறு செய்துவிட்டாய் என்று தலைவி கூறுகின்றாள். வைகறைப் பொழுதில் யாருக்கும் தெரியாமல் வந்துவிடலாம் என்று நினைத்த தலைவனுக்கு, அது எல்லாருக்கும் தெரிந்து அலராகிய பின்பு அவன் நிலைமை விரால் மீன் போல கலக்கத்தை ஏற்படுத்திவிட்டது. குளம் என்னும் இல்லறம் கலங்கிப்போய் இருக்கின்றது என்பதனைக் குறிப்பால் உணா்த்துகின்ற தலைவியைக் காணமுடிகின்றது.

மற்றுமோா் தலைவி, பரத்தையிடம் சென்று இல்லம் திரும்பிய தலைவனுடன் ஊடல் கொள்கின்றாள். மது நிறைந்திருக்கும் மலரினை உடைய கொடிகள் காற்றில் அசையும் வைகறைப் பொழுது. அப்பொழுதில் வரால்மீன் துண்டுகளை விற்று அதன்வாயிலாக நிறைகள்ளினை உண்டு களித்து, வேட்டைக்குச் செல்லும் நிலையினை மறந்து உறங்கும் பொழுது, அப்பொழுதில் அவா்களது மனைவியா்கள் புளிப்பும், இனிப்பும் மிகுந்த பழத்தினைக்கொண்டு புளியங்கறியைச்

சமைத்தனர் என்று வைகறைக் காலத்தினை குறிப்பிடுகின்றனர். இதனை,

**“நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து,**
**நாள்துறைப் பட்ட மோட்டு இரு வராஅல்**
**துடிக்கண் கொழுங்குறை நொடுத்து, உண்டு ஆடி,**
**வேட்டம் மறந்து, துஞ்சும் கொழுநர்க்குப் பாட்டி,**
**ஆம்பல் அகல் இலை, அமலை வெஞ்சோறு**
**தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து,**
**விடியல் வைகறை இரூடும்”.**

**(அகம்:196, 1-7)**

இதுவும் தலைவி கூற்றுக்குரிய பாடலாகும். பாணர்கள் வைகறைப் பொழுதில் மீன் வேட்டைக்குச் சென்று வரால் மீன்களைப் பிடித்து வந்து அதன் கொழுவிய துண்டத்திற்குப் பண்டமாற்றாக கள்ளினைப் பெற்று அதனை உண்டு மகிழ்ந்தனர். வேட்டைக்குச் செல்லாத கணவன்மார்கள் “அமலை வெஞ்சோறு, தீம்புளிப் பரம்பின் திரள்கனி பெய்து”, உண்டனர். சுடுசோற்றுடன் புளிப்பும், இனிப்பும் கலந்த திரட்சியான பழத்தினைக் கொண்டு ஆக்கிய புளியங்கறியை இட்டு உண்பிப்பர். அத்தகைய தன்மை உடைய ஊரன் எனத் தலைவி கூறுகின்றாள். இல்லறத்தில் கடமை தவறாது இருக்கும் கணவர்மார்கள், மனைவி சமைத்துக்கொடுத்த உணவினை உண்டு மகிழ்ந்து உள்ளனர். வேட்டைக்குச் சென்றவர்கள் கள்ளுண்டு மகிழ்கின்றனர். தலைவனே! நீ இதை இரண்டையும் விட்டுவிட்டு தகாத செயலைச் செய்து கொண்டிருக்கின்றாய். தன் தலைவி இட்ட சோற்றினை உண்டு இருக்கின்றனர் பிறமகளிரின் கணவன்மார்கள். நீரோ வேற்று இடம் தேடிச் சென்றுவிட்டு மீண்டும் வந்ததால் அவளைத் தழுவிய மார்பினை யாம் தீண்டமாட்டோம், எம் அருகே வராது ஒழிக எனக் கடுமையாகச் சாடுகின்றாள். வைகறைப் பொழுது, மக்கள் அனைவரும் இரவில் ஓய்வெடுத்து, அடுத்த நாள்

பொழுதிற்கு தயாராகும் மகிழ்ச்சியான பொழுதாகும். ஆனால் தலைவிக்கு அப்பொழுது மிகுந்த துன்பம் தரும் பொழுதாக உள்ளது.

ஆண்கள் சூரியன் எழுவதற்கு முன்னரே வேட்டைக்குச் சென்றுவிடுவா். அவர்களுக்கு இணையாக பெண்களும் வைகறையிலே சமையல் செய்து தமது இல்லறக் கடமையை முடித்துவிடுவா் என்பதை உணா்த்துகின்றது.

**வைகறைப் பொழுதும் காமகிழ்த்தியும்**

பரத்தையிற் பிரிவு என்பது மருதநிலத்திற்கு உரியது. இந்நிலத்தில் உற்பத்தி செய்கின்ற உற்பத்தி பொருளை தங்களுடைய பயன்பாட்டிற்கு பயன்பட்டது போக மீதம் உபரியாக இருப்பதால் பிற திணையில் உள்ள மக்கள் தங்களின் உற்பத்தி பொருளை விற்பனை செய்வதற்காக மருத நிலத்தை வியாபாரத் தளமாக நினைத்தனா்.

இதனால் இந்நிலம் ‘அதிகாரம்’ என்னும் வரம்பு பிளந்த இடமாக அறியப்பட்டது. இந்நிலத்தில் அதிகாரம் படைத்த ஆண் பக்கத்து நிலத்தையும் கையகப்படுத்தியதோடு மட்டுமின்றி காதலித்த மனைவி இருக்க வேறொரு பெண்ணிடம் செல்லும் (பரத்தை, காமக்கிழத்தி, இல்பரத்தை, சேரிப்பரத்தை) மரபினைக் கொண்டிருத்தலை அறியமுடிகின்றது.

**“முடி உற்ற கோதை போல் யாம் வாட, ஏதிலாா்**
**தொடி உற்ற வடுக் காட்டி, ஈங்குஎம் இல் வருவதை?**
**ஆங்க --**
**ஐய அமைந்தன்று, அனைத்தாகப் புக்கீமோ,**
**வெய்யாரும் வீழ்வாரும் வேறாக, கையின்**
**முகை மலா்ந்தன்ன முயக்கில் தகை இன்றே,**
**தண்பனி வைகல் எமக்கு?”**

**(கலி:78, 21-27)**

எனும் பாடலில் தலைவனைப் பார்த்து, நீ பல பெண்கள் விரும்பும் ஆணாக இருக்கின்றாய். இப்படிப்பட்ட குணம் உடைய நீ, திரும்பி வந்து என்னைத் தழுவினாலும் பெருமையுமில்லை, அதில் இனிமையும் இல்லை என்று காமக்கிழத்தி புலம்புகின்றாள். இருந்தாலும் திருமணம் முடித்த பெண்ணுக்கு இணையாக இருக்கும் பெண், தலைவன் துணை இல்லாமல் இருத்தல் தலைமையில்லை. அதனால் ஊடலை தவிர்க்கின்றாள். சில இடங்களில் காமக் கிழத்தி தலைவிக்கு இணையாக மதிக்கப்படுவதால் காமக்கிழத்தி ‘குடும்பம்’ என்னும் வரையறைக்குள் வருகின்றாள்.

இல்லறத்தில் துணையில்லாமல் இருக்கும் கிழத்தி பருவங்களில் வரும் பொழுதினைக் கண்டு வருத்தம் கொள்கின்றாள்.

**“விரிகதிர் மண்டிலம் வியல் விசும்பு ஊர்தர**
**புரிதலை தளை அவிழ்ந்த பூ அங்கண் புணர்ந்து ஆடி,**
**வரி வண்டு வாய்சூழும் வளம்கெழு பொய்கையுள்**
**துனி சிறந்து இழிதரும் கண்ணின் நீர் அறல் வார,**
**இனிது அமர் காதலன் இறைஞ்சித்தன் அடி சேர்பு,”**

**(கலி: 71, 1-5)**

எனும் பாடலில் கதிரவன் தன் கதிர்களை விரியுங் காலைத் தொடங்கும் போது, தலையை மூடிக்கொண்டிருந்த மொட்டுகள் மலரத் தொடங்கின. நெகிழ்ந்த செவ்விப் பூவிடத்தே தேனை அருந்தும் வரியினையுடைய வண்டினங்கள் மொய்த்தன. இத்தகு காட்சியினையுடைய வைகறைப் பொழுதில் ஊடலால் பிரிந்து வாழும் பெண் கண்களில் கண்ணீர் பெருகி, தவறி வீழ்ந்தது, என்று குறிப்பிடுகின்றன. இங்கு சூரியன் எழும் காலத்திற்கு முன்பே மலர்கள் விரிவதற்கு தம்மை தயார்ப்படுத்தி தேனை அருந்த வண்டினங்களுக்கு அழைப்பு விடுப்பதாக அமைந்துள்ளது. ஆனால் மகிழ்ச்சியாக எழ வேண்டிய தவைியோ, காமக்கிழத்தியுடன்

இன்புற்றிருக்கும் தலைவனைப் பிரிந்திருக்கின்ற சூழலால் கண்ணீர் வடித்து எழக்கூடிய பொழுதாக வைகறைப் பொழுது அமைந்திருக்கின்றது.

"தலைவன் பரத்தையிற் பிரிவு மேற்கொண்ட போது ஊடல் கொண்டு பரத்தையிடம் சென்று, அம்மனையகத்தில் தங்கியிருந்தமையைப் பிறர் அறியாது மறைத்தல் வேண்டி வைகறைப் பொழுதில் தன் வீட்டிற்கு வருவான். அப்போது அவனது உண்மைநிலை அறிந்த தலைவி ஊடல் கொண்டு அவனைச் சாரமாட்டாள். அன்றியும் அவர்களது ஊடல் குறித்து அடுத்த வீட்டாரும் அறிதல் கூடாது. எனவே, மருதத்திற்கு வைகறை உரியதாயிற்று. அன்றியும் அவ்வூடல் ' விடியல்' வரையும் நீடிக்கும் ஆதலின் விடியலும் ஆயிற்று என்பார்ச் சாம்பசிவனார்"[5]

சிலப்பதிகாரத்தில் மாதவி வீட்டினின்று கோவலன் தன் இல்லம் திரும்பியதும் வைகறைப் பொழுதாகவே இருக்க வேண்டும். கண்ணகியைப் பிறர் அறியா வண்ணம் பூம்புகாரை விட்டுப் புறப்பட்டதும் வைகறைப் பொழுதே ஆகும். இதனை இளங்கோவடிகள்,

**"வான்கண் விழியா வைகறை யாமத்து**
**மீன்திகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்**
**காரிருள் நின்ற கடைநாட் கங்குல்**
**------------------------------------------------------**
**நீள் நெடு வாயில் நெடுங்கடை கழிந்து".**[6]
**(சிலம்பு: 10: 1-8)**

**விடியல்**

வயலும் வயல் சார்ந்த இடமாவதும் மருதத்திணை. அதற்கு உரிப்பொருளாக ஊடலும், ஊடல் நிமித்தமும் கூறப்பெறும். வைகறையும்,

விடியலும் அகத்திணைக்குரிய காலமுமாகப் பேசப்பெறும். இவற்றின் அடிப்படையில் பல செய்திகளைச் சங்கப் புலவர்கள் கூறுகின்றனர்.

“தலைவனின் புறத்தொழுக்கம் பிறர்க்குப் புலனாகாவகைத் தகைப்பான் வேண்டி, வைகறை, விடியல் ஆகியன மிடைந்த பொழுதின்கண் இற்சேர்வன் ஆதலின் எல்லாரும் அறிதற்கு வாய்ப்பில்லாத அக்காலத்தை ஊடல் ஒழுக்கத்திற்குச் சிறப்புடைய காலமாக அமைத்துப் புலனெறி வழக்கில் புலவர் பாடினர்”[7] என்பர் ஊடல் ஒழுக்கத்திற்குச் சிறுபொழுதாகிய விடியல் சிறப்புறப் பொருந்தி இருப்பதைப் பாடல்கள் வழி அறியலாம். மருத ஒழுக்கத்திற்கு வைகறையும், விடியலுமாகிய சிறுபொழுதுகள் வகுக்கப்பட்டமைக்கு நச்சினார்க்கினியர், ‘பரத்தையிற் பிரிந்த தலைவன் ஆடலும் பாடலும் கண்டுங் கேட்கும் பொழுது கழிப்பிப் பிறர்க்குப் புலனாகாமல் மீளும் காலம் ஆதலானும், தலைவிக்கும் கங்குல் யாமம் கழியாது நெஞ்சழிந்து ஆற்றாமை மிகுதலான் ஊடல் உணர்தற்கு எளிதாவதோர் உபகாரம் வைகறைப் பொழுது இனி தலைவி விடியற்காலம் சிறுவரைத் தாதலின் இதனாற் பெரும்பயன் இன்றெென முனிந்து வாயிலடைத்து ஊடல் நீட்டிப்பவே, அவ்வைகறை வழித் தோன்றிய விடியற்கண்ணும் அவள் மெய் வேறுபாடு கூறினார்’ என்பர்.[8]

“இரவுக்காலம் எல்லாம் பரத்தையர் பால் ஆடலில், பாடலில் களித்துப் பிறர் காணுமுன் தன் இல்லம் சேரக் கருதி, வானம் புலரா வைகறையில் வீடு திரும்ப, தலைவியோ இரவெல்லாம் காலத்தை அரிதாகக் கடந்து காத்திருக்க, வீடு திரும்பிக் குறையிரந்து நிற்கும் தலைவனுக்கு வாயில் மறுக்கப்படும். இறுதியில் ஊடல் பனியாகி பின்னர் காலமாக விளைதற்கு முன்பாகத் தலைவன் நிலைக்கு இரங்கித் தலைவியும் ஊடல் விலக்கி ஏற்க, வானம் புலரா வைகறை பொருத்தமான காலமாயிற்று. இத்தனை செயல்களும் இருள் பிரியா

வைகறையிலும் மெல்லப் புலரும் விடியலிலும் நடைபெறுவன. விடியலுக்குள் தலைவி ஊடல் தீர்ந்து தலைவனுக்கு வாயில் நேர்ந்துவிடுகின்றாள். தலைவனின் மாறுபட்ட, இரங்கிய தோற்றத்தைப் பிறர் காணக்கூடாது எனத் தலைவி எண்ணுகின்ற பொழுது விடியற் பொழுதாகும். இவற்றால் வைகறையும் விடியலும் மருதத்திற்குப் பொருந்துவன."[9]

"மருதத்து நிலன் பழனஞ் சார்ந்த இடமாதலின் ஆண்டு உறைவார் மேன்மக்களாதலின் அவன் பரத்தையிற் பிரிவுழி அன்னையகத்து உறைந்தமை பிறர் அறியாமை மறைத்தல் வேண்டி வைகறைக்கண் தம்மனையகத்துப் பெயரும் வழி, ஆண்டு மனைவி சார்கிலளாமாதலால் அவை அந்நிலத்திற்குச் சிறந்தன"[10] என்பர்.

"இரவு, பகல் இரண்டும் மும்மூன்று கூறுகளைப் படைத்துள்ளன. விடியல், நண்பகல், எற்பாடு என்பன மூன்று பகற்கூறுகள், மாலை, யாமம், வைகறை என்பன மூன்று இரவுக்கூறுகள் ஒவ்வொன்றும் முற்கூறு, பிற்கூறு, நடுக்கூறு எனப் பகுக்கப்பெற்றுள்ளது. வைகறையும் விடியலும் ஒன்றெனக் கூறுபவர்க்கு வைகறையாவது விடியல் எனக் கூறலாமேயன்றி விடியலை வைகறை எனக் கூறமாட்டாத தன்மை நோக்கியே இவ்விரண்டும் வெவ்வேறு பொழுதுகள் என அறிதல் வேண்டும் என்பர்."[11] ஆனால் சில பாடல்களில் வைகறைக்கு விடியல் என்ற பொருளையும் வழங்குவர்.

விடியற் பொழுது தலைவன் தன் நெஞ்சிற்குக்கூறும் பொழுதாகவும், பரத்தைக்குத் தலைவன் பிரிந்த பொழுதாகவும், தலைவி ஆற்றாமையில் தவிக்கும் பொழுதாகவும், உடன்போக்குச் செல்லும் பொழுதாகவும், தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியைச் சந்திக்க வரும் பொழுதாகவும், தலைவனை வரைவு வேண்டும் பொழுதாகவும் பாடப்பட்டுள்ளது.

**தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுதல்**

பொருளின் இன்றியமையாமையைக் கருதி தலைவன் தலைவியைப் பிரிந்து வேற்று நாட்டிற்குச் சென்று, குறித்த பருவம் தொடங்கியவுடன் தலைவியை நினைத்து வருந்தி தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

அழகிய செழுமையான பூங்கொத்துக்களைக் கொண்ட மரங்களை உடைய காடு. அழகுறக் காட்சி தருகின்றன. பூக்கள் நெருப்பைப் போன்று பூத்துக் கிடக்கின்றன. மரங்களில் உள்ள பூக்களை நுகர வண்டுகள் கூட்டமாய் வருகின்றன. இருள் நிறைந்த விடியற்காலத்தில் எருமைகள் நிலத்தில் பரந்து சென்றன. உழவர்களும் நெடிய நெற்பயிரினை நட்ட வயல்களில் ஏர்களை உழுதனர். அழகிய செழுமையான பூங்கொத்துக்களைக் கொண்ட மரங்களை உடையதாக காடு காட்சியளித்த காலத்தில் நாம் பிரிவு என்பதே அறியாமல் இயற்கையான அழகுடன் சிறந்து விளங்கும் நம் தலைவியின் தோள்கள் இயற்கையோடு மகிழ்ச்சியாக விடியற்காலைப் பொழுதில் எந்தவிதப் பிரிவுமின்றி (பரத்தை, தூது, பொருள் போர் ….. பிரிவுகள்) வாழ்ந்த காலத்தை நினைத்துத் தலைவன் மிக்கத் துன்பம் அடைகின்றான். பொருள்காரணமாகப் பிரிந்த தலைவனுக்கு விடியற்காலைப் பொழுதில் நடைபெறும் நிகழ்வு மிக்க வேதனை அளிக்கின்றது. தன் நெஞ்சோடு புலம்புகின்றான். தனிமை காரணமாக தலைவியின் இயற்கை அழகு கெட்டுவிடுவாளோ என்று தன் மனதோடுப் பேசிக் (நெஞ்சிற்கு) கொள்கின்றான். விடியற்காலைப் பொழுது பரத்தைப்பிரிவு நிகழ்விற்கு ஏதுவாக அமைந்தபொழுதாக பாடல்கள் பாடப்பட்டுள்ளது என்றாலும் தலைவியை நினைத்து தலைவன் விடியற்பொழுதில் வேதனை அடைவது தலைவி மீது அவன்கொண்ட அன்பை வெளிப்படுத்துவதாகவே உள்ளன. இதனை,

**“வைகு புலர் விடியல், மைபுலம் பரப்ப,**
**கரு நனை அவிழ்ந்த ஊழுறு முருக்கின்**
**எரி மருள் பூஞ்சினை இனச் சிதர் ஆர்ப்ப,**
**நெடு நெல் அடைச்சிய கழனி ஏர் புகுத்து,**
**குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர,**
**அரிகால் போழ்ந்த தெரி பகட்டு உழவர்**
**ஓதைத் தெள்விளி புலம்தொறும் பரப்ப**
**கோழிணர் எதிரிய மரத்த, கவினி,**
**காடு அணி கொண்ட காண்தகு பொழுதில்,**
**நாம் பிரி புலம்பின் நலம் செலச் சாஅய்,**
**நம் பிரிபு அறியா நலனொடு சிறந்த**
**நல் தோள் நெகிழ, வருந்தினள் கொல்லோ”**

**(அகம்:41, 1-12)**

எனும் குன்றியனார் பாடல் வரிகள் மூலம் அறியலாம்.

இவ்விடியலை காலை, விடியல், நாள், சிறுகாலை, ஞாயிற்றாகம் என்ற பல பெயர்களை கொண்டு பல நிலைகளில் இலக்கியங்கள் பேசுகின்றன” என்று குறிப்பிடுகின்றார்.[12] இப்பொழுது வைகறையோடு விடியலும் இணைந்த சிறுபொழுதாக மருதத்திணைக்கு குறிப்பிடப்படுகின்றது. தலைவன் பரத்தைமை பிரிவுக்குச் சென்றவன் விடியல் பொழுதில் வீட்டிற்கு வருகின்ற காட்சியாக மருத நிலத்தில் காட்சியமைப்பு உள்ளது. அவ்விடியற்காலைப் பொழுதில் தலைவியைத் தலைவன் தேடிச் சென்றபொழுது தோழி வாயில் மறுக்க, அதற்குத் தலைவன் முன்னால் நடந்த நிகழ்வைக் கூறி மகிழ்ச்சி அடைகின்றான். இதனை,

**"உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை**
**பெருஞ் சோற்று அமலை நிற்ப, நிரைகால்**
**தண் பெரும் பந்தர்த் தரு மணல் ஞெமிரி,**
**மனை விளக்குறுத்து, மாலை தொடரி,**
**கனை இருள் அகன்ற கவின்பெறு காலை:**
**கோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள்**
**கேடு இல் விழுப் புகழ் நாள் தலை வந்தென",**
**(அகம்:86: 1-7)**

எனும் பாடலில் தனக்கும் தலைவிக்கும் நடந்த திருமண நிகழ்வை நினைவு கூறுகின்றான் தலைவன். அதாவது தீய கோள்கள் நீங்கப் பெற்ற சிறந்த புகழை உடைய உரோகினி வந்து கூடும் நன்னாளில் திருமணம் நிகழ்ந்ததாகக் தலைவன் கூறுகின்றான். அந்நாளோ மிக்க இருள் நீங்கப் பெற்று அழகு பெற்று திகழும் வைகறைப் பொழுதாகும். பொழுது புலர்கின்ற விடியற்காலைப் பொழுதில் திருமணம் நடத்தி வந்துள்ளனர் எனும் செய்தி தலைவன் மூலம் நாம் அறிந்துகொள்ளலாம். திருமணம் முடிந்த பின்பு, நீண்ட நாட்களுக்குப் பிறகு விடியற்காலைப் பொழுதில் தலைவன், தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் செல்கின்றான். பரத்தையைப் பிரிந்து தலையைத் தேடி மீண்டும் வரும் பொழுதும் அதே விடியற்காலைப் பொழுதாகும். இவ்வாறு விடியற் பொழுது என்பது தலைவனுக்கு மகிழ்வைத் தருவதாகவும், தலைவிக்கு ஒரு சில நேரங்களில் துன்பம் தருவதாகவும் அமைகின்றது.

**தலைவனை வரைவு கோடல்**

களவு ஒழுக்கத்தில் தலைவன் தலைவியைக் காண வந்த போது, அதனைக் கண்ட தோழி, தலைவி படும் இன்னலைக் கூறி அவளை திருமணம் செய்துகொள்ளுமாறு தலைவனுக்குக் கூறுகின்றாள்.

காலைப்பொழுதில் தலைவனோடு, தலைவி விளையாடி மகிழ்ந்துள்ளாள். தலைவனோடு காதல் வயப்பட்டாள். நற்றாய்

தலைவியின் வேறுபாடுகண்டு வெறியாட்ட நினைக்கின்றாள். தன் மகள் கொண்ட நோய் தணிவதற்கு, கடவுளுக்கு வெள்ளாட்டுக் கிடாயினை காணிக்கையாகத் தருகின்றாள். காதல் நோய் தலைவியை பிணித்துள்ளதை அறியாத நற்றாய் அழுகின்றாள். சிற்றில் விளையாடுக என ஆய் கூற, விளையாட்டு வினையாகிப் போய்விட்டதே எனத் தோழி இல்லறத்தில் நடந்த செயலை தலைவனிடம் கூறி விரைவில் திருமணம் முடித்துச் செல்லுமாறு வற்புறுத்துகின்றாள்.

வயலில் விளைந்த நெல்லைத் தின்ற பசுவினை காவலா் அதன் பசிக்கு கரும்பினைத் தந்தனா். பின்பு பாகற்கொடியறுத்து அத்துடன் பகன்றைக் கொடிகளையும் சோ்த்து அவற்றால் காஞ்சி மரத்தில் பசுவைக் கட்டி வைத்தனா். அத்தகைய நீா்வளம் மிக்க ஊரையுடைய தலைவனே எனத் தோழி கூறுகின்றாள். எங்கள் ஊா் மிகுந்த காவலை உடையது. உன் ஊரில் பசுவை எப்படி மரத்தில் கட்டி வைத்தார்களோ? அதுபோல் களவுக் காலத்தில் என் தலைவியைத் தேடி வந்தாள் உன்னையும் மரத்தில் கட்டி வைத்துவிடுவா். தலைவியை நீ அடைய முடியாது என்பது படத்தோழி கூற்று அமைகின்றது. கதிரவன் காயாத காலைப்பொழுது அனைவருக்கும் மகிழ்ச்சிதரும்பொழுது. இரவெல்லாம் உயிரினங்கள் ஓய்வெடுத்து அடுத்த நாளிற்குரிய தொடக்கமாக நிகழ்வுகளை முடிவெடுக்கும் பொழுதாக அமைகின்றது. இப்பொழுதில் நீயும் நல்ல முடிவை எடு. தலைவியை விரைவில் திருமணம் செய்துகொள்ளும் முடிவாக இருக்க வேண்டும் என்பதுபடக் குறிப்பால் தோழி உணா்த்தியிருக்கலாம். இதனை

**“------------திறவ தாகக்**
**குவளை உண்கண் இவளும் யானும்**
**கழனி ஆம்பல் முழுநெறிப் பைந்தழை,**
**காயா ஞாயிற்றாக, தலைப்பெய,**
**பொய்தல் ஆடிப் பொலிக! என வந்து,”**

**(அகம்:156: 7-11)**

எனும் ஆவூர் மூலங்கிழார் பாடிய இப்பாடலில் விடியலை “ஞாயிற்றாக” எனக் குறிக்கப்படுகின்றது.

**தோழி தலைவனுக்கு வாயில் மறுத்தல்**

பரத்தையிடம் சென்று வந்த தலைவனின் இல்நுழைவினை ஏற்காமை ‘வாயில் மறுத்தல்’ துறைச் செய்தியாகச் சங்க அகப்பாடல்களில் கூறப்படுகின்றன. பரத்தையிற் சென்ற தலைவன் தன் மனைக்கு வருகின்றான். தலைவியின் கோபத்தை அறிந்ததனால் தன்னை ஏற்கத் தலைவியிடம் கூறுமாறு தோழியை வேண்டுகின்றான். தோழி அதற்கு இசைய மறுக்கின்றாள்.

**“உணர்குவெண் அல்லென், உரையல் நின் மாயம்,**
**நாண் இலை மன்ற — யாணர் ஊர! —**
**அகலும் ஆங்கண், அம்பகை மடிவை.**
**குறுந்தொடி, மகளிர் குரூஉப்புனல் முனையின்**
**பழனப் பைஞ்சாய் கொழதி, கழனிக்**
**கரந்தைஅம் செறுவின் வெண்குருகு ஒப்பும்**
**வல்வில் எறுழ்த் தோள் பரதவர் கோமான்,**
**பல்வேல் மத்தி, கழாஅர் முன்துறை,**
**நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய,**
**விடியல் வந்த பெருநீர்க் காவிரி,**
**தொடி அணி முன்கை நீ வெய் யோளொடு**
**முன்நாள் ஆடிய கவ்வை, இந்நாள்,”**

**(அகம்:226: 1-12)**

எனும் பரணர் பாடலில் தோழி வாயில் மறுப்பது கூறப்பட்டுள்ளது. தலைவனைப் பார்த்து தோழி உன் வஞ்சகம் நிறைந்த வார்த்தைகளை என்னிடம் கூறாதே. நான் அவற்றை நம்பவும் மாட்டேன்.

தழையாடையினையும், சிறிய வளையல்களையும் அணிந்த பெண்கள் சிறந்து விளங்கும் புனல் விளையாட்டை வெறுத்து, நாரைகளை ஓட்டி விளையாடுவர். அக்காலத்தில் காவிரியில் விடியல் பொழுதில் மருத மரமும், வஞ்சி மரமும் அடித்து வர நீ பரத்தையிடம் புனல் ஆடினாய். இப்பாடலில் புனல் விளையாட்டு என்பது தம்பதிகள் விளையாடுகின்ற விளையாட்டு. அவ்விளையாட்டில் ஆற்றில் அடித்து வரப்பட்ட மருத மரம் மருதத்திணைக்குரியது. மருத மரத்துடன் வஞ்சி மரத்தையும் அடியோடு சாய்த்து விடியற்காலையில் வந்த நீர்ப் பெருக்கையுடைய காவிரியில் நீ பரத்தையோடு நேற்றுப் புனலாடியது அலராகி ஆரவாரமாகிப் போய்விட்டது. நீ மறைக்க நினைத்தாலும் முடியாது. விடியற்காலையில் பரத்தையுடன் இருப்பது: யாரும் அறியாப் பொழுதாக நினைக்கின்றான் தலைவன். பரத்தையுடன் நீராடுகின்ற பொழுதாக அமைகின்றது.

மற்றோர் பாடலில் தலைவனைத் தேடியும், தலைவியிடம் உறவு சொல்லியும் பரத்தை வந்த செய்தியை தலைவனிடம் கூறி, வாயில் மறுக்கின்றாள் தோழி. இதனை,

**“பொய்கை நீர் நாய்ப் புலவுநாறு இரும்போத்து**
**வாளை நாள் இரை தேரும்**
**-------------------------------------------**
**கணையன் நாணி யாங்கு- மறையினள்**
**மெல்ல வந்து, நல்ல கூறி,**
**மை ஈர் ஓதி மடவோய் ! யானும்நின்**
**சேரியேனே: அயல்இ லாட்டியேன்,**
**நுங்கை ஆகுவென் நினக்கு என, தன்கைத்**
**தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர,**
**நுதலும் கூந்தலும் நீவி,**
**பகல் வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே”**

**(அகம்: 386: 1-2, 8-15)**

எனும் பரணர் பாடலில் தோழி வாயில் மறுப்பது கூறப்பட்டுள்ளது. விடியல்பொழுதில் ஆண் நீர் நாய் வாளை மீனை இரையாகக் கொள்ளுதலும், தலைவன் தன் பரத்தைமை ஒழுக்கத்தால் ஊரெல்லாம் அலர் எழச் செய்து, விடியலில் தலைவியை நாடி வருகின்றதுமாகிய நிகழ்வுகள் உண்டாகின்றன. தலைவிக்குச் செய்யும் தலையளி போலப் பரத்தைக்குச் செய்யினும் அவள் தலைவியாகும் தன்மையல்லள் எனக் கூறி வாயில் மறுக்கின்றாள். ஆண் நீர் நாய் விடியற்காலையில் வாளை மீனை இரையாகக் கொள்ளுதல் போல் நீ பரத்தை எனும் மீனைச் சொந்தம் கொண்டிடாடுகின்றாய். பகற்பொழுதில் வந்து செல்கிறாள் பரத்தை. அதைக் கண்டு நாணமுற்றேன் எனத் தோழி கூறுகின்றாள்.

பரத்தையிற் பிரிந்து இற்புகும் தலைவனைக் கண்ட தலைவி, தலைவன் தம்மில் உறையாது பரத்தையால் மருவி வந்த புறத்தொழுக்கம் கண்டு புலந்து கதவடைத்துத் தாளிட்டுக்கொள்ளலும், அது தலைவனின் தலைமைக் குணத்திற்கு இழுக்காகும் என்று கருதிய தோழி, தலைவி தலைவனைப் புறக்கடை நிறுத்தி புலத்தல் கூடாது என்று உணர்த்துதலும், தோழி தலைவனின் புறத்தொழுக்கத்தைச் சிலபொழுது மறைத்தலும், சில பொழுது அவன் புறத்தொழுக்கம் தலைமக்கட்கு அமைந்ததொரு ஒழுக்கம் என்றும் பேசி ஊடல் தீர்க்க முனைதலும் ஆகிய செயல்களைப் பிறர் அறியாத வகையில் விடியலில் நிகழ்ந்து அக்கால எல்லைக்குள்ளாகவே பெரும்பாலும் முடிந்துவிடுமாதலின் அகமாந்தரின் தலைமைக் குணத்தை விளக்கவல்ல பொழுதுகள் என இவற்றைப் பண்டையோர் சிறப்புறக் காட்டியிருக்கின்றனர்.

**நண்பகல்**

சிறுபொழுதுகளில் ஒன்று நண்பகல் பொழுது. பகற்பொழுதின் முற்கூறுகளில் நடுக்கூறு நண்பகல் ஆகும். இது பாலைத் திணைக்குரிய

சிறுபொழுதாகும். பிரிதல் நிகழ்விற்குத் தொடர்புடையதாகக் கூறப்படுவதாகும். நண்பகல் என்பது வெயில் சுட்டெரிக்கும் பொழுதாகக் கருதப்படுகின்றது. சங்க இலக்கியங்களில் நண்பகல் பற்றிய குறிப்புகள் பல பாடல்களில் சுட்டப் பெறுகின்றது.

"பாலைப் பகுதியின் நிலக்கூறுகள் அளவிறந்தன. மணலும், மணல் சார்ந்த பகுதிகளும் பற்றியன. கோடையில் வரண்ட பாலை, உப்புப் பூத்த பாழ்நிலம், குறும்பு, இறும்பு, வெடிப்பு முதலிய இடங்களும், நீரழிமருங்கு, வறண்ட சுனை, கான்யாறு முதலிய நீரிடங்களும் இயற்கையிடங்களாகப் பாலை நிலத்தில் இருக்கின்றன. இவையேயன்றிப் பாழ்மன்றம், முதுகளரி, பொதியில், வீழ்தலுடை மாடம், ஞாட்பு,பதுக்கை, நடுகல் போன்ற செயற்கையிடங்களும் இடம் பெறுகின்றன. மக்களின் எண்ணம் நிலத்திற்கு ஏற்ப மாறுபடும் தன்மை அந்நிலவாழ் ஆறலைக் கள்வர் வழி அறிய முடிகின்றது. எல்லா உயிர்க்கும் பிறப்பொக்கும் என்றாலும் செய்தொழில் தான் மக்களிடையே வேற்றுமையை உருவாக்கும். நில இயல்புக்குத் தக்க தொழிலியல்பே அமையும். தொழிலியல்புக்குத் தக்க வாழ்க்கை வளம், மக்கட் செயல்கள் முதலியன நிலம் வழியாக அமைவது உணர்த்தப் பெறுகின்றது என்பர்"[13]

நண்பகல் பாலைநிலத்திற்குப் பொருந்தியதாகப் பாடல்களில் கூறப்படுகின்றது.

**"நடுவு நிலைத் திணையே நண்பல் வேனிலொடு**
**முடிவு நிலை மருங்கின் முன்னிய நெறித்தே"**

**(தொல்.பொருள்.11)**

என்பார் தொல்காப்பியர். அதாவது நடுவுநிலைத் திணையாகிய பாலையாவது நண்பகல்பொழுது வேனிற்காலத்தொடு புணர்ந்து நின்றவழி அமைவதாகும்.

“எற்பாட்டிற்கு முன்னர்த்தாகிய நண்பகல் பாலைக்குரியதாகும். காலையும், மாலையும், நண்பகலன்ன கடுமைகூறச் சோலை தேம்பிக் கூவன்மறி, நீரும், நிழலும் இன்றி, நிலம்பயம் துறந்து, புள்ளும், மாவும் புலம்புற்று, இன்பம் இன்றித் துன்பம் பெருகுவதொரு காலமாதலின் இன்பத்திற்கு இடையூறாகிய பிரிவிற்கு நண்பகலும் வேனிலும் சிறப்புடைத்தாயிற்று”[14]

“சிறுபொழுது ஆறினை, மாலை, யாமம், வைகறை என்பன இரவின் முக்கூறு, விடியல், நண்பகல், எற்பாடு என்பன பகலின் முக்கூறு என்று பிரித்துக் கூறுவர்”[15] அவற்றில் பகலின் முக்கூறியல் சூரியன் வெளியில் உச்சிக்கு வரும் காலம் நண்பகல் ஆகும். நண்பகல் பொழுதினை ஏறுவெயில் என்றும், உச்சிவெயில் என்றும் அழைப்பார்கள். இப்பொழுதினில் வயல்வெளிகளில் வேலை செய்பவர்களும், கால்நடை மேய்ப்பவர்களும் நிழலில் சற்று ஓய்வெடுக்கும் பொழுது ஆகும். இப்பொழுதுகளில் என்ன வேலைகள் நடக்கும் என்பதை அகநானூறும், கலித்தொகையும் பதிவு செய்கின்றது. அதில் அகநானூற்றுப் பாடலொன்றில்

**“கொய் கவற் புரவிக் கொடித் தேர்ச் செழியன்**
**முதுநீர் முன்துறை முசிறி முற்றி,**
**களிறு பட எருக்கிய கல்லென் ஞாட்பின்**
**அரும் புண் உறுநரின் வருந்தினள், பெரிது அழிந்து,**
**பானாட் கங்குலும் பகலும்**
**ஆனாது அழுவோள் - ஆய்சிறு நுதலே”?**

**(அகம்: 57: 14-19)**

எனும் நக்கீரர் பாடலில் தலைவன் பொருள் ஈட்டுவதற்காகத் தலைவியைப் பிரிந்து செல்கின்றான். அப்போது தலைவியை நினைத்த தலைவன், தலைவியின் வருத்தத்திற்கு உதாரணம் சொல்லும் போது

பாண்டியன் சுத்தரிக்கப்பட்ட பிடரிமயிரினையுடைய குதிரைகளையுடைவன்: கொடி கட்டிய தேரினையடையவன்: அவன் பழமையான கடலின் கண் சிறந்த துறை முகத்தையுடைய முசிறியை முற்றுகையிட்டு, யானைகள் வீழ்ந்துபடக் கொன்றழித்த கல்லென்னும் ஆரவாரத்தையுடைய போரில் விழுப்புண் பட்டவர்போல் நம் தலைவி மனம் நொந்து மிக வருந்தி நள்ளிரவிலும், பகற்பொழுதிலும் இடைவிடாது அழுத வண்ணம் இருப்பாள் என்று கூறப்படுகின்றன. தலைவியின் மனநிலை போர்க்காட்சிகளின் கொடூரநிலைக்கு ஏற்படும் வருத்தம் போல தலைவியின் மன வருத்தம் உள்ளது என்பதை அறியமுடிகின்றது. இக்காட்சிகள் பிரிதலும் பிரிதல் நிமித்தமும் என்று உரிப்பொருளுக்கு உட்பட்டு, பொருள் தேடச் சென்ற தலைவன் தலைவியின் நிலையை தனக்கு ஏற்றார்போல் நினைத்து தலைவியின் நினைவாகவே இருத்தலை அறியமுடிகின்றது.

**உடன்போக்கு**

உடன்போக்கு நிகழ்வு என்பது தலைவனும், தலைவியும் ஒருவரை ஒருவா் விரும்பி, தலைவியின் வீட்டாா் திருமணத்திற்கு விருப்பம் மறுக்கும் போது நிகழக்கூடியது. உடன்போக்கு நிகழ்ந்த சில நேரங்களில் தலைவியின் வீட்டாா் அறியும் வண்ணம் அமைந்திருக்கும், இல்லையென்றால் உடன்போக்கு நிகழ்ந்த நிகழ்வை தன்தோழி தலைவியின் வீட்டாரிடம் எடுத்துரைப்பாள் என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

“படிகடவா இளமங்கை பிறந்த வீட்டைத் துறந்து பெற்றோரை மறந்து முன்பின் அறியா ஆடவனைக் காதற் கொழுநன் என நம்பிக் கரடுமுரடான வழியல் உடன்போக்குத் துணிந்தபோது, அகவிலக்கியம் புதினம் போன்ற சாயலையும் விறுவிறுப்பையும் பெறுகின்றது. கற்பவருக்கும் உணா்ச்சிக் கூா்மையை விளைக்கின்றது. உடன்போக்கு

எப்போது நிகழும்? அறத்தொடு நின்ற பின்னும், எண்ணிய காதலனுக்குப் பெற்றோர் மணம் முடிக்க மறுத்தாராயின், இவ்வழிச் செலவு நிகழும் என்று கொள்ளலாமா? கூடாது. அறநிற்புக்குப்பின் பெற்றோர் மறுக்கார் மகள் கற்பிழுக்குப்பட நடவார்; உரியவனுக்கே மணஞ்செய்வார். ஆதலின் உடன்போக்குக்கு இடமில்லை. இற்செறிப்பு, ஊரலர், வெறியாட்டு, நொடுமலர் வரைவு என்ற இன்னாச் சூழ்நிலைகளைக் கடத்தற்கு இரண்டு வழிகள் உள. ஒன்று அறத்தொடு நிற்கை. ஏனையது உடன்போக்குகை. இவற்றுள் ஒன்று நிகழின் மற்றொன்று நிகழாது. அறத்தொடு நின்றபின் உடன்போகார். உடன்போயின் அறத்தொடு நிற்பதாற் பயனில்லை. இரண்டில் ஒன்றை களவு நாடகத்தின் இறு காட்சியாகும் என்று தெளிக"[16] என்று உடன்போக்கிற்கான காரணத்தை விளக்கியுள்ளார்.

களவுக் காலம் நிறைவுக் காலம் என்பதால் உடன்போக்கும் ஒரு வகையான அறமாகப் பின்பற்றப்படுகின்றது. இவ்வுடன்போக்குச் செல்லுகின்ற பாதையை,

**"வேனிற் பாதிரிக் கூனி மாமலர்**
**நறைவாய் வாடல் நாறும் நாள், சுரம்**
**அரிசூர் சிலம்பின் சீறடி சிவப்ப,**
**எம்மொடு ஓர்ஆறு படீஇயர், யாழநின்**
**பொம்மல் ஓதி பொதுள வாரி,**
**அரும்பு அற மலர்ந்த ஆய்பூ மரா அத்துச்**
**கரும்புசூழ் அலரி தைஇ, வேய்ந்த நின்**
**தேம்பாய் கூந்தல் குறும்பல மொசிக்கும்**
**வண்டு கடிந்து ஓம்பல் தேற்றாய், அணிகொள**
**நுண் கோல் எல்வளை தெளிர்க்கும் முன்கை,**
**மெல் இறைப் பணைத்தோள் விளங்க வீசி,**
**வல்லுவை மன்னால் நடையே"**

**(அகம்:257: 1-12)**

எனக் கூறுகின்றான் தலைவன். இது உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாடியதாகும்.

தலைவியே என்னுடன் (உடன்போக்குச் செல்ல) வருவதற்குத் துணிந்தாய். வெம்மையும், ஆறலைக் கள்வரால் உண்டாகும் துன்பமும் கொண்ட, செல்லுவதற்கு அரிய கொடிய பாலைநிலத்தின் வழியில் எம்முடன் இணைந்து வருவதற்கு துணிந்துவிட்டால் உன் அழகிய சீறடி சூரியனின் வெப்பத்தால் சிவக்க, தேன்நிறைந்த பாதினப் பூக்கள் வாடிவிடும்படியான வேனிற்காலத்தின் பகற்பொழுதில் உன் பனைத்தோள் விளங்க வீசி நடக்கும் ஆற்றலையும் பெற்றாய். குறுமகளே! உன்பால் வந்த இந்த துணிவிற்குக் காரணம் என்னவென்றால் நீ என்பால் கொண்டே அன்பே காரணமாகும் என்று தலைவியின் மனஉறுதியையும், ஆற்றலையும் வியந்து பாராட்டுகின்றான். **“வேனிற்பாதிரிக் கூனிமாமலர் நறைவாய் வாடல்நாறும் நாள்” (அகம்:257:1-2)** பாதிரியின் பூப்போன்று மென்மையான நீ, நண்பகலில் உண்டான சூரியவெப்பத்தால் அப்பூ வாடினாலும் மணம் வீசிக்கொண்டிருப்பதைப் போல என் வாழ்க்கைக்கு உடன் இருந்து மணம் பரப்பப் போகின்றாய், வெண்கடம்பின் பூத்த மலர்களைத் தொடுத்து சூடிக்கொண்டாய். அதில் மொய்க்கும் வண்டுகளைக் கடிந்து விரட்டி உன்னைப் பாதுகாத்துக் கொள்ளத்தெரியாதவள். இத்தகு அறியாமையில் உடைய தலைவியே பகற்பொழுதில் துணிந்து என்னுடன் வந்துவிட்டாய். அறியாமையில் உள்ளவளுக்கு தலைவன் உடன் இருக்கும்பொழுது ஒரு துணிவு ஏற்படுகின்றது. **“முன்கை மெல் இறைப் பணைத்தோள்” (அகம்:257: 11)** விளங்க வீசி நடக்கின்றாள். அவள் கைவீசி விரைவாகத் தலைவனுடன் நடந்து செல்வதை அவன் வியந்து பாராட்டுகின்றான். தலைவனுடன் செல்லும்போது வெப்பமிக்க நண்பகற் பொழுதுகூட அவளுக்குக் குளிர்ச்சியாகத் தெரிகின்றது. வெப்பத்தின் தாக்கத்தால்

அவள் சோர்வுகொள்ளவில்லை. காரணம் தலைவன் உடன் இருப்பது தலைவிக்கு மிகுந்த துணிச்சலைத் தருவதாக இப்பாடல் உணர்த்துகிறது.

**எற்பாடு**

எற்பாடு பொழுது என்பது சூரியன் உச்சியிலிருந்து இறங்கும் நேரம் ஆகும். இதன் நேரம் பகல் இரண்டு மணி முதல் ஆறு மணி வரை ஆகும். இப்பொழுது மாலைக்கு முற்கூறான நெய்தலுக்கு உரியதாகும். அப்பொழுதில் மதியத்தின் வரவு, விரிவுற்ற மாந்தர்க்குள் நிகழும் துயரம் ஆகியவை இலக்கியங்களில் பேசப்படுகின்றன.

“எற்பாடு என்பதற்குக் கதிர் தோன்றும் காலை எனப் பொருள் கொண்ட சிவஞான முனிவர், அதனை நெய்தல் திணையொடு தொல்காப்பியர் இணைத்துச் சொல்லுதலை விளக்கவேண்டியவராயினர். அவர் தரும் விளக்கமாவது, ‘தலைவன் பிரிந்துழித் தனித்திருந்த தலைவி இராக்காலம் முழுவதும் கொன்னே கழிந்தமை பற்றி இரங்குதற்குரிய காலம் அதுவாம்’ என்பதாகும். ‘எற்பாடு’ என்பதைப் பகலின் பிற்கூறாகக் கொண்ட இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் உரைக்குத்தக்க பொழுதைப் பொருந்திக் காட்டுவர்.”[17]

“ ‘எல்’ என்பதற்குக் கதிரவன் அல்லது ஒளி என்ற பொருள் கொண்டும், ‘பாடு’ என்பதற்கு உண்டாதல் அல்லது தோன்றுதல், மறைதல் அல்லது விழுதல் என்ற பொருள் கொண்டும், ஞாயிறு தோன்றும் காலம், ஞாயிறு மறையும் காலம் என்று இரு வகையிலும் கூறுகின்றனர். ஞாயிறு மறைதல் என்ற பொருளில் அனைத்து உரையாசிரியர்களும் வழங்க, ஞாயிறு தோன்றல் என்ற பொருளில் இறையனார் களவியல் உரைக்காரரும், நம்பியாசிரியரும், சிவஞான முனிவரும் கூறுகின்றனர். சேர நாட்டார், ஞாயிறு மறையும் பிற்கலைப் படி ஞாயிறு (படு ஞாயிறு) என்றழைப்பர்”[18]

“தனிமையுற்று இரங்குவார்க்குப் பகற்பொழுதிலும், இராப்பொழுது மிகும் ஆதலின் அப்பொழுது வருதற்கேதுவாகிய எற்பாடு கண்டார். இனி வருவது மாலை என வருத்தமுறுவர்” என்பது இளம்பூரணர் விளக்கம்.[19]

“வெஞ்சுடர் வெப்பம் தீரத் தண்ணுறுஞ் சோலை தாழ்ந்து நீழற் செய்யவும் தண்பதம் பட்ட தெண்கழி மேய்ந்து பல்வேறு வகைப்பட்ட புள்ளெல்லாம் குடம்பை நோக்கி உடங்கு பெயரவும், புன்னை முதலிய பூவினாற்றம் முன்னின்று கஞற்றவும், நெடுந்திரை அழுவத்து நிலாக்கதிர் பரப்பவும், காதல் கைமிக்குக் கடற்கானும், கானற்கானும் நிறை கடந்து வேட்கை புலப்பட உரைத்தலின் ஆண்டு காமக் குறிப்பு வெளிப்பட்டு இரங்கற் பொருள் சிறத்தலின் எற்பாடு நெய்தற்கு வந்தது” என்பது நச்சினார்க்கினியரின் விளக்கமாகும்.[20]

நெய்தலுக்குரிய இரங்குதல் காலைப்பொழுதினும் மாலைப்பொழுதுடன் தொடர்புடையது என்பதையும், மாலை வரப்போகிறதே என்றும், வந்துவிட்டதே என்றும் தலைவி துடிப்பதையும் பாடல்கள் வழி அறியலாம்.

**“காலை அரும்பி பகலெல்லாம் போதாகி**

**மாலை மலரும் இந்நோய்”**[21]

என்ற திருக்குறளில், தலைவி மாலை வரவு கண்டு மயங்குவது கூறுப்படுகின்றது.

“நெய்தல் நிலக் காதலி தன் காதலன் கடற்சேர்ப்பனைத் தேடுவாளாய்க் கானல் வரிப்பா இசைப்பாள். அப்பொழுது கதிரவன் மறைந்தனன். ‘கதிர் விழுங்கி வந்தது இம்மருள் மாலை என்றிவ்வாறு கலங்குவாள் என எற்பாட்டுப் பொழுதை எல்படுபொழுதாவே கூறுவர்”.[22]

**எற்பாடு காலையே**

“ ‘எல்’ எனும் சொல்லின் பொருள் குறித்துக் காணும்போது ‘எல்’ எனும் இடைச்சொல் ஒன்று உள்ளது. அதுவன்றி எல் என்றால் ஒளி, பகல், இரவு, ஒளி மழுங்கல் ஆகிய பொருள்களும் உண்டு. ‘எல்’ வேறுசில பின்னொட்டுக்களைப் பெற்றுப் புதுமைப் பொருள் அளிக்கின்றது. எல் என்னும் சொல் மட்டுமே இரவு எனப் பொருள் தருகின்றது. பின்னர் ‘எல்லி’ என்னும் வடிவம் பெற்று இரவினையும் உணர்த்துகின்றது. அதனைப் போன்று ‘எல்’ என்னும் சொல் மட்டுமே பகல் என்னும் பொருளை (எல்லு:எல்லை) உணர்த்துகின்றது என்னும் கூற்றினால் எல் என்னும் சொல் குறிக்கும் ‘இருவிதமான பொருள்களை (இரவு, பகல்) அறியலாம். ‘எல்லும் எல்லின்று’ (குறுந்.179) என்ற பாடல்வழி ஞாயிறு ஒளி மங்கிற்று என்று கூறப்பெறுவதும், எல் என்பது ஒளி, பகல், ஞாயிறு என்ற பல பொருள் அமைந்ததும் அறியப்பெறுகின்றது. அந்தி என்னும் சொல்லானது, காலை, மாலை இரண்டையும் உணர்த்துதல் போல எற்பாடு காலை, மாலை இரண்டையும் உணர்த்தும் ஒரு சொல்லாகும். அது காலை என்று கருதி நெய்தலுக்குரிய பொழுதாகக் கூறுதல் பல பாடல்களில் காணப்பெறுகின்றது. (அகம்:150: கலி.146, நற்:275,283,117,218).”[23]

“நெய்தற்குரிய உரிப்பொருளாகிய இரங்கல் உணர்வு காலையும் உணரப்பெறுவது. காலையாகிய பகற்காலம் காமம் தணிக்காது, தலைவி பகலிலும் வருந்துவாள் என கொள்ளல் வேண்டும். எற்பாட்டுக்குரிய இரங்கல் உணர்வு மாலையில் வெளிப்படுவதன்று. அது காலையில் வெளிப்படும் உணர்வாகும் எனவே எற்பாடு காலையைக் குறிக்கும் எனவும் கூறுகின்றனர்.”[24]

**எற்பாடு – மாலையே**

"எற்பாடு என்பதற்கு 'வெய்யோன் பாடு' என்று குறிக்கின்றனர். எற்பாடு காலை என்பதில் காலை என்பது காலம் என்ற பொருளில் வந்தது. வைகறை, விடியல் என இருகாலைப் பொழுதுடன், மூன்றாவதாக எற்பாட்டையும் காலைக்கு வகுத்திருக்க இயலாது. படுதல் என்பதற்குப் பட்டுப்போதல், வீழ்தல், அழிதல் என்ற பொருளே பெரும்பான்மையாகப் பயின்று வருகின்றன. பொழுதுபட வந்தான் எனும் சொல் இன்றுவரை பேச்சு வழக்காகவும் உள்ளது. இங்கு படுதல் என்பதற்கு மறைதல் எனும் பொருளே பொருந்தும். தலைவனைப் பிரிந்தோர் காலையினும் மாலைப் பொழுதிலேயே மிக்க வருந்தியுள்ளனர். சங்கப் பாடல்களிலும் பகற் பொழுதை விட மாலைப் பொழுதிலே வருந்தியிருப்பதாக மிகுதியான பாடல்களில் கூறப்பெற்றுள்ளன. (அகம்:23: கலி.130, நற்:87) நெய்தல் திணை பாடினாரெல்லாம் ஞாயிறு படும் காலமாகவே வைத்துப் பாடியிருத்தலானும், ஞாயிறு படுதல் கண்டு இரங்கிய தலைவி, தோழி முதலியோர் ஆற்ற ஆற்றியிருக்கும் மாலைக் காலத்துக்கு முன்னர் இரங்கற்குரிய காலம் கூறுதலே முறையாதலானும், ஞாயிறுபடுதல் என்பது பொருந்தும் என்ற கூற்று விளக்குகின்றது. ஆதலின் எற்பாடு என்பதற்குப் பகலின் பிற்கூறு (பிற்பகல் 2 மணி முதல் 6 மணி வரை) எனக்கொள்ளுதலே பொருந்தும். விடிபொழுதை விட மடிபொழுதே மகளிரை மயக்கும். ஆதலின் எல் விழு பொழுதே நெய்தற் பொழுதாகும்."[25]

**எற்பாடுபொழுதின் நிகழ்வுகள்**

எற்பாடுபொழுது நெய்தல் திணைக்குரியது. அந்நிலத்தின் உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும். எப்போதுமே வருத்தத்திற்குரிய பொழுதான இந்நெய்தல் தலைவிக்கு,

**"ஆர் இருள் நீக்கும் விசும்பின் மதிபோல,**
**நீருள்ளும் தோன்றுதி, ஞாயிறே! அவ்வழித்**
**தேரை தினப்படல் ஓம்பு,**
**நல்கா ஒருவனை நாடி யான் கொள்வனை,**
**பல்கதிர் சாம்பிப் பகல் ஒழிய, பட்டீமோ-**
**செல்கதிர் ஞாயிறே!"**

**(கலி:147: 30-35)**

எனும் பாடலில் இருட்டைப் போக்கும் ஞாயிறே! நீ வானத்தில் தோன்றும் நிலாவைப் போலத் தண்ணீருக்குள் தோன்றுகின்றாய். அங்கே தண்ணீருக்குள் இருக்கும் தவளை உன்னைத் தின்றுவிடாமல் பார்த்துக்கொள். எனக்குத் தன்னைத் தராத ஒருவனாகிய அவனை நான் தேடிப்பிடித்துக்கொள்கிறேன். ஞாயிறே, அதற்குள் உன் ஒளிக்கதிர்களைக் குறைத்துக்கொண்டே சென்று மறைந்துவிடாதே. சில கதிர்களையாவது எனக்கு உதவியாக இங்கே விட்டுச் செல்வாயாக என்ற கூறி புலம்புகின்றாள். இது தலைவியின் தனிமையைக் குறிக்கின்றது. தலைவன் வரவில்லை, அவன் வராத பகல்பொழுதில் சூரியக்கதிர் மட்டும் துணையாக நிற்கின்றது. இப்போது அச்சூரியனும் மாலை நேரத்தை நோக்கி போகும் பொழுது, வெளிச்சத்தை மட்டுமாவது விட்டுச் செல். இல்லையெனில் இப்பொழுதிற்கு அடுத்து வரும் மாலை இரவு மேலும் வருத்தம் தருவதாக இருக்கும் என்று குறிப்பாள் உணர்த்துகின்றாள். இக்கதிர் மறைவை தோழி ஒருத்தி,

**"தொல் ஊழி தடுமாறி, தொகல் வேண்டும் பருவத்தால்,**
**பல்வயின் உயிர் எல்லாம் படைத்தான் கண் பெயர்ப்பான் போல்,**
**எல் உறு தெறு கதிர் மடங்கி, தன் கதிர் மாய்,"**

**(கலி:129:1-3)**

எனும் பாடலில் தொன்மையான ஊழிக்காலம் தடுமாற்றம் அடைந்து புதிய ஊழிக்காலம் பிறக்கும்போது புதியனவற்றைப் படைப்பவன் முன்னர் தோன்றி அவற்றை அழிப்பவன் போல கதிரவன் தோன்றி, மறையும் காலமே மாலைக்காலம் என்று மாலையின் தொடக்கத்தை இப்பாடல் பதிவு செய்கின்றது. மேலும்,

**"பொன்மலை சுடர் சேர, புலம்பிய இடன்நோக்கி,**
**தன் மலைந்து உலகு ஏத்த, தகைமதி ஏர் தர,"**

**(கலி:126: 1-2)**

**"கல் சோர்பு ஞாயிறுகதிர் வாங்கி மறைதலின்"**

**(கலி:134: 4)**

சூரியன் மறையும் பொழுது வந்து, மாலைநேரம் பிறக்கப்போகிறது என்று கூறுவதன் மூலம் பிரிந்திருக்கும் தலைவிக்கு மாலைக்காலம் பெருந்துன்பத்தைக் கொடுக்கும் என்பதை மாலை வரவு விளக்குகின்றது.

## முடிவுரை

வைகறை என்னும் சிறுபொழுது மருத நிலத்திற்குரிய பொழுது. இந்நிலத்தில் வாழும் தலைவன் இவ்வைகறைப் பொழுதில் வேட்டைக்குச் செல்வதாகவும், அவ்வேளையில் மனைவியானவள் சமையல் வேலை செய்து முடித்தலையும் காட்டப்பட்டுள்ளது.

தலைவன் வினை மேற்கொண்டு சென்றிருக்கிறான். தலைவனைப் பிரிந்து வாழும் தலைவி நிலையை உணர்ந்த தலைவன் வாடைக்கும், வைகறைப் பொழுதிற்கும் தலைவி துன்பப்படுவாள் என்று நினைக்கின்றான். ஆனால் தலைவியோ கண்ணீர் வடித்து அழும் பொழுதாகவே வைகறைப்பொழுது உள்ளது.

மருதநிலம் நிலவுடமைக்கு உட்பட்டது. ஆகையால் அந்நிலத்தின் தலைவன் அண்டை நிலத்தை கையகப்படுத்துவதைப் போல் மற்றொரு பெண்ணையும் மனவயப்படுத்தி அவளிடம் சென்று வருதலைக் கண்ட தலைவி வருந்தும் பொழுதாக உள்ளது. பல பெண்களைத் தழுவும் தலைவனை நிராகரித்து, பின்பு ஏற்கும் காமக்கிழத்தி, ஊடலை தவிர்க்கும் பொழுதாக வைகறை உள்ளது.

தலைவனோடு காதல் வயப்பட்டதால் தலைவிக்கு பசலை நோய் வந்தது. அதனால் தலைவியின் மனநிலை, உடல்மெலிவு ஆகியவற்றைக் கண்ட நற்றாய் தலைவியின் மெலிவு தெய்வத்தால் நிகழ்ந்திருக்குமோ என்று அச்சப்பட்ட பொழுது, தோழி விடியல் பொழுதில் வரைவு கடாதல் நிகழ்த்தினதை அறிய முடிகின்றது.

மருதநிலத்தில் விடியல் பொழுதில் புதுப்புனல் நீராட்டு நிகழ்கின்றது. மேலும் தலைவன் பரத்தையிடம் கொண்ட உறவை வெளிப்படுத்துகின்றது. இவ்விடியல் பொழுதில் திருமணக் காட்சி, வரைவு கடாதல், வாயில மறுத்தல் என்னும் துறைக்கு அதிகம் பயன்பட்டுள்ளது. தலைவன் கால

நீட்டிப்புச் செய்யும் பொழுது தோழியால் வாயில் மறுத்தலும், தலைவன் பரத்தையிடம் சென்று திரும்பி வரும்போது தலைவி வாயில் மறுத்தலும் சுட்டிக்காட்டப்படுகின்றது.

குறிஞ்சி நிலத்தில் நண்பகல் வரும்போது தலைவி ஊர் எல்லைப் புறத்தில் சுனை நீராடுதல் நிகழ்ச்சியும், அக்காதல் கற்பாக கைகூட பொருளீட்டுதல் நிகழ்ச்சியும், தலைவன், தலைவியின் வீட்டார் திருமணத்திற்கு முரண்படும் போது உடன்போக்கு நிகழ்ச்சிக்கும் உரியதாக வந்து பிரிதலும் பிரிதல் நிமித்தமும் என்னும் உரிப்பொருளை உணர்த்துகின்றது.

எற்பாடு மாலை நேரத் தவிப்பிற்கு முன் நிகழும் துன்ப நிகழ்வின் தொடக்கப் பொழுதாகும். இப்பொழுதில் மதியத்தின் வரவு, பிரிவுற்ற மாந்தர்களுக்குள் நிகழும் துயரம் ஆகியவை இலக்கியங்களில் சுட்டிக்காட்டப்படுகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. கே.எஸ். விஸ்வநாத சாஸ்திரி, ‘காலம்’, செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு:32: ப.45
2. வா.சா. பானு நூர்மைதீன், பழந்தமிழ் அகப்பாடல்களில் நிலமும் பொழுதும், பக்.236-237
3. சி.கணேசையர், ‘சிறுபொழுது’ செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு: 26: ப.48
4. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.10
5. ச.சாமபசிவனார், தமிழா இதோ உன் புதையல், பக்.56-57
6. ஞா.மாணிக்கவாசகன், சிலப்பதிகாரம், ப.155
7. வா.சா.பானு நூர்மைதீன், மு.நூ: ப.259
8. ந.சுப்புரெட்டியார், மு.நூ: ப.244
9. வா.சா.பானு நூர்மைதீன், மு.நூ:ப.242
10. மேலது, ப.244
11. மேலது, ப.246
12. மேலது, ப.259
13. மேலது, ப.24
14. இளம்.(உ_.ஆ) தொல், பொருள்: ப.12
15. நச்: (உ_.ஆ), தொல்.பொருள்: ப.12
16. க.ப. அறவாணன், அற்றை நாட் காதலும் வீரமும், ப.103
17. வ.சு.ப மாணிக்கம், தமிழ்க்காதல், ப.67

18. க.ப அறவாணன், அற்றை நாள் காதலும் வீரமும், ப.105

19. வா.சா.பானு நூர்மைதீன், மு.நூ:ப.251

20. க.ப.அறவாணன், மு.நூ ப.105

21. மேலது ப.105

22. திருக்குறள், 1267

23. க.ப.அறவாணன், அற்றை நாள் காதலும், வீரமும் ப.106

24. தி.நடராசன், 'இடைச்சொற்கள் எல்லும் தொறுமும்' வையை, ப.38

25. சி.வீரபாகுப் பிள்ளை, 'சிறுபொழுதாராய்ச்சி,'

    செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு-29, ப.176

26. கா.காளிமுத்து, தொல்காப்பிய இலக்கியக் கொள்கைகளும் குறுந்தொகையும், ப.65.

# இயல்-5



# மாலைப்பொழுதும் மாந்தர்கள் நிலையும்

# இயல் - 5

## மாலைப்பொழுதும் மாந்தர்கள் நிலையும்

**முன்னுரை**

மாலைப்பொழுது என்பது சூரியன் மறைந்த மாலை 6 மணி முதல் இரவு 10 மணி வரை உள்ள காலம் ஆகும். இம்மாலைக்காலம் அனைத்து உயிரினங்களும் அன்றாடம் வேலை முடித்து வீடு திரும்பும் பொழுது ஆகும். தொல்காப்பியர் அகத்திணைக்குரிய சிறுபொழுதாக மாலைப்பொழுதினைக் **'காரும் மாலையும் முல்லை'(தொல்.பொருள்.6)** எனக் குறிப்பிடுவர். மாலைப்பொழுது பெரும்பாலும் கார்காலத்திற்கு பெரிதும் பேசப்படுவதாய் உள்ளது. ஏனென்றால் மழை பெய்து தாவர இனங்கள் தனது விருத்தியைப் பெருக்கும் போது மனிதன் மட்டும் பிரிந்து இருந்து தன் வாழ்நாளை வீணாய் கழிக்கின்றான் என்பதை உணர்த்துகின்றன. இம்மாலைப்பொழுதை "கருமை நிறத்தைக் கொண்ட இரவு வானத்தின் ஓர் அடையாளமாக உருவாக்கப்பட்டதாகக் கூறலாம். பகல்பொழுது போய் கருமையாகத் தோன்றத் துவங்கும் இரவின் வருகை நேரமான மாலையே முல்லைத்திணையின் சிறுபொழுது ஆகும். முல்லை என்பது மேய்ச்சல் நில வாழ்க்கையுடன் தொடர்புடையதால் கருநீல வானம் தோன்றி இரவைக் காட்டியிங் கூறும் மாலையே அவர்களது களிப்பிற்கான நேரமாக இருக்கிறது. இவ்வாறு மன மகிழ்விற்குக் காரணமாகத் தோன்றும் கருமை வானமே இவர்களது வணக்கத்திற்குரிய பொருளாகிய மாயோன் என்று கூறலாம்".[1]

கார்காலமே பிரிந்த தலைவன் மீள்வதற்கு உரிய காலம்; தட்பமும் வெப்பமும் இடைநிலையில் உள்ள காலம்; தன் கன்றை நினைந்து திரும்பும் ஆ, கோவலர் ஊதும் குழலிசை, பூத்து மணக்கும் முல்லை ஆகியவை நிகழும் சிறுபொழுதாக மாலை அமைகின்றது.

அதாவது "பிரிந்து மீளுந்தலைவன் திறமெல்லாம் பிரிந்திருந்த கிழத்தி கூறுதல் முல்லைப் பொருளாயும், பிரிந்து போகின்றான். திறங்கூறுவனவெல்லாம் பாலையாகவும் வருதலின் அம்முல்லைப் பொருளாகிய மீட்சிக்கும் தலைவி இருத்தற்கும் உபகாரப்படுவது கார்காலமாம். என்னை? வினைவயிற் பிரிந்து மீள்வோர் விரைபரித்தேரூர்ந்து பாசறையினின்று மாலைக்காலத்து ஊர்வயின் வருஉங் காலம் ஆவணியும் புரட்டாசியும் ஆதலின் அவை வெப்பமும் தட்பமும் மிகாது இடை நிகர்த்தவாகி ஏவல் செய்து வரும் இளையோர்க்கு நீரும் நிழலும் பயத்தலானும், ஆர்பதம் மிக்கு நீரும், நிழலும் பெறுதலின் களிசிறந்து மாவும், புள்ளும் துணையோடு இன்புற்று விளையாடுவன கண்டு தலைவர்க்கும் தலைவிக்கும் காமக் குறிப்பு மிகுதலானும் என்பது. புல்லை மேய்ந்து கொல்லேற்றோடே புனிற்றாக் கன்றை நினைந்து மன்றிற் புகுதவும், தீங்குழலிசைப்பவும், பந்தர் முல்லை வந்து மணங்கஞற்றவும் வருகின்ற தலைவற்கும் இருந்த தலைவிக்கும் காமக்குறிப்புச் சிறந்தலின் அக்காலத்து மாலைப்பொழுது உரித்தாயிற்கு"[2] என்ற கருத்து இங்குக் காட்டத்தக்கதாகும். மாலைப்பொழுது உருவாக்கும் தனிமையும் துயரும் எல்லாத் திணைகளுக்கும் உரியவை என்றே சங்கப் பாடல்கள் கூறுகின்றன. "தனிமை உணர்வால் தலைவிக்கு மாலையின் நினைப்பே பெருந்துயர் தருகின்றது. மாலை வருகிறது என்றாலே அவள் வாடுகிறாள். அவள் வாட்டம் கண்டு தோழியும் வருந்துகிறாள். துயர் தரும் மாலைக்காலத்தை விளக்கும் தொடர்கள் இந்த உணர்ச்சி நிலையைத் தெளிவுறுத்த வல்லனவாய் உள்ளன."[3]

"மாலைக்காலம் பெண்மை நலத்தை அழிப்பதாகவும், தனிமையைத் தருவதாகவும், கொலைக் களத்து ஏதிலார் போல் துன்பம் கொண்டு வருவதாகவும் கூறப்படுகின்றது."[4]

சங்க இலக்கியத்தில் பிரிந்திருக்கும் தலைவியருக்கு மிக்க துன்பம் தரும் பொழுதாக மாலைப் பொழுதினைப் புலவர்கள் பாடியுள்ளனர். சங்க அகப்பாடல்களில் காதலர் வாழ்க்கை நிகழ்வுகள் இம்மாலைப்பொழுது தொடர்புடைப் பல புலவர்களாலும் பாடப் பெற்றிருக்கும் தன்மை இங்கு எடுத்துக் காட்டப்பட்டு விளக்கப்படுகிறது.

**துன்பம் தரும் மாலைப்பொழுது**

தலைவி கூற்றுப் பாடல்களில் மாலைப்பொழுது குறித்தும், பெரிதும் பேசப்படுகின்றது. இல்லறம் சிறப்புற அமைய பொருள் வேண்டும் என்பதற்காக பொருள் ஈட்டுவதற்கு தலைவன் தலைவியைப் பிரிந்தான். பிரிவை ஆற்றாது பெரிதும் வருந்துகின்ற தலைவியை ஆற்றியிருக்கும்படி தோழிக் கூறுகின்றாள். அதற்கு தலைவி இனிய துயிலுக்குரிய என் தலைவனின் மார்பை நினைந்து என் நெஞ்சம் செல்கிறது. நான் எப்படி ஆற்றியிருப்பேன். இதோ கடற்கரையில் வரிசையாக பூக்கள் மலர்ந்து குவிந்து கிடக்கின்றன. நீல நிறத்தை உடைய பெரிய கடல் ஒலித்துக்கொண்டிருக்கின்றது. மீனை உண்ண வரும் பறவை கூட்டங்கள் பெரிய புன்னை மரத்திலுள்ள கூடுகளில் போய் சேர்ந்துவிட்டன. அங்கும் இங்கும் அலமருகின்ற வண்டினங்கள் ஒலிக்கத் தொடங்கின. இவ்வாறு எல்லாம் தத்தம் இருப்பிடங்களைச் சென்றடைந்து தங்கும் பொழுதுதான் மாலைப்பொழுதாகும் என நெய்தல் நிலத்தலைவி புலம்புகின்றாள். விலங்குகள்கூட மாலைப்பொழுது வந்தவுடன் அதன் இருப்பிடம் தேடி சென்றடைந்துவிட்டது. தாவரங்களும் மாலைப்பொழுதில் தவறாமல் பூத்து நிற்கின்றன. ஆனால் தலைவன் மட்டும் தன் கடமையிலிருந்து தவறிவிட்டான். இப்பொழுதில் கீழ் காற்று வீசுவதால் மிகத் துன்பமாக உள்ளது. நெஞ்சமானது செயலழிந்து வருந்துகின்றது. அத்தகு துன்பத்தை தருகின்ற நம் தலைவன் மீண்டு வந்து நமக்கு அருள் செய்வாரா? என்பதும் தெரியவில்லை. நம்

நெஞ்சமும் நம்மை மறந்து நம்மை விட்டு பிரிந்து நமக்க அந்நியராகிப் போன தலைவன் இடத்து சென்றுவிட்டது.

மாலையில் வீசும் கொண்டல் காற்றால் நம் நெஞ்சம் கையற்று மிக்க துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கின்றது. இவ்வாறு நம்மை துன்பப்படுத்திவிட்டு, அவர் ஈட்டி வரும் பொருளால் ஒரு பயனும் இல்லை என்பது போல் கூறுகின்றாள் தலைவி. இதனை,

**"கானல், மாலைக் கழிப் பூக் கூம்ப**
**நீல் நிறப் பெருங்கடல் பாடு எழுந்து ஒலிப்ப,**
**மீன் ஆர் குருகின் மென் பறைத் தொழுதி,**
**குவை இரும் புன்னைக் குடம்பை சேர,**
**அசை வண்டு ஆர்க்கும் அல்குறு காலை,**
**தாழை தளரத் தூக்கி, மாலை**
**அழிதக வந்த கொண்டலொடு கழி படர்க்**
**காமர் நெஞ்சம் கையறுபு இனைய,**
**துயரம் செய்து நம் அருளார் ஆயினும்**
**அறா அலியரோ அவருடைக் கேண்மை"**

**(அகம்:40: 1-10)**

எனும் குன்றியனார் பாடல் மூலம் அறியலாம். இத்தகைய மாலைப்பொழுதில் ஆசை கொண்ட என் நெஞ்சு துணை இல்லாமல் வருந்துகின்றது. இப்படி துன்பம் தந்துவிட்டு நமக்கு அருள் புரியாமல் அவர் சென்றுவிட்டார் என்றாலும், அவரது நட்புறவு நம்மை விட்டு நீங்காமல் இருத்தல் வேண்டும் என்று புலம்புகின்றாள். தலைவி, தலைவன் வரவை நோக்கி காத்திருக்கும் மாலை நேரமாக இருந்தாலும், இப்பாடல் நெய்தல் நிலத்திற்குரிய பாடலாகும். இப்பாடலில் புன்னை மரம், கடல் ஒலி, மீனை உண்ண வரும் பறவை எல்லாம் தலைவியின் மனநிலையை பின்னணியாகக் கொண்டுள்ளன. மேலும் வடகிழக்கு

பருவக்காற்று வரவு தலைவியை மேலும் துன்புறுத்துவதாக இருக்கின்றது. இத்துன்பத்தினை நினைத்து நம்மை அடையாவிட்டாலும் பரவாயில்லை யாம் அவரின் நட்புறவை நீக்கிவிடக்கூடாது என்ற மன உறுதியை தலைவி வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

"ஆறு சிறுபொழுதுகளில்,மாலைப்பொழுது பிரியாது சேர்ந்திருக்கும் தலைவன் தலைவியர்க்கு இன்பம் செய் பொழுதாகவும், பிரிந்திருக்கம் தலைவன் தலைவியர்க்கு துன்பம் செய் பொழுதாகவும் சிறப்பாக சொல்லப்படும். புள்ளினம், விலங்கினம் என்றிவ்வாறான பிற உயிரினங்களும் பிரிந்து சேரும் பொழுது மாலைப்பொழுதாகும். தலைவியைப் பிரிகின்ற தலைவன் தலைவியை வந்து சேரும் பொழுதும் மாலைப்பொழுதாகும் என்பர்"[5]

**புன் கண் மாலை**

சங்க அகப் பாடல்கள் பெரும்பகுதியும் பிரிவு நிமித்தம் குறித்ததாய் அமைவதால் அப்பாடல்களில் காட்டப்படும், தலைவியும் தலைவனும் மாலைப்பொழுதில் பெருந்துன்பத்தில் வீழ்ந்தும் ஆழ்ந்தும் கிடப்போராய் அமைவர். அதிகமாகத் தலைவியே மாலைப்பொழுதில் துன்பமடைகின்றாள். வினைவயிற் பிரிந்த தலைவன் மீண்டும் வரும்வரை ஆற்றியிருக்கும்படிக் கூறும் தோழியை நோக்கித் தலைவி கூறுகின்றாள். இதனை,

**"இன்றே வருவர்; ஆன்றிகம் பனி என**
**வன்புறை இன்சொல் நன் பல பயிற்றும்**
**நின் வலித்து அமைகு வெண் மன்னோ – அல்கல்**
**புன் கண் மாலை யோடு பொருந்தி, கொடுங்கோற்**
**கல்லாக் கோவலர் ஊதும்**
**வல் வாய்ச் சிறு குழல் வருத்தாக்காலே!"**

**(அகம்: 74: 12-17)**

எனும் மதுரைக் கவுணியன் பூதத்தனார் பாடலில் மாலைப்பொழுது நாள்தோறும் துன்பத்தைத் தருவதாகப் புலம்புகின்றாள் தலைவி. அதைவிடக் கோவலர் ஊதும் குழலோசை மாலைப்பொழுது வந்துவிட்டதை உணர்த்துவதால் அது மேலும் மிகுந்த துன்பம் தருவதாக உள்ளது. மழைக்காலத்து மாலைப்பொழுது; முல்லை பூவின் மணம் நிலம் முழுதும் வீசுமாறு அரும்புகளை மலரச் செய்யும் மாலைப்பொழுது பிரிந்திருப்போருக்குப் பெரும் மயக்கத்தைத் தருகின்றது. இரலையோடு மடப்பினை இணைந்திருப்பதைப் பார்க்கும் பொழுது, இம்மான்களைப் போன்று நம்மால் இணைந்து இருக்கமுடியவில்லையே? என ஏக்கத்தைத் தரும் மாலைப்பொழுதாக உள்ளது. தோழியே உன் சொல்லைக் கேட்டுத் துணிவுடன் அமைதி காத்து ஆற்றியிருக்க நினைக்கின்றேன். ஆனால் புற உலகில் நிகழும் ஒவ்வொரு செயலும் என்னைத் துன்பமடையச் செய்கின்றதே. நான் இனி என்ன செய்வேன் என்பதுபடக் கூறுகின்றாள். உள்ளம் மன உறுதியுடன் இருக்கின்றது. உணர்வுகளை என்னால் கட்டிப்போட முடியவில்லையே! ஆற்றாது அழுதுபுலம்பும் படியாக மாலைப்பொழுது வந்து எனக்கு மயக்கத்தைத் தருகின்றதே என தலைவி பிரிவுத் துன்பத்தால் பேதுற்றுப் புலம்புவதைக் காண முடிகின்றது.

மேலும் கலித்தொகை நெய்தற்கலியில் அமைந்த பாடலொன்றில் தலைவனைப் பிரிந்த தலைவி மாலைப்பொழுது கண்டு மிகவும் வருந்திக்கூறுகின்றாள். இதனை

**“மாலை நீ- தூ அறத் துறந்தாரை நினைத்தலின், கயம் பூத்த**
**போது போல் குவிந்த என் எழில் நலம் எள்ளுவாய்;**
**மாலை நீ – தையெனக் கோவலர் தனிக்குழல் இசை கேட்டு**
**பையெனற் நெஞ்சத்தேம் பக்கம் பாராட்டுவாய்;**
**மாலை நீ–தகை மிக்க தாழ்சினைப் பதி சேர்ந்து புள் ஆர்ப்ப,**
**பகை மிக்க நெஞ்சத்தேம் புன்மை பாராட்டுவாய்;”**

**(கலி:118;9-10;13-14;17-18)**

எனும் பாடல் மாலை நேரத்தில் கோவலன் ஊதுகின்ற குழல் ஓசை வருத்துவதையும் அன்பு இல்லாத உள்ளத்துடன் இருப்பவரை நெஞ்சம் நினைக்கின்றது என்று தலைவி புலம்புவதாக அமைந்துள்ளன. தலைவி, தலைவன் வராததற்கான யதார்த்த நிலை என்ன என்ற கேள்வியை எழுப்பும் சூழ்நிலையை தலைவி உணரவில்லை.அதனால் தலைவியின் மனநிலை மாலைநேர வரவை எதிர்பார்ப்பவளாகவும், கைவிடப்பட்டு துன்பத்தில் உள்ளவளாகவும் இருக்கின்றாள்.

வெண்கொற்றக்குடையால் நிழலைச் செய்து அரசாண்ட அரசனுக்கும், உலகை ஆளவரும் அரசனுக்கும் இடைப்பட்ட வருத்தம் தருகின்ற காலம் போல வந்துவிட்ட மாலையே, நீ மயக்கத்தை உடைய மாலையாய் இருந்தாய் என்றாள் தலைவி. மாலைப்பொழுதே! குளத்திலே பூத்த மலர் அரும்பு மலர்வது போல உன்னைக் கண்டு என் மனம் குவிந்து இருக்க, என் அழகினை இகழுகின்றாய். வண்டுகள் ஆராவரிக்கும் படி கிளையிடத்தே மலர்ந்த பூப்போல, மனம் நெகிழ்ந்த காதலரைக் கூடியிருக்கின்ற மகளிரின் பேரழகை போக்க மாட்டாய். தலைவனைப் பிரிந்திருக்கின்ற என்னைப் போன்றோரின் அழகை மாலைப்பொழுதே இகழ்கின்றாய். ஆதலால் நீ எனக்கு மயக்கத்தை உடைய பொழுதாக உள்ளாய். உன்னால் என் பேரழகு அழிந்துவிட்டது. தனித்திருப்போரை மட்டுமே நீ தவிக்கச் செய்கின்றாய்.

கோவலருடைய குழல் ஓசையோடு பிரிந்திருக்கும் என்னைப் போன்றோரின் உயிரைக் கொள்ளுமாறு மாலைப்பொழுதே வருகின்றாய். செவ்வழிப் பண் போல பேசும் மொழியினை உடையவரைப் பாராட்டும் பொய்யற்ற நனவிற் புணர்ச்சியில் பெற்ற புதிய நலத்தை நீ கடிவதில்லை. என்னைப் போன்று தலைவனைப் பிரிந்திருக்கும்

தலைவியரே மட்டும் கடிந்து கொள்கின்றாய், நீ மிகுந்த மயக்கத்தைத் தருகின்றாய்.

சேவலும் பெடையும் ஆரவாரித்து இன்பமாக இருக்கின்றது. அதைக் கண்டு பகையாகக்கொண்டு வெறுக்குமாறு எம்மை துன்பம் செய்கின்றாய். முல்லையின் முகத்தை வண்டுகள் திறப்பதுபோல ஆடவரால் திறக்கப்படுகின்ற அழகுமிக்க மகளிரின் முறுவலை நீக்கமாட்டாய், அவர்கள் புன்முறுவலைக் கடிவதில்லை. தலைவனைப் பிரிந்தவர்களுக்கு மேன்மேலும் துன்பமும், இணைத்திருப்போருக்கு மிக்க இன்பம் தருகின்றாய். மயக்கம் தரும் மாலைப்பொழுதே எம்மை நினையாது எங்கள் மீது அன்பில்லாத உள்ளமுடைய தலைவனை நினைந்து என் நெஞ்சம் நெகிழ்கின்றது. ஊரார் அலர்தூற்றும் செயலையும் செய்கின்றாய். தலைவனின் நினைவும் நம் நெஞ்சைவிட்டு நீங்காது இருக்கச் செய்கின்றாய் மாலைப்பொழுதே ஒரே நேரத்தில் பிரிவுக்கு துன்பத்தையும், இணைத்திருப்போருக்கு இன்பத்தையும் தருவது எந்த விதத்தில் நியாயம் என்பது போல் தலைவி கேட்கின்றாள். இன்பம் x துன்பம், பிரிவு x இணைப்பு பொழுது மாலை. வெறுப்பு x மகிழ்ச்சி, மலர் மலர்ச்சி x மனம் வருத்தம், என்பதுபட ஒருசேர நிகழும் நிகழ்வாக அமைகின்றது. இயற்கையை இழுத்து வந்து வாழ்வோடு இணைத்து, அந்த வாழ்வென்ற அரும்பொருளை இயற்கை என்ற பெரும்பொருளோடு ஐக்கியப்படுத்திப் பார்த்தவர்கள் அரும்பெருங்கவி என்பர்.

“ஓரறிவு உயிர்களையே உருக்குலையச் செய்துவிட்ட மாலை, ஆறறிவு உயிர்களை, அவர்களுள்ளும் காதலரைப் பிரிந்து தனித்து வாடும் மாதர்களை வாளாவிடுமா? வேதனை மீதூர்ந்து அவர்களை விம்ம வைத்து விட்டது.”[6] அதனால் அஞ்சி நடுங்கிய அகநானூற்றுப் பாடல்

தலைவிக்கு வினை காரணமாக பிரிந்த தலைவன் மீது மிகுந்த கோபமும், அதே நேரத்தில் பிரிவு ஏக்கமும் கொள்கிறாள்.

ஞாயிறு உலகப் பொருள்கின் மீது தன் கிரணங்களை ஓட்டி, அவை ஒளிபெற்றுத் தம் செயலாற்றி நனி வாழத் துணைபுரியும் தனது முறையான கடமையைப் பகல் முழுவதும் இனிதாற்றிவிட்டான். அதனால் மேற்கு வானத்தில் காய்ந்து மறைந்துவிட்டான். மாலையும் வந்தது; முதுமை கொண்ட ஆண்மான்கள் தம் பெண் மான்களை அழைக்க, அனைத்து பெண்மான்களும் விரைந்து செல்கின்றன. ஆண்காட்டுப்பூனை, பெண்காட்டுப்பூனையின் பசியைப் போக்குவதற்கு கோழியைப் பற்றிக்கொண்டு உண்ணக் கொடுக்கின்றன.

மாலை நேரத்து அன்பு, தவிப்பு, அரவணைப்பு, அன்பான பிணவைக் காண வெருகு இரையை எடுத்துக்கொண்டு தவிப்போடு செல்கின்ற காட்சி தலைவிக்கு மிகுந்த துன்பத்தைத் தருகின்றது. இதனை,

**"இலங்கு சுடர் மண்டிலம் புலம் தலைப் பெயர்ந்து,**
**பல் மழுகிய கல் சேர் அமையத்து,**
**அலந்தலை மூதேறு ஆண்குரல் விளிப்ப,**
**--------------------------------------------------------**
**--------------------------------------------------------**
**குவி அடி வெருகின் பைங்கண் ஏற்றை**
**ஊன் நசைப் பிணவின் உயங்கு பசி களை இயர்,**
**தளிர்புரை கொடிற்றின், செறிமயிர் எருத்தின்,**
**கதிர்த்த சென்னி கவிர்ப்பூ அன்ன**
**நெற்றிச் சேவல் அற்றம் பார்க்கும்**
**புல்லென் மாலையும், இனிது மன் றம்ம".**

**(அகம்:367: 1-3, 8.13)**

எனும் பரணர் பாடல் வழி அறியலாம்.

மாலைப்பொழுதில் பிணைக்கு இரை கொண்டு செல்லும் வெருகின் காதல் பற்றை உணர்த்துகிறது. அம்மாலைப்பொழுதில் தலைவன் பிரிவால் வருந்தும் தலைவிக்குத் துயரம் மீக்கூர்ந்து நிற்கிறது. விலங்குகளுக்கு மகிழ்ச்சி, தலைவிக்குத் துன்பம். மாலைப்பொழுதில் ஆண்மான்களை நோக்கி பெண்மான்கள் விரைகின்றன. என் காதலா் என்னை நினைத்து இன்னும் வரவில்லை. தலைவியின் உள்ளத்துயிர் முழுவதும் ஏக்கப் பெருமூச்சாக மாலைப்பொழுது வந்ததை மறைமுகமாகக் கூறித் துன்புறுகின்றாள்.

களவு, கற்பு எனும் இருபாற்பட்ட காதல் வாழ்க்கை நிகழ்வுகளில் தலைவன் தலைவியர்க்கு இடையிலான பிரிவுக்காலத்து மாலைப்பொழுதில் அவர்தம் நிலையும் சங்கப் பாடல்களில் காட்டப்படுதல் இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றது.

**வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுதல்**

வினைமுற்றி மீளும் தலைவன் தலைவியைச் சந்திக்கத் துடிக்கும் மனநிலையில் பாகனை விரைவுபடுத்துவான். பிரிவால் தலைவி அடையும் தவிப்புகள் தலைவனுக்கு மிகுந்த துன்பத்தைத் தருகின்றது.

“தலைவியைக் காண அவனது உள்ளத்தில் தோன்றும் ஆர்வமும் வேட்கையும் பிரிவு உணர்ச்சியை அழித்து நிற்கின்றன; புணர்வு நம்பிக்கையை ஊட்டி நிற்கின்றன. தலைவனின் இம்மனநிலையால் தலைவனுக்கு இயற்கை உயிர்கள் கூடஇணைந்தே காட்சியளிக்கின்றன என்பர்”.[7]

“மாலைப்பொழுதே ஆயா் தம் நிரையைப் புல்வெளிகளிலிருந்து திரளாக வீட்டுக்குத் திரும்பக்கொண்டு வரும் நேரமாகும். அந்த ஒளியில் ஆயர்தம் புல்லாங்குழலை மகிழ்ச்சியாக இசைத்துக்கொண்டு, ஆக்களின் கழுத்தைச் சுற்றியமைந்த மணிகள் இனிதாக ஒலிக்க வீடு திரும்புவர்.

எனவே மாலைக் காலங்களில் ஆய்ச்சியர் தொலைவில் ஒலிக்கும் மணிகளின் ஒலியும் புல்லாங்குழல் இசையும் தம் கணவன்மார் வருவதை அறிவிக்கக்கேட்டு மிக்க துயருறுவர். ஆகவே முல்லை மக்களின் பொது வாழ்வில் மாலைப்பொழுது பெருமைக்குரிய இடத்தைப் பெறுகின்றது. இத்தகைய கற்பனையை எல்லா முல்லைப் பாடல்களிலும் காணலாம். அவை முல்லை நிலத் தலைவர்களையும் அல்லது அரசர்களையும் பாடுவதோடு கூட அவர்களுடைய நீண்ட பிரிவுகளையும் சித்திரம் செய்கின்றன. அயல்நாடுகளுக்குச் சென்ற தலைவனும், மாலைக் காலத்தில் திரும்பி வருவதாகக் கூறப்படுகின்றன. எல்லாப் பரிவுகளிலும் தலைவன் திரும்பி வரும் நேரமாக மாலைப்பொழுதைச் சித்தரித்தல் செய்யுள் மரபாகியுள்ளது என்று கூறுவர்”[8]

**நனை நகு மாலை**

வினை முற்றி மீளும் தலைவன் வரும் வழியில் தான் காணும் விலங்கினங்களின் அன்புத் தன்மையை எடுத்துக் கூறித் தேரை விரைந்து செலுத்துமாறு தேர்ப்பாகனுக்குக் கூறுகின்றான்.

**“கனை அல் ஆம் குரல காற் பரி பயிற்றி,**
**படு மணி மிடற்ற பய நிரை ஆயம்**
**கொடு மடி உடையர் கோற் கைக் கோவலர்**
**கொன்றை அம் குழலர் பின்றைத் தூங்க**
**மனைமனைப் படரும் நனை நகு மாலை”**

**(அகம்: 54: 8-12)**

எனும் பாடலில் ஆனிரையானது பால் வீங்கும் மடியோடு, கன்றை எண்ணிக் கனைக்கும் குரலோடு, கழுத்தில் இருக்கும் மணி ஒலிக்கும் படி வருகின்றது. அவற்றை மேய்க்கும் கோவலர் ஆடையை மடித்துக் கட்டிக்கொண்டு, கையில் வைத்திருக்கும் குழலை ஊதிக்கொண்டு

வருகின்றனர். இதில் ஆநிரையானது தனது கன்றுக் குட்டிக்கு பாலூட்டுவதற்காக செல்லும் நிலையானது தாய், சேயின் அன்பு வெளிப்படுகிறது. கோவலர் மனைக்கு திரும்புவது போல தலைவன் தன் வினையை முடித்து விட்டு மனைக்கு சென்று தன் குடும்பத்துடன் இன்பமாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தை வெளிக்காட்டுகின்றது.

மாலைப்பொழுது என்பது மனித உணர்வுகளுக்கு மட்டுமின்றி பிற உயிரினங்களும் தன் செயலைச் செய்து முடித்து ஓய்வு எடுக்கப்போகும் ஆரம்பப் பொழுதாகும். காலைப்பொழுது கடமையின் ஆரம்பம், மாலைப்பொழுது கடமை முடிந்து இல்லறத்தில் தான் இனிதாக இருக்கும் பொழுதாகும். மொட்டுகள் மலரும் மாலைக்காலம். கன்று நினைந்து மன்று நோக்கி வரும் மாலைப்பொழுது. ஆநிரைகளை மேய்த்துவிட்டு கோவலர்கள் வீடு வந்து சேரும்பொழுதாகும். குழலினை இசைத்துக்கொண்டு தன் கடமையை முடித்து மகிழ்ச்சியோடு வீட்டிற்கு வரும் பொழுதாகும். இவ்வாறு ஒவ்வொரு உயிரினமும் (மனிதர்கள். விலங்குகள்) காலையில் காடு நோக்கி சென்று மாலையில் கடமைகளை முடித்துவிட்டு வீடு நோக்கி வருகின்றனர். வினை மேற்சென்ற தலைவன் மட்டும இன்னும் வரவில்லையே? என தலைவி கவலைகொள்ளும் மாலைப்பொழுதாக அமைகின்றது.

**புலம்பு கொள் மாலை**

ஆர்க்காடு கிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார் பாடலில் கூறப்பெறும் தலைவன் மாலைப்பொழுதில் தலைவி வருந்துவாள் எனக்கூறித தேர்ப்பாகனிடம் தேரை விரைவில் செலுத்தச் சொல்கிறான். மழைநீர் வரிவரியாக இழைத்த செம்மண் நிலப்பக்கத்தில் தேர் செல்லும் வழியில் ஈரமணலைக் காட்டுக் கோழி கிளறும். பாம்புகள் வாழ்கின்ற புற்றின் ஈரமான மேற்புறத்தை தன் கொம்பினால் குத்திய மண்ணுடன் ஆனேறு தன் இளைய பசுவினைத் தழுவிய வண்ணம் மாலைப்பொழுதில்

ஊர் நோக்கி வரும். கறவை மாடுகள் ஒன்று சேர்ந்து கன்றுகளை அழைத்து தொழுவங்களில் சென்று சேரும். பசுக்களின் கழுத்தில் கட்டப்பட்ட மணியின் ஓசையானது தனிமைத் துன்பத்துடன் இருக்கும் மாலைப்பொழுதில் கேட்குந்தொறும் கலங்கிய நிலையில் வாழ்பவளாகிய தலைவி, செயலற்ற துயர நிலையை நீக்கும் காலம் இதுவே ஆகும். ஆதலால் தேரினை விரைவாகச் செலுத்துவாயாக என்று கூறுகின்றான். இதனை,

**“மண்ணுடைக் கோட்ட் அண்ணல் ஏஎறு**
**உடன் நிலை வேட்கையின் மட நாகு தழீஇ,**
**ஊர்வயின் பெயரும் பொழுதில் சேர்பு உடன்,**
**கன்று பயிர் குரல, மன்று நிறை புகுதரும்**
**ஆ பூண் தெண் மணி ஐது இயம்பு இன் இசை**
**புலம்பு கொள் மாலை கேட்டொறும்**
**கலங்கினள் உறைவோள் கையறு நிலையே**
**(அகம்:64 11-17)**

எனும் பாடல் வரிகள் மூலம் அறியலாம்.

மாலைப்பொழுது தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு மிகுந்த துன்பம் தரும் பொழுதாக உள்ளது. மழைப்பொழிந்து செம்முல்லை அரும்புகள் மலர்ந்து மணம் வீசும் குளிர்ச்சி மிக்க பொழுதாக உள்ளது. ஆநிரைக் கூட்டங்கள் தன் கன்றுகளோடு சேர்ந்திருப்பதால் அவை மகிழ்ச்சியுடன் இருக்கின்றன. பூக்கள் மலர்ந்து காடுகள் மணம் வீசி குளிர்ச்சியுடன் காணப்படுகின்றன. இவ்வுலகமே இந்த மாலைப்பொழுதில் மகிழ்ச்சியுடன் இருக்கும் போது, என் தலைவி மட்டும் தனிமைத்துயரில் கையற்று இருக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டாள். அதற்குக் காரணமானவன் நான். அவள் துன்பப்படும் நிலைக்கு நான் செய்துவிட்டேன். விரைவில் வினை முடித்திருந்தால் நானும்

தலைவியோடு இன்புற்றிருந்திருப்பேன். ஐந்தறிவு படைத்த உயிரினமான ஆநிரைக் கூட்டங்கள்கூட தன் கன்றுகளை நினைத்து மேய்ச்சல் தொழிலை விடுத்து மன்று நோக்கி மாலைப்பொழுதில் சென்றுவிட்டன. ஆறறிவு படைத்த நாம் இன்னும் செல்லவில்லையே. இருவருக்குமே துயரும் தரும் பொழுதாக மாலைப்பொழுது உள்ளது. எல்லா உயிரினங்களும் தன் தொழிலை ஒழித்து அடங்கும் பொழுதாகும். ஆரவாரித்த உலகம் அமைதியாகத் தூங்குவதற்கு ஆயத்தமாகும் பொழுதும் இம்மாலைப்பொழுதாகும். இப்பொழுதில் சேர்ந்திருப்போருக்கு மகிழ்ச்சி தரும் பொழுதாகும். பிரிந்திருக்கும் தலைவன், தலைவியருக்குத் துன்பம் தரும் பொழுதாக அமைகின்றன என்பதனை இப்பாடல் தெரிவிக்கின்றது.

**எல்லை போகிய புல்லென் மாலை**

கார் வந்தும் தேர் இன்னும் வரவில்லையே என்று தலைவி மிகவும் வேதனை அடைவாள். ஆதலால் தேரை விரைவில் செலுத்துமாறு வினை முடித்து வரும் தலைவன் தேர்பாகனிடம் கூறுமிடத்து மாலைப்பொழுது அமைகின்றது.

கார்ப்பருவம் வந்ததால் முல்லை நிலத்து வண்டினங்கள் முல்லைப் பூவிலிருக்கும் தேனை உண்டு மகிழ்கின்றன. பிணைமானும், கலைமானும் ஒன்றுபட்டு இன்பத்துடன் துள்ளித் திரிகின்றன. நம் பிரிவினால் பசலை பூத்த மேனியை உடையவளாய் ஒப்பனை செய்யாது கூந்தல் சிக்குண்டு கிடக்கும். அவ்வாறு வருந்தியிருக்கும் தலைவியின் வருத்தத்தை நாம் போக்க வேண்டும் என்று கூறுகின்றான் தலைவன். பகற்பொழுது கழிந்த பொழிவற்ற மாலைப்பொழுதில் இனிய முல்லை நிலத்து ஊரின் கண்ணே பெருந்துன்பத்தால் வருந்திய நீர் பொழியும் மையுண்ட கண்களையும், நல்ல மேனியில் பரவிய பசலையையும் உடைய நம் தலைவி மின்னலை ஒத்த தன் கூந்தலில் விழுந்த

பின்னலான சடையினை நீக்கிக் கூந்தலை அழகு செய்யும் பொருட்டு தேரினை விரைந்து செலுத்துவாயாக என்று பாகனிடம் முறையிடுகின்றான்.

**“ததர்தழை முனைகிய நெறிநடை மடப்பிணை**
**ஏறுபுணர் உவகைய ஊறுநில உகற,**
**அம்சிறை வண்டின் மென்பறைத் தொழுதி**
**முல்லை நறுமலர்த் தாதுநயந்து ஊத,**
**எல்லை போகிய புல்லென் மாலை,**
**புறவுஅடைந் திருந்த உறைவுஇன் நல்ஊர்,**
**கழிபடர் உழந்த பனிவார் உண்கண்**
**நல்நிறம் பரந்த பசலையள்**
**மின்நேர் ஓதிப் பின்னுப்பிணி விடவே.**

**(அகம்: 234: 10-18)**

எனும் பேயனார் பாடலில் தலைவியின் பிரிவுத் துன்பத்திற்குத் துணையாக இருப்பவை பொழுதுகளாகும். தலைவிக்கு அப்பொழுதுகள் மிகுந்த வேதனையைத் தருவதாகவே இருக்கின்றன. அப்பொழுதில் இணை மானும், பிணை மானும் மகிழ்ச்சியுடன் இன்பம் துய்த்திருக்கும். முல்லை மலரில் வண்டிங்கள் தேனை (பூந்தாதை) உண்டு மகிழ்கின்றன. கார்காலம் என்பதால் நிலம் முழுவதும் செழுமையுடன் காணப்படுகின்றன. பகற்பொழுது மிகவும் மகிழ்ச்சியாகத்தான் தலைவிக்கு இருக்கின்றது. “எல்லை போகிய புல்லென் மாலை’’ தான் புலம்பச் செய்விக்கின்றது. “புறவு அடைந்திருந்த உறைவுஇன் நல்ஊர்” தான் தலைவிக்கு இப்பொழுது துன்பம் தருவதாக தெரிகின்றன என தலைவன் கூறுகின்றான். நீர் பொழியும் கண், பசலை பாய்ந்த மேனி, சிக்குண்ட கூந்தல், தலைவனின் பிரிவால் தலைவிக்கு தனித்திருக்க முடியாத

நிலையை உணர்த்தும் அடையாளங்களாகும். அதிலும் மாலைப்பொழுது தலைவனுடன் சேர்ந்து இருக்கும் பொழுது. அப்பொழுது பிரிந்திருக்கும் மனதிற்குத் துணிவைத் தரவில்லை. மகிழ்ச்சியைத் தரவில்லை. மொத்தத்திற்கு மாலைப்பொழுது இன்பத்தைத் தரவில்லை. துன்பத்தையே தருகின்றது என புலம்பவதைக் காணமுடிகின்றது.

**தலைவன் நெஞ்சொடு கிளத்தல்**

பிரிவு எண்ணமும், பிரிய வேண்டிய நிலைப்பாடும், பிரிந்திருக்கும் நிலையும் தலைவனுக்கும் துன்பம் தருவதாகும். தன் பிரிவினால் தானும் தன் தலைவியும் பெற்ற, பெறவிருக்கின்ற துன்பங்களை நினைவில் கொண்டு வருந்துகின்ற தலைவன், தலைவி மீது கொண்டிருக்கும் அன்புடைமை சங்கப் பாடல்கள் பலவற்றில் காட்டப் பட்டுள்ளன. பிரிவு என்பது இருபாலார்க்கும் துன்பம் தருவதாகும் என்பது சுட்டத்தக்கது.

“இம்மைக்குச் செல்வமும், மறுமைக்கு அருளும் இன்றியமையாதவை என்பதைப் பண்டைச் சான்றோர் நன்கு உணர்ந்திருந்தினர். அதனால் தான் பொருள் ஈட்டுதலை வாழ்க்கையின் முதன்மையான கடமைகளுள் ஒன்றான அவர்கள் கொண்டனர். திருமணத்திற்கு முன்னும் பின்னும் அவர்கள் பொருளீட்டும் நோக்கத்துடன் வேறு வேறு நாடுகளுக்குச் சென்ற செய்திகள் பல பாடல்களில் காணப்படுகின்றன. இவ்வாறு தம் சொந்த முயற்சியால் பொருளீட்டுதலை அவர்கள் போற்றினரே அல்லாமல் முன்னோர்கள் தேடி வைத்த செல்வத்தில் வாழ்வதை பெருமையாகக் கருதவில்லை.”[9] எனும் நோக்கத்துடன், முன்பொரு காலத்தில் பொருள் தேடிச் சென்று வந்த தலைவன் மீண்டும் பொருள் தேடத் தூண்டும் நெஞ்சினை நோக்கி,

தலைவியைப் பிரிவதால் வரும் துன்பத்திற்கு அஞ்சி வருந்துகின்றான். இடைசுரத்தின் கண் நம் வலியனைத்தையும் குறைக்கின்ற மாலைப்பொழுதில் மனையில் மாட்சியமைப்பட்ட விளக்கினை ஏற்றுவாள். அதனைப் பார்க்கும் ஆண்புறா தன் பெண்புறாவைக் குரல்கொடுத்து அழைக்கும். அதைக் கண்ட தலைவிக்கு தலைவனாகிய நான் இன்னும் வரவில்லையே என வருந்தி அழுது கொண்டிருப்பாள். மனையகத்தில் தலைவனோடு இருந்து விளக்கேற்றுதல் ஒரு பண்பாட்டு நிலையாகும். 'நெஞ்சமே என்னை வருத்தாதே. தலைவி அடையும் துன்பத்தைத் தாங்கிக் கொள்ளமுடியாது. பொருளினும் தலைவியுடன் இருத்தலே சிறந்தது என நினைக்கும் அன்பிற்குரியவனாகத் தலைவன் விளங்குதலைக் காணமுடிகிறது. இதனை,

**"அகன் சுடர் கல் சேர்பு மறைய, மனைவயின்**
**ஒண் தொடி மகளிர் வெண் திரிக் கொளாஅலின்,**
**குறு நடைப் புறவின் செங் கால் சேவல்**
**நெடு நிலை வியல் நகர் வீழ்துணைப் பயிரும்**
**புலம்பொடு வந்த புன்கண் மாலை,**
**'யாண்டு உளர்கொல் எனக் கலிழ்வோள் எய்தி,"**

**(அகம்:47: 9-14)**

என்ற ஆலம்பேரி சாத்தனார் பாடல் வழி அறியலாம்.

**புல்லென் மாலைப்பொழுது**

பொருள் தேடும் பொருட்டுப் பிரிந்து செல்கின்ற தலைவன் தனது பிரிவினால் தலைவி எந்நிலை அடைவாளோ என்று வருந்தித்தன் நெஞ்சிற்குக் கூறிக்கொள்கிறான்.

**“மைஅற விரிந்த படைஅடை சேக்கை**
**ஐமென் தூவி அணைசேர்பு அசைஇ,**
**மையல் கொண்ட மதன்அழி இருக்கையள்**
**பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி,**
**‘நல்ல கூறு’ என நடுங்கி**
**புல்லென் மாலையொடு பொரும்கொல் தானே?**
**(அகம்:289: 12-17)**

என்கின்றான் தலைவன். பொருள் தேடும் பொருட்டு தொலை தூரத்தில் வாழ்வதால் தனிமையுற்றிருக்கும் தலைவி, நான் பிரிந்து வந்த ஒவ்வொரு நாளுக்கும் ஒரு கோடு சுவரில் போட்டு, அதனை ஒவ்வொன்றாக நாள்தோறும் விரலால் எண்ணிப் பார்த்து கண்ணீர் சிந்துகின்றாள். இப்படி வருந்திக் கொண்டிருக்கும் போது பல்லியானது ஒலிக்கும். அந்த ஒலி கேட்கும் போதெல்லாம் “நல்லது கூறு” என்று வேண்டிக் கொண்டு ஒளியிழந்த மாலைப்பொழுதில் துன்புற்று வருந்திக்கொண்டிப்பாள் எனக் கூறுகின்றான். பொருள் தேடச் செல்ல தலைவனின் மனம் மறுக்கின்றன. ஆனால் தலைவி மீது மிகுந்த அன்புடையவனாகக் காணப்படுகின்றான். தலைவியின் பிரிவுத் துன்பத்தை உணர்ந்தவனாக தலைவன் இருக்கின்றான். தெய்வத்தைத் தொழுது, மனம் நடுங்கி ஒளியிழந்த மாலைக்காலம் தலைவிக்குத் துன்பம் தருவதாகத் தலைவன் மனம் வருந்துவது தலைவி மீது கொண்ட அன்பின் வெளிப்பாடாகும், ‘பல்லி நல்லது கூறுமாறு’ தலைவி வேண்டிக்கொள்வது அவள் தலைவன் மீது கொண்ட காதலை வெளிப்படுத்துவதாக உள்ளது. தலைவனின் பிரிவினால் தலைவிக்கு ஒளியிழந்த மாலைப்பொழுதாக உள்ளது. அதே நிலையைத் தலைவனும் உணர்ந்திருப்பான் என்றாலும், அந்தப் பிரிவுத் துன்ப அனுபவத்தைத் தலைவி மீது ஏத்திக் கூறுகின்றான். பாலைவழியின் கொடுமையைவிட தலைவியின் பிரிவுத்துன்பம் மாலைப்

பொழுதில் மயக்கத்தைத் தருகின்றது. தலைவியின் உள்ளமோ வருந்துவதை விட்டொழியாது நம்மையே சுற்றிச் சுழன்று கொண்டிருக்கும் என்று சொல்லும் தலைவன், தலைவி நினைக்கின்றாளோ? இல்லையோ? இவன்தான் நினைத்துக்கொண்டு மனம் வருந்திக்கொண்டிருக்கின்றான் என்பது இப்பாடல் வழிப் புலனாகின்றது.

**பழங் கண் மாலை**

தலைவன் பொருள் காரணமாக பிரிய, பிரிவாற்றாது வருந்தும் தலைவியைக் கண்டு தோழி "நீ இவ்வாறு ஆற்றாது வருந்தினால் நான் உன்னை ஆற்றுவிக்கும் கடமையை ஆற்றுவிக்க இயலாது போய்விடுமோ என்று வருந்துகின்றேன். நீ உயிர்விடு முன்னர் என் உயிர், என் உடம்பை விடு போதற்குரிய காலம் வந்துவிட்டது என்றே கருதுகின்றேன் எனக் கூறுகின்றாள். இதனை

**"மை இல் மான் இனம் மருள, பையென**
**வெந்து ஆறு பொன்னின் அந்தி பூப்ப,**
**ஐயறிவு அகற்றும் கையறு படரோடு**
**அகல் இரு வானம் அம் மஞ்சு ஈன,**
**பகல் ஆற்றுப்படுத்த பழங்கண் மாலை,**
**காதலர்ப் பிரிந்த புலம்பின் நோதக,"**

**(அகம்:71: 5–10)**

"காதலரைப் பிரிந்து தனிமையில் வருந்தியிருக்கவும், அருந்துன்பம் அடைந்த ஒருவரின் அறிய மார்பினைக் குறி வைத்துக் கூர்மையான வேலினை எறிவார் போல் இம்மாலைக்காலமும் ஓயாது ஒழியாது வருத்தத்தைத் தருகின்றது. கண்ணாடியில் ஊதிய ஆவிமுன் பரந்து பின் சுருங்கி வருதல் போலவும், உயிர் உடலைவிட்டுப் பிரிந்து பறந்தோடுவது போல இம்மாலைப்பொழுது வந்துவிட்டது.

மாலைப்பொழுதானது தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு மட்டும் துன்பம் தராது, தலைவியை ஆற்றுப்படுத்த முடியாத தலைவனுக்கும் மிகுந்த துன்பம் தருவதாகத் தோழி கூறுகின்றாள். எனக்கே உயிரை விடும்படியாக இருக்கும் பொழுது, தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவியே உனக்கு எவ்வளவு துன்பத்தைத் தரும் என்பதனை தான் உணர்ந்ததாகத் தோழி கூறுவதன் மூலம் மாலைப்பொழுதின் செயல்பாடுகளை அறிய முடிகின்றது.

**வாழ்த்தும் நிலை**

"களவு கற்பு என்பன சமுதாய நிலை நோக்கிய சொற்கள். சமுதாயத்திற்கு மறைவு களவு எனவும், வெளிப்படை கற்பு எனவும் படும்,"[10] என்று களவு வழியில் வந்த கற்பு நிலையே குடும்பம் ஆகும். அக்குடும்பம் சிதைவுறாமல் நிலை நிறுத்த வாயில்களாக,

**"தோழி, தாயே, பார்ப்பான், பாங்கன்,**
**பாணன், பாடினி, இளையர், விருந்தினர்,**
**கூத்தர், விறவியல், அறிவர், கண்டோர்,**
**யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப"**

**(தொல், நூ:1139)**

ஆகியோர் இருப்பர் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இவ்வாயில்களில் தோழி, மக்கள் ஆகியோர் தலைவர் குறித்த மாலை நேரத்தில் திரும்பி வந்தபோது தலைவனை வாழ்த்தவும் செய்கின்றனர். இல்லறம் நல்லறமாக நடக்கும் போது வாழ்த்தவும், குடும்பத்தில் தலைவனின் தவறான உறவால் ஊடல் கொள்ளும்போது தலைவனை இடித்துரைத்து சேர்ந்து வாழ வைக்கும் மரபினையும் இவ்வாயில்கள் பெற்றிருந்தனர்.

**தோழி வாழ்த்துதல்**

வினை மேற்கொண்ட தலைவன் குறித்த நேரத்தில் வந்தபோது, தோழி தலைவனை நோக்கி,

> **“சீறூர்பல பிறக்கு ஒழிய, மாலை**
> **இனிது செய்தனையால் - எந்தை! வாழிய!**
> **பனி வார் கண்ணள் பல புலந்து உறையும்**
> **ஆய் தொடி அரிவை கூந்தற்**
> **போது குரல் அணிய வேய் தந்தோயே!**
> **(அகம்:104: 13-17)**

எனும் மதுரை மருதன் இளநாகனார் பாடலில் போர் வினையை முடித்து வாகை சூடி, குதிரைகள் பூட்டப்பட்ட விரைந்தோடும் தேரில் அமர்ந்து தாவரங்கள், விலங்கினங்கள் செயல்பாட்டின் தன்மையைப் பார்த்துக் கொண்டே தலைவன் மீண்டு வந்து மாலைப்பொழுதில் இல்லம் புகுகின்றான். நீர் வழியும் கண்ணையுடைவளாய்ப் பலவற்றையும் எண்ணி வருந்தி வெறுப்புற்று வாழ்ந்து கொண்டிருக்கும் தலைவி அணிந்து கொள்ளுமாறு, அவளுடைய கூந்தலில் மலரும் பூக்களை மாலை பொழுதில் சூட்டி அலங்கரித்த தலைவனை நல்லது செய்தாய் நீ வாழ்வாயாக! என்று தோழி வாழ்த்துகின்றாள். பிரிந்து சென்ற தலைவன் மீண்டு வந்தவுடன் தலைவியின் கூந்தலை அலங்கரித்து தம் ஆசை பெருகுகின்ற அன்பினைப் புலப்படுத்தும் மரபினை அறிய முடிகின்றது.

மற்றொர் பாடலில் வினைவயின் பிரிந்து சென்ற தலைவன் தான் குறித்துச் சொல்லி சென்ற பருவத்தில் தவறாது மீண்டு வருகின்றான். அதனால் மகிழ்ச்சியுற்ற தோழி தலைவனுடைய பண்புகளைப் பாராட்டி வாழ்த்துகின்றாள். வெயில் தணிந்து சிவந்த வானத்தில் பொழுது மறையும் மாலைப்பொழுதில் கையில் கோலும், மண்வெட்டியும் கொண்டு உழைத்த வினைஞர் வீட்டில் காய்ச்சிய கஞ்சிக்கள்ளைப் பருகிக்

கொண்டு மகிழ்ந்திருக்கின்றனர். இப்படிப்பட்ட மாலைப்பொழுதில் கல்லில் பாயும் அருவி ஒலிப்பது போல், தேரில் தொங்கும் மாலை மணி ஒலிக்க தலைவன் தேரில் வந்து இறங்கினான். இதனை தெய்வத்தன்மை பொருந்திய கற்புடன் குடிக்குச் சிறப்பினைத் தரும் மகனைப் பெற்ற தலைவிக்கு மட்டும் இனிமையல்ல, எனக்கும் இனிமை தருவதாக அமைந்துள்ளது என்று மகிழ்ந்து தலைவனை வாழ்த்துகின்றாள். தோழி என்பவள் தலைவனையும், தலைவியையும் இணைக்கும் இணைப்புப் பாலமாக விளங்குகின்றாள். இதனை,

**“கோடுடைக் கையர் துளர் எறி வினைஞர்,**
**அரியல் ஆர்கையர், விளை மகிழ் தூங்க,**
**செல்கதிர் மழுகிய உருவ ஞாயிற்றுச்**
**செக்கர் வானம் சென்ற பொழுதில்,”**

**(அகம்:184: 13-16)**

எனும் மதுரை மருதன் இளநாகனார் பாடல் வழி அறிய முடிகின்றது. மாலைப் பொழுதில் வானம் சிவந்து காணப்படுகின்றது. காடுபின் செல்ல தான் செய்த வினை முடிந்த மகிழ்வோடு இல்லம் நோக்கி தலைவன் வந்துவிட்டான் என்ற செய்தி தோழிக்கே மட்டும் மகிழ்வைத் தருகிறது என்றால் அவனுடைய தலைவியைப் பற்றிச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. முல்லை நிலத்து பூக்கள் மணம் வீசியது போல அவன் வருகையினால் தலைவி இல்லறத்தில் மகிழ்வோடு இருக்கின்றாள் என்பதனைக் குறிப்பால் உணர்த்துகின்ற தோழியைக் காணமுடிகின்றது.

## முடிவுரை

தலைவன் பிரிகின்ற காலத்தும், பிரிந்து மீண்டு வரும் காலத்தும், அவன் வாராதிருக்கும் காலத்தும் மாலைப்பொழுது தலைவிக்கு மிக்க துன்பத்தைத் தருகின்றது. பிரிவுத் துன்பத்தைத் தாங்கிக் கொள்ள முடியாமல் அவள் பலவாறு புலம்புகின்றாள். அப்புலம்பலின் மூலம் தலைவி தலைவன் மீது கொண்டுள்ள காதலியல்பு வெளிப்படுகின்றது. தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு எல்லாப் பொழுதுமே மாலைப்பொழுதாகத் தோன்றித் துன்புறுத்துகின்றன.

மாலைப்பொழுதில் தலைவன் பிரிவால் தலைவிக்குத் துயரம் மீக்கூர்ந்து நிற்கிறது. விலங்குகளுக்கு மகிழ்ச்சி, தலைவிக்குத் துன்பம். மாலைப்பொழுதில் ஆண்மான்களை நோக்கி பெண்மான்கள் செல்கின்றன. என் காதலர் என்னை நினைத்து இன்னும் வரவில்லை. தலைவியின் உள்ளத்துயிர் முழுவதும் ஏக்க பெருமூச்சாக மாலைப்பொழுது வந்ததை மறைமுகமாகச் சுட்டப்படுகின்றன.

மாலைப்பொழுது மனித உணர்வுகளுக்கு மட்டுமின்றி பிற உயிரினங்களும் தன் செயலைச் செய்து முடித்து ஓய்வு எடுக்கப் போகும் ஆரம்பப் பொழுதாகும். காலைப்பொழுது கடமையின் ஆரம்பம். மாலைப்பொழுது கடமை முடிந்து இல்லறத்தில் தான் இனிதாக இருக்கும் பொழுதாக உள்ளதை உணர்த்தப்படுகின்றன.

தலைவன் பொருளுக்காகவோ, வேந்தனின் வினையின் பொருட்டோ சென்றவன், கார்காலம் தொடங்குவதற்குள் வந்துவிடுவேன் என்று கூறிச் செல்கின்றான். வருவதில் காலதாமதம் ஏற்படும் போது அப்பருவத்தில் வரும் மாலைப்பொழுது, தலைவிக்கு வருத்தத்தைத் தருவதாக பாடப்பட்டுள்ளது.

வினைமேற்கொண்ட தலைவன் கார்கால மாலைப்பொழுதில் காலதாமதம் ஏற்படும் போது தேர்ப்பாகனிடம் விரைவாக தேரைச் செலுத்தச் சொல்லுவதாகவும், முல்லை நிலத் தாவரங்களின் காட்சிகளையும், பறவைகள், விலங்குகளின் இணையும் கண்டு தலைவியின் வாட்டத்தை உணர்ந்து கொள்வதை அறியமுடிகின்றது.

எல்லாக் காலத்து மாலைப்பொழுதும் பிரிந்திருப்போருக்கு மிகுந்த துன்பம் தருவதாகவே உள்ளது. முல்லை மலர்கள் பூத்து, தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்குச் சொல்லமுடியாத துயரம் தரும் மாலைப் பொழுதாகும். இம்மாலைப்பொழுதே தலைவிக்கு மிக்கத் துன்பம் தருகின்றது. அன்புடையார் அனைவரும் இல்லறத்தில் இணையும் பொழுதாகும்.

களவு, கற்பு எனும் இருபாற்பட்ட காதல் வாழ்க்கை நிகழ்வுகளில் தலைவன் தலைவியர்க்கு இடையிலான பிரிவுக் காலத்து மாலைப்பொழுதில் அவர் தம் துன்பநிலையும் எடுத்துக்காட்டப்படுகின்றன.

மாலைப்பொழுது பெண்மை நலத்தை அழிப்பதற்காக வருகின்றது. கார் காலத்து மாலைப்பொழுது தலைவிக்கு மிகுந்த துன்பம் தருவதாக உள்ளது. மாலைப்பொழுதில் தலைவன், தலைவியின் துன்பப் புலம்பல் மிகுதியாகவே அமைகின்றது.

சங்க இலக்கிய அகப்பாடல்களில் தலைவன் தலைவியரின் துன்பத்தை மிகுவிக்கும் மாலைப்பொழுது புன்கண் மாலை, நனை நகுமாலை, புலம்பு கொள் மாலை, புல்லென் மாலை, பழங்கண் மாலை எனக் குறிக்கப் பெற்றுள்ளமை சுட்டத்தக்கதாகும்.

## அடிக்குறிப்புகள்

1. ஜமாலன், மொழியும் நிலமும், ப.166
2. தொல். பொருள்.56; தொல். பொருள்.ப.10
3. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.554
4. வி.ஆனிலெட்பாமி, சங்க அகப் பாடல்களில் அடிக்கருத்துக்கள், ப.203.
5. மு.மணிவேல், தமிழ் இலக்கிய அகப்பொருள் மரபுகள், ப.48
6. தி.முத்துக் கண்ணப்பர், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.278
7. கெ. செல்லத்தாய், கால நிகழ்வும் காதல் வாழ்க்கையும், ப.27
8. தமிழண்ணல். சங்க மரபு, ப.243
9. இரா.தண்டாயுதம், சங்க இலக்கியம் எட்டுத்தொகை, ப.269
10. வ.சு.ப மாணிக்கனார், தமிழ்க் காதல், ப.95

# இயல் - 6

## இரவுப்பொழுதும் மாந்தர்கள் நிலையும்

### முன்னுரை

சங்க இலக்கியத்தில் இரவுக்காலம் என்னும் சிறுபொழுது குறிஞ்சிக்குரிய சிறு பொழுதாகக் கூறப்படுகின்றது. "குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர்" என்பது தொல்காப்பிய நூற்பா.[1]

யாமம் என்னும் சிறுபொழுது சாமம், நடுநிசி, நடுச்சாமம், இரவு, இராத்திரி என்று அழைக்கப்படும். ஒவ்வொரு பொழுதும் "நிலவியலின் ஆற்றல் மனித வாழ்வினையும், வளர்ச்சியையும் தன்னகப்படுத்த வல்லது என்ற உண்மை இக்காலத்துப் புதிதாய் உருவாகி எழுந்துள்ள அறிவியல் துறை. அதனை ஆந்த்ரோபாஜ்யாக்ரபி (Anthropogeography) என வழங்குகின்றனர். ஆனால் இயற்கையின் சூழ்நிலை மனித வாழ்வினை மாற்றுகிறது என்ற இவ்வுண்மையைப் பண்டைத் தமிழ்ப் புலவர்கள் எவ்வாறோ உணர்ந்துள்ளனர். இதனை உணர்ந்து, தங்களுடைய பாடல்களில் அவற்றுள்ளும் குறிப்பாக அகத்துறைப் பாடல்களில் இவ்வுண்மைக்குப் பொருத்தமான வகையில் சில மரபுகளை ஏற்படுத்தியுள்ளனர்."[2] என்பர்.

யாமம் எனும் சிறுபொழுது குறிஞ்சிக்குரிய பொழுதாயினும், எல்லாத் திணைகளுக்கு இ∴து அமையும். யாமம் என்பது இராப்பொழுதின் நடுக்கூறு. ஒவ்வொரு சிறுபொழுதினும் பத்து நாழிகை கொண்டமைவது. இச்சிறுபொழுதுகள் அவ்வவ் நிலத்திற்கேற்ப தலைவன் தலைவியர் மாட்டுத் தோன்றும் காமம் குறிப்பைச் சிறப்பித்தல் பற்றி அமையும் என்பது உணர்த்தற்குரியது. "குறிஞ்சித் திணைக்குரிய உரிப்பொருள் களவிற் புணர்ச்சிப் பொருளாதலின், அப்புணர்ச்சிக்குத்

தனியிடம் வேண்டுமென்றே, அது கூதிர்காலத்துப் பகலும், இரவும் நுண்துளி சிதறி இயங்குவார் சிலராம் ஆதலின் ஆண்டுத் தனிப் பாடல் எளிதாகலின், அதற்கு அது சிறந்தது. நடுநாள் யாமமும் அவ்வாறாகலின் அதுவும் சிறந்தது" என்பர்.[3]

காதல் நிலைக்குரிய தலைவன் தலைவியர் களவுக் காலத்தில் இரவுப்பொழுதில் சந்திக்க எண்ணுகின்றனர். அவர்களுக்குப் பல இடையூறுகள் உண்டாகின்றன. இவ்விருவருக்கும் உற்ற துணையாகத் தோழி அமைகின்றாள். இரவுப்பொழுதில் தம்முள் வேறுபடும் தலைவன், தலைவியர் நிலைபாடு குறித்து அகநானூறு பாடல்கள் காட்டும் செய்திகள் இங்கு எடுத்துக்காட்டப்பட்டு விளக்கப்படுகின்றன. சங்க அக இலக்கியங்கள் இயற்கைக் காட்சிகளின் வாயிலாக வாழ்வியல் நுட்பங்களைப் புலப்படுத்துகின்றன. அங்ஙனம் புலப்படுத்துவதற்கு "மரம்செடி கொடிகள், பொழுது, பறவை, விலங்கு முதலியன சிறந்த கருவிகளாய் அமைகின்றன. ஆதலால் மக்கள் வாழ்வும், இயற்கையும் ஒன்றையொன்று தழுவிப் பின்னிப் பிணைந்துள்ளன" என்பது தெளிவாகும் என்பர்.[4]

"மனித உணர்வின் பின்னணியாகவே இயற்கை அமைந்தாலும், அதன் உணர்வைக் கூர்மையாக்கி முழுமையாகக் காட்ட சங்கப் புலவர்கள் இயற்கையின் துணையையே நாடி நின்றுள்ளனர். அடியளவில் நீண்ட பாடலாயினும் அல்லது குறைந்த பாடலாயினும் பெரும்பாலான சங்கப் பாடல்களில் இயற்கையைப் பற்றிய ஒரு சிறிய தொடரையாவது காணலாம். இது சங்க இலக்கிய அகப்பாடல்களைப் பொறுத்த வரையில் முற்றிலும் பொருந்தும். சில நேரங்களில் பாடல் முழுவதும் இயற்கை வருணனையாக அமைய ஒன்றிரண்டு தொடர்களால் மட்டும் உள்ளத்துணர்வை வெளிப்படுத்தி நிற்றலும் உண்டு. எவ்வாறாயினும் மனித உணர்வுகளைப் பிணைத்துச்

செய்யப்பட்ட பல்வண்ண ஓவியங்களாகவே சங்கப் பாடல்கள் காணப்படுகின்றன” என்பர்[5]

சங்க அகப்பாடல்களை நுட்பமாக ஆராய்ந்தால் பாடல் ஒவ்வொன்றும் வாழ்வின் ஓர் உயிரோட்டமுள்ள நிகழ்வைக் கூறுவதாக அமைத்துள்ளமையைத் தெளியலாம். ‘சுற்றுச்சூழல் மாந்தமர் தம் ஒழுக்கத்தை மாற்றவல்லது. மலைச் சாரலும், தட்பக் காற்றும், குளிரும் இளைய பருவத்து இருபாலரைக் கூட்டுவிக்கின்றன. குறிஞ்சி ஒழுக்கத்திற்குக் கூறப்படும் பொழுது நள்ளிரவு; நள்ளிரவு மலைச்சாரல், குளிர்க்காற்று, தனிமை, ஆண், பெண் புணர்ச்சி எனக் குறிஞ்சி நிலச் சூழல் கொஞ்ச வைக்கிறது’ என்பர்.[6]

பொழுதுகளில் யாமம் என்பது மிகுந்த பயத்தையும், பிரிவினால் பெரும் துன்பத்தையும் தரக்கூடியது. இருள் செறிந்த வழியில் வரும் தலைவனின் நிலை கருதி தலைவி அச்சம் கொள்ளுவதும், களவின்பத்தில் தலைவியைக் காணவரும் தலைவன் தன்னை யாரேனும் பார்த்துவிடுவரோ என்று அச்சம் கொள்வதும் சங்க அகப்பாடல்களில் காட்டப்படுகின்றன.

**பாம்பு மதன் அழியும் பானாட் கங்குல்**

களவொழுக்கத்தில் ஈடுபட்ட தலைவன், தலைவியைத் திருமணம் செய்யும் கருத்து இல்லாதவனாக இருக்கின்றான். ஆனாலும் அவன் இரவு நேரத்தில் தம்மைச் சந்திக்க வருகின்றபோது அவன் வருகின்ற வழி சரியாக இல்லை: வழியில் ஊர்களும் இல்லாததை நினைந்து வருந்துகின்றாள் தலைவி, ஒருநாள் இரவு சிறைப்புறத்தானாக வந்து நிற்பதை அறிந்த தலைவி, தன் வருத்தம் தோன்ற அவன் கேட்குமாறு அவன் வந்து நிற்பதை அறியாதவள் போல தோழியிடம் கூறுகின்றாள். இரவுப் பொழுது பல்வேறு விலங்குகள் உலவுகின்ற மலைப்பகுதி. இரவு

நேரத்தில் நம்மைச் சந்திக்க வரும் தலைவனுக்கு ஏதாவது தீங்கு நேர்ந்துவிடுமோ என்ற அச்சம் நமக்கு இருக்கின்றது. மேலும்

**ஈயற் புற்றத்து ஈர்ம் புறத்து இறுத்த**
**குரும்பி வல்சிப் பெருங் கை ஏற்றை**
**தூங்கு தோல் துதிய வள் உகிர் கதுவலின்,**
**பாம்பு மதன் அழியும் பானாட் கங்குலும்,**
**அரிய அல்ல — மன் - இருளை !**

**(அகம்: 8, 1 - 5)**

புலியானது ஆண் பன்றியினைக் கொன்று வீழ்த்தியது. பழ நாற்றத்தை உடைய பலாமரங்கள் நிறைந்த பக்க மலையில் புலால் நாறும் படி இழுத்துச் சென்றதைப் போலத் தலைவனும் இன்பம் துய்த்தற் பொருட்டு நம்மைக் கூடி விட்டு, புகழ்ச்சியை உடைய நம் குடியை இகழ்ச்சியடையும் படிச் செய்து விட்டார் எனத் தலைவி கூறுகின்றாள்.

வாழையை உண்ண வந்த ஆண்யானை அருகிலே நீரில்லாது இருக்கும் குழியில் விழுந்துவிட்டது. அது குழியிலிருந்து ஏறமுடியாமலும், வாழை இலையை உண்ணமுடியாமலும் தவித்துக்கொண்டிருப்பதைப் பார்த்த பெண்யானையானது வானளாவி உயர்ந்த பெரிய மரத்தை முறித்துக் குழிக்குள் போட்டது. அப்போது மரத்தை முறிக்கும் பேரொலியானது விண்ணைத் தழுவி மலைகளிலே எதிரொலித்தது. அதுபோல தலைவனும் நம் நலமுறுக வந்து களவொழுக்கமாகிய குழியிலே விழுந்துவிட, இக்களவொழுக்கத்தைக் கைவிடாது நம்மை மணம் செய்யவும் மாட்டாது இருக்கின்றான். நம் இல்லத்தின் அரிய காவலால் நாம் துன்பப்படுவதும், அறத்தொடு நிற்றல் எனும் காரணத்தால் மகளிராகிய நாமே மணந்து கொள்ள முயற்சித்தாலும் அம்முயற்சி ஊரெல்லாம் அறியும் படிச் செய்துவிட்டார் எனத் தலைவி புலம்புகின்றாள். ஈசல் புற்றுக்குள் இருக்கும் ஈசலைத் திண்பதற்காக

ஆண்கரடி புற்றுக்குள் கூரிய நகம் உடைய கையினை உள்ளே விடும்போது, அங்கே இருக்கும் பாம்பு தனது வலிமை அழிந்து விடும் படியாகத் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளத் துடிக்கும் பாதிநாள் இரவில் காடுகளைக்கடந்து வருவதும் மிகவும் துன்பம் தருவதாகும். பாம்பு துன்பப்பட்டது போலத் தலைவனும் நம்மை வருத்த வேண்டும் என்னும் மனநிலையில் இல்லை என்றாலும், களவின்பத்திலே நம்மைத் தேடி வருவது மிகவும் வருந்தும் படியாக உள்ளது. இரவுப்பொழுதில் வருவதனால் தலைவனுக்கு ஏதம் நிகழ்ந்துவிடுமோ? என்ற அச்சம் ஒரு பக்கம், தன்னை தலைவன் இன்னும் மணம் முடிக்கவில்லையே என்ற மனவருத்தம் ஒரு பக்கம் தலைவிக்கு இரவுப்பொழுது தரும் அச்சம் என்பது தலைவனுக்கான வருத்தமாக உள்ளது. பாம்பு, கரடி, யானை போன்ற கொடிய விலங்குகள் உலவும் இடம் மலைப்பகுதி. சரியான பாதையில்லாத இடம். தலைவன் வரும் வழியில் எங்கும் ஊர் இல்லாத மலைப்பகுதி. அதிலும் இரவு நேரம். இவை அனைத்தையும் நினைத்து பார்க்கும் தலைவி, தன் மீது உள்ள காதலால் மலைபோல் இருக்கும் துன்பம் கூட மடுப்போல் தெரிகிறது தலைவனுக்கு. ஆனால் தலைவனுக்கு ஏதாவது துன்பம் நேர்ந்துவிடுமே என்ற அச்சம் தலைவிக்கு அவன் மீது கொண்ட அன்பைப் புலப்படுத்துகின்றது. இவ்வாறு துன்பப்படுவதை விடுத்து விரைவில் மணமுடித்தால், எத்தகு இடையூறு இல்லாமல் வாழலாமே என்பது தலைவியின் நினைப்பு. அதே சிந்தனை தலைவனுக்கு இல்லையே என்பது தான் தலைவிக்கு வருத்தத்தைத் தருகின்றது.

**மன் உயிர் மடிந்த பானாட் கங்குல்**

அதுபோலவே மற்றொரு தலைவனும் களவொழுக்கத்திலேயே தலைவியைச் சந்தித்து வருகின்றான். இரவுக்குறிக்கண் வந்து செல்லும் தலைவனுக்கு, களவொழுக்க புணர்ச்சிக்காலத்தைவிட நீண்டதான பிரிவுக்

காலத்தில், தான் அடையும் துன்பத்தைத் தலைவன் குறிப்பால் உணருமாறு கூறுகின்றாள்.

**“இன்இசை உருமொடு கனை துளி தலைஇ,**
**மன் உயிர் மடிந்த பானாட் கங்குல்,**
**காடு தேர் வேட்டத்து விளிவு இடம் பெறாஅது,**
**வரி அதள் படுத்த சேக்கை, தெரி இழைத்**
**தேன் நாறு கதுப்பின் கொடிச்சியர் தந்தை,**
**(அகம்:58, 1-5)**

எனக் கூறுகின்றாள். தலைவனின் பிரிவால் இரங்கும் தலைவியைக் காணமுடிகின்றது. இனிமையான இடி முழக்கத்துடன் பெருமழை பொழிந்திருக்கிறது. ஊரிலுள்ள அனைவரும் உறங்கும் நள்ளிரவு வேளை, இவ்விரவு வேளையில் என் தந்தை காட்டுக்கு வேட்டையாடச் செல்வது வழக்கம். இன்றோ விலங்கு ஒன்றும் அவர் வேட்டையில் விழவில்லை. வீடுத் திரும்பி வரிப்புலித்தோலில் படுத்து உறங்கிக் கொண்டிருக்கிறார். நீ உன் வீட்டில் இருக்கும் போது நான் தனிமையில் இருக்கின்றேன். உன்னை நினைக்கும்போதெல்லாம் பண்பு இல்லாத வாடைக்காற்று என்னை துன்புறுத்துகின்றது. அப்போதெல்லாம் வராமல் இப்போது வந்திருக்கின்றாய். என்னை அடையும் பதமான காலம் கிடைக்காமல், இருவரும் சேரக்கூடிய இடம் பார்த்துக்கொண்டு பலரும் உறங்கும் இரவில் வந்து நீண்ட தொலைவில் நின்றுகொண்டிருக்கின்றாய். நான் என்ன செய்வேன்? அன்பின் மிகுதியால் தலைவன் வருகையை உணர்ந்தாலும் சந்திக்க முடியாத சூழலில் தலைவன் வந்து என்ன பயன்? காவல் மிகுதியால் இல்லத்தை விட்டுச் செல்ல முடியவில்லை. ஆதலால் விரைவில் வரைந்து செல்வதே சிறந்தது எனக் குறிப்பால் தலைவி தலைவனுக்கு உணர்த்துகின்றாள்.

**துளி தலைக்கொண்ட நளிபெயல் நடுநாள்**

இரவில் மழை பெய்கின்றது. இரும்பினைக் காய்ச்சி அடித்தால் சிதறும் தீப்பொறி போல் மின்மினிப் பூச்சிகள் ஒளிவிட்டுப் பறக்கும். இரும்பு வேலை செய்யும் கொல்லன் போல் ஆண்கரடி புற்றிற்குள் இருக்கும் புற்றாஞ் சோற்றினைத் தோண்டி எடுக்கும். இத்தகு கொடுமையான வழி காட்டாற்று வெள்ளம், பார்ப்போரை நடுங்கச் செய்யும் அளவிற்குப் பெருக்கெடுத்து ஓடும் வெள்ளம், அச்சம் தரும் முதலைகள் உடையது. நாமும் தனிமையில் உள்ளோம் என்பதை நினைத்துப் பார்க்கவில்லை தலைவன் வரும் வழியோ குறுகலானது. வாள் முனையில் நடப்பதைப் போன்று துன்பம் தரும் கூர்மையானக் கற்கள் உடைய வழி. கருவுற்றிருக்கும் பெண்புலிக்காக, சினம் மிகுந்த ஆண்புலி பன்றியினைக் கொன்று உணவு கொடுத்துக்கொண்டிருக்கும் வழி. அச்சம் தரும் நல்ல பாம்புகள் இரவில் ஒளி வேண்டி மணிகளை உமிழ்ந்து அந்த வெளிச்சத்தில் இரை தேடிக்கொண்டிருக்கும், அத்தகு வெளிச்சத்தில் ஆண்கரடி தான் வேட்டையாடிய பன்றியை இழுத்துச் செல்லும், இத்தகு கொடுமையான வழியில் நம்மீது அன்புகொண்ட நெஞ்சமோடு வேலே வழித்துணையாக வரும் நம் தலைவன் கொடியவனும் அல்ல. உன் மீதும் தவறு கிடையாது. உனக்கு நீங்காத பெருந்துன்பத்தினைச் செய்த நானே தவறுடையவள் எனத் தோழி கூறுகின்றாள். களவுக்காலத்தில் இரவு நேரத்தில் தலைவியைக் காண வரும் தலைவனுக்குக் கூறுகின்றாள். இரவுநேரத்தில் கொடுமையான பல வழிகளைக் கடந்து வருவதை விட்டுவிட்டு விரைவில் மணமுடித்துச் செல்லுமாறு தோழி குறிப்பால் உணர்த்துகிறாள். இருவருமே துன்பப்பட வேண்டிய நிலையில் இருக்கின்றோம். இத்தகைய உணர்வுப் போராட்ட நிகழ்வை தலைவி தோழிக்குக் கூறுவதுபோல் தலைவனுக்குக் கூறுகின்றாள்.

**“இருள் கிழிப்பது போல் மின்னி, வானம்**
**துளி தலைக்கொண்ட நளிபெயல் நடுநாள்,**
**……………………………... மஞ்சு சுமந்து**
**ஆடுகழை நரலும் அணங்குடைக் கவாஅன்,**
**ஈர் உயிர்ப் பிணவின் வயவுப் பசி களைஇய,**
**இருங் களிறு அட்ட பெருஞ்சின உழுவை**
**நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த**
**மேய் மணி விளக்கின் புலர ஈர்க்கும்**
**(அகம்:72, 1-2, 10-15)**

பெண்புலிக்காக ஆண்புலி வேட்டையாடச் சென்று பன்றியைக் கொன்று உணவாகத் தருகின்றது. ஆண்புலி போன்ற தலைவன் தலைவிக்கு வரும் துன்பங்களை அறியாது இருக்கின்றானே எனப் புலம்புகின்ற தலைவியைக் காணமுடிகின்றது.

**தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி கூறியது**

“தலைவன் புணர்வே நாடிச் சிறைப்புறமாக இருக்க, தலைவி கூறும் கூற்றுக்கள் அவனது மனதில் ஒலிக்கின்றது. தலைவன் வரவை எதிர்நோக்கிய மனநிலையால் தலைவி அவனது வரவிற்காகவும், புணர்விற்காகவும் ஏங்கி நிற்பதாகக் குறிப்பிடுகின்றாள். ஊர் துஞ்சாமை, அன்னை துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல் போன்ற புறத்தடைகளை மீறித் தலைவன் செய்த குறியில் தலைவி அவனது வரவை எதிர்நோக்கி நிற்கின்றாள் தலைவி.”[7]

தலைவி காதலுடன் அகக்கடமை கொண்டவள். கால மாற்றத்திற்கேற்ப உணர்வு மாறுபாடுகள் உண்டாகின்றன. காதல் வேட்கையைக் கட்டுப்படுத்தி வைக்கும் மனவலிமை குன்றிய நிலையில் புறத்தொழுக்கத்தை இருவரும் மேற்கொள்கின்றனர். அதனால் தான்

தலைவி சிறைப்புறத்து நின்றிருக்கும் தலைவனிடம் தலைவி தோழியிடம் கூறுவது போல் அமைந்த பாடலாகும். மக்கள் அனைவரும் உறங்கிவிட்டனர். கொல்வது போலும் கொடுமையானத் துன்பம் தரும் நடு யாமமும் வந்தது. என் நெஞ்சமோ மயங்கி என்னையும் கேட்டறியாது கைகடந்து சென்றுவிட்டது. பக்க மலைகள், காடுகள் இருண்டு கிடக்கின்றன. அங்குள்ள குறுஞ்சுனையில் பூத்துக் கிடக்கும் குவளை மலரினை சூடிக்கொண்டு தம் தலைவன், யானையின் முதுகின் மீதுள்ள கயிற்றுத் தழும்பு போன்ற மலையில் இருக்கும் சிறிய வழியைக் கடந்து வருவான். அவ்வழியில் படுகுழிகள் நிறைய இருக்கும். இரவுப் பொழுதில் இருள் செறிந்த நேரத்தில் அக்குழியில் மிதித்து அவர் நடை தளர்ந்து விடுவாரோ என நினைந்து என் நெஞ்சம் அவரது அடிகளைத் தாங்கும் பொருட்டுச் சென்றுவிட்டது. தலைவனுக்கு துன்பம் நேர்ந்துவிடுமோ என மனம் கலங்கும் தலைவி. எப்பொழுதும் நான் தலைவனையே நினைத்துக்கொண்டிருக்கின்றேன். அவன் படுகுழியில் வீழ்ந்துவிடுவானோ? என என் நெஞ்சம் பதறுகின்றது. என் வாழ்க்கை படுகுழியில் விழுந்துவிடாமல் பாதுகாப்பாது தலைவன் கையில்தான் இருக்கின்றது என்பது போல் கூறுகின்றாள். இதனை,

**“மன்றுபாடு அவிந்து மனைமடிந் தன்றே;**
**கொன்றோ ரன்ன கொடுமையோடு இன்றே**
**யாமம் கொளவரின் கனைஇ, காமம்**
**கடலினும் உரைஇ, கரைபொழி யும்மே”**

**(அகம் 128, 1-4)**

எனும் கபிலர் பாடிய இப்பாடலில் இரவுப்பொழுது தலைவிக்கு இன்பம் தருவதாக இல்லை. இவ்வாறு இருள்மிக்க நடு யாமத்தில் தலைவன் வருவதால் தலைவிக்கு உண்டாகும் துன்பம் தலைவனுக்கு உணர்த்தப்படுகின்றது.

**துன்பம் தரும் யாமம்:**

மற்றுமோர் தலைவியோ களவொழுக்கத்தால் மன வேதனை அடைகின்றாள். அதனை அறிந்த அன்னை தன் மகளுக்கு ஏதோ நேர்ந்து விட்டது என நினைத்து வேலை அழைத்து வெறியாட்டு எடுக்க நினைக்கின்றாள். அதனை தலைவி இரவுக்குறி வரும் தலைவனுக்கு கூறுகின்றாள்.

**இகுளை! கேட்டிசின், காதல்அம் தோழி!**
**குவளை உண்கண் தெண்பனி மல்க,**
**வறிதுயான் வருந்திய செல்லற்கு அன்னை**
**பிறிதுஒன்று கடுத்தனள் ஆகி - வேம்பின்**
**வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி,**
**உடலுநர்க் கடந்த கடல்அம் தானை,**
**திருந்துஇலை நெடுவேற் தென்னவன் - பொதியில்,**
**அருஞ்சிமை இழிதரும் ஆர்த்துவரல் அருவியின்**
**ததும்புசீர் இன்இயம் கறங்க, கைதொழுது,**
**உருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇ,**
**கடம்பும் களிறும் பாடி, நுடங்குபு**
**தோடும் தொடலையும் கைக்கொண்டு அல்கலும்**
**ஆடினர் ஆதல் நன்றோ? –நீடு,**
**நின்னொடு தெளித்த நல்மலை நாடன்**
**குறிவரல் அரைநாட் குன்றத்து உச்சி,**
**நெறிகெட வீழ்ந்ததுன் அருங் கூர்இருள்,**
**திருமணி உமிழ்ந்த நாகம் காந்தட்**
**கொழுமடற் புதுப்பூ ஊதும் தும்பி**
**நல்நிறம் மருளும் அருவிடர்**
**இன்னா நீள்இடை நினையும், என் நெஞ்சே,**

**(அகம்:138)**

இரவு முழுவதும் வெறியாட்டு நிகழ்த்துகின்றாள். அறியாமையில் இருக்கும் அன்னை. விரைவில் மணம் முடித்துச் செல்வேன் என்று நெடுநாட்களாகத் தெளிவாகக் கூறிய தலைவன் **“குறிவரல் அரைநாட் குன்றத்து உச்சி”** நள்ளிரவு, குன்றத்தின் உச்சி, வழி தெரியாதவாறு இருள் செறிந்திருக்கும் கொடுமையான வழி, மணியை உமிழ்ந்த நாகமானது, காந்தள் மலர்மீது இருக்கும் வண்டினை மணியென மயங்கும் கடத்தற்கரிய துன்பம் தரும் நீண்ட வழிகளைக் கடந்து நம் தலைவன் வருகின்றானே என நெஞ்சமானது அவனை நினைந்து வருந்துகின்றது. இதனை உணராத தாய் வெறியாட்டு நிகழ்த்த இருக்கின்றாள். இது மிகுந்த வேதனையைத் தருகின்றதுதான் உமிழ்ந்த மணி எது என்று தெரியாமலே நாகமானது மயங்கி இருக்கும் இருட்டுப்பொழுது எத்தகு இடையூறுகள் நிறைந்தது. நாகப்பாம்பு போன்று நானும் ஒன்றும் புரியாது இல்லறத்தில் கட்டுவிச்சியை வரவழைத்து வெறியாட்டு நிகழ்வதை கண்டு அச்சத்தில் இருக்கின்றேன் என தனது வேதனையைக் கூறுகின்றாள். இங்கு தலைவியே தான் படும் வேதனையை புலம்புவதாக உள்ளது.

### தொழில் மழை பொழிந்த பானாட் கங்குல்

காவல் நீட்டிப்பில் இருக்கின்ற தலைவியைக் காண தலைவன் சிறை புறமாக நிற்கின்றான். அதனை அறிந்த தலைவி தோழியை நோக்கி, ‘சிறு கோட்டுப் பெருங்குளங் காவலன் போல அன்னையும் இரவில் கண் துயிலாது என்னைக் காத்து நின்றாள் எனக் கூறுகின்றாள். இதனை,

**“................................ஈங்கைத்**

**துய் அவிழ் பனிமலர் உதிர வீசித்**

**தொழில் மழை பொழிந்த பானாட் கங்குல்**

**எறிதிரைத் திவலை தூஉம் சிறுகோட்டுப்**

**பெருங்குளம் காவலன் போல,**

**அருங்குடி அன்னையும் துயில் மறந்தனளே”?**

**(அகம்: 252, 9-14)**

எனும் நக்கண்ணையார் பாடலில் வெள்ளை நிற ஈங்கைப் பூக்கள் உதிரும்படி நள்ளிரவில் பொழியும் பருவ மழைத்துளிகள் தாக்குகையில் சிறிய கரையை உடைய பெரிய குளத்தைக் காப்பவன் உறங்காமல் இருப்பது போல என் தாய் உறங்காமல் என்னை காவல் காத்துக்கொண்டிருக்கின்றாள். இருள் மிகுந்த இரவு நேரத்தில் வருவது மிகுந்த துன்பம் தருவதாகும். ஆதலால் களவில் வந்து பல இடையூறுகளுக்கிடையே காண்பதைவிட விரைவில் மணந்துகொள்வதே சிறந்தது எனத் தலைவி தலைவனுக்கு உணர்த்துகின்றாள்.

சிறைப்புறத்தே இருக்கும் தலைவனைக் காணாதவள் போல் தலைவி, ‘இரவுக்குறிக்கண் தலைவண் வருவதால் பல இடையூறுகளைச் சந்திக்க நேரும், ஆதலால் அதனை நினைத்து நான் அஞ்சுகின்றேன்’ எனக்கூறித் தலைவன் வரைவு செய்தலே மிகச் சிறந்தது என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றாள்.

**------------------------------------------------எல் உற,**

**யாங்கு ஆ குவல்கொல் யானே? நீங்காது**

**முது மரத்து உறையும் முரவுவாய் முதுபுள்**

**கதுமெனக் குழறும்,கழுது வழங்கு,அரைநாள்,**

**நெஞ்சு நெகிழ் பருவரல் செய்த**

**அன்பிலாளன் அறிவு நயந் தேனே.”**

**(அகம்:260,10-15)**

எனும் மோசிக்கரையனார் பாடலில் தோழியிடம் கூறுவது போல் தலைவனுக்குக் கூறுகின்றாள் தலைவி. காலை வானம் சிவந்து தோன்றுகின்றது. இரவில் மேயும் அன்றில் தன் துணையுடன் பனைமர மடலுக்குள் செல்கிறது. வீட்டில் இருக்கும் புன்னை மரம் பொன் நிறத்தில் பூக்கின்றது. இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டு பகலை போக்கினேன். இரவு வந்தது. இனி என் நிலைமை என்ன ஆகுமோ? பழைய மரத்தின் பொந்துகளில் வாழும் ஆந்தை திடீரெனக் குழறுகின்றது. பேய் நடமாட்டம் உள்ள நள்ளிரவானது என் நெஞ்சை பதறவைக்கின்றது. அன்பில்லாத காதலன் என்னை ஏமாற்றும் அறிவை நம்பினேனே! ‘இனி நான் என்ன செய்வது’ என நம்பிக்கை இழந்தவளாய் கூறுகின்றாள்.

**வான் எனப்பூத்த பானாட் கங்குல்**

வினை முடித்த தலைவன் தலைவியை விரைந்து காண வேண்டும் என்னும் வேட்கையில் தேரை விரைந்து செலுத்துமாறு தேர்ப்பாகனிடம் கூறுகின்றான். மலை உச்சியில் தேன் கூடு கட்டியிருக்கும் முசுண்டைப் பூக்கள் பூத்துக்கிடக்கின்றன. நரியிடமிருந்து செம்மறியாட்டுக் குட்டிகளை பாதுகாக்க இடையன் மூடி வைக்கின்றான். முல்லை பூக்களை கட்டி சூடிக்கொண்டிருக்கிறான். வயலில் இருக்கும் விளைச்சலை உண்ண வரும் காட்டுப் பன்றிகளை விரட்டுவதற்காக எழுப்பப்படும் கொம்பின் ஒலியும் நரி ஊளையிடும் ஒலியும், சேர்ந்து கேட்கும் வலிய நிலத்தில் தான் அவள் ஊர் இருக்கிறது. இதனை

**‘தேம் படு சிமயப் பாங்கர்ப் பம்பிய**
**குவை இலை முசுண்டை வெண்பூ குழைய,**
**வான் எனப் பூத்த பானாட் கங்குல்,**
**மறித் துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்**
**தண் கமழ் முல்லை தோன்றியொடு விரைஇ,**
**வண்டு படத் தொடுத்த நீர் வார் கண்ணியன்,**
**ஐது படு கொள்ளி அங்கை காய,**
**குறுநரி உளம்பும் கூர் இருள், நெடுவிளி**
**சிறுகட் பன்றிப் பெரு நிரை கூடிய,**
**முதைப் புனம் காவலர் நினைத்திருந்து ஊதும்’’**
**(அகம்:94 1-10)**

எனத் தன் தலைவியின் ஊரை **‘திருந்திழை ஊர்’** எனப் புகழ்ந்து கூறுகின்றான் தலைவன். இல்லத்தில் தலைவி நல்லறங்களையே செய்கின்றவள். அத்தகைய தலைவியைப் புகழ்கின்றவனாகத் தலைவனைக் காணமுடிகின்றது. இதில் நரி தன் செம்மறி ஆட்டுக்குட்டிகளைத் தின்று விடுமோ என்று இடையனின் பயம். வயலில் விளைச்சலை உண்ண வரும் காட்டுப் பன்றியை விரட்ட வேண்டும் என்பது விவசாயின் பயம். நரி இரவில் ஊளையிட்டுக் கொண்டிருக்கிறது. காட்டுப்பன்றியை விரட்டுவதற்காக காவலர்கள் கொம்பு கொண்டு ஊதி விரட்டுகின்றனர். உயிருக்கு ஆபத்தைத் தரும் காட்டு வழியைக் கடந்து தலைவன் இரவு பொழுதில் வரவேண்டிய சூழல் இருப்பதை இப்பாடல் வழி அறிய முடிகின்றது.

**வான் உமிழ் நடுநாள்**

களவொழுக்கத்தில் தலைவன் தலைவியை இரவில் கண்டு மகிழ்ந்து சென்று தெய்வமகள் போன்ற அன்புடைய தலைவி

கிடைத்ததை எண்ணி தலைவன் தன் நெஞ்சிற்கு எடுத்துக் கூறுகின்றான். கொள்ளக் குறையாத சங்குப் பூச்சிகள் வளர்கின்ற அளக்க முடியாத கடலினைக் கண்டாற் போன்று, விரிந்த நீல நிற வானத்தில் நெருப்புக் கொடி பறப்பது போல மின்னல் தோன்றுகின்றது. கடுமையான ஓசையுடன் இடியும் கூடி இடைவிடாமல் வானம் மழையைப் பொழிகின்றது. இப்படி மழைப்பொழியும் நள்ளிரவில் காவலர் சோர்ந்திருக்கும் நேரம் பார்த்து தலைவியைக் காண்பதற்காக தலைவன் அவளது இல்லத்தின் ஒரு பக்கம் வாடைக்காற்றால் வருந்தி நின்று கொண்டிருக்கிறான். அதைக் கண்ட தலைவி காற்றில் அசைந்தாடும் தளிர் போல் வந்து தலைவனை கட்டி தழுவுகின்றாள். தலைவியின் தழுவலால் தலைவனின் காம நோய் காணாமல் போயிற்று. இதை எண்ணிய தலைவன் மலையிலிருந்து விழுகின்ற அருவியில் நடமாடும் தெய்வமகள் போல எனக்கு என் தலைவி கிடைத்தது பெரிய பயனே. இதை விட எனக்கு வேறு என்ன வேண்டும்? என்று தன் நெஞ்சிற்கு கூறுகின்றான். இது தலைவன் தலைவி இருவரின் அன்பு நிலையைக் காட்டுகின்றது. பல இன்னல்கள் நேர்ந்தாலும் அதையும் கடந்து தலைவியை காண விரும்பும் தலைவனின் உள்ளத்து உணர்வை வெளிக்காட்டுகின்றது. இதனை

**“ கொளக் குறை பாட அக் கோடுவளர் குட்டத்து**
**அளப்பு அரிது ஆகிய குவை இருந் தோன்றல்**
**கடல் கண் டன்ன மாக விசும்பின்**
**அழற் கொடி அன்ன மின்னு வசிபு நுடங்க,**
**கடிது இடி உருமொடு கதழ் உறை சிதறி,**
**விளிவு இடன் அறியா வான் உமிழ் நடுநாள்,**
**அருங்கடிக் காவலர் இகழ்பதம் நோக்கி,”**

**(அகம்: 162 1-7)**

தலைவியைக் கண்ட மாத்திரத்தில் மலை போல் வந்த பிரிவுத்துன்பம் பனிபோல் மறைந்தது என்பதனைப் பரணர் பாடிய இப்பாடல் உணர்த்துகின்றது.

**மயங்குதுளி பொழிந்த பானாட் கங்குல்:**

தலைவி மீது கொண்ட ஆராக்காதல் இரவுப்பொழுதில் தலைவனை விரக்தியின் உச்சிக்குக் கொண்டு செல்கின்றது. இரவுக்குறியில் தலைவியைக் காணத் தலைவன் வருகின்றான். பன்றியின் இறைச்சியினை புலிகள் கூடி உண்டு ஆரவார மிக்க பக்க மலையினையும் உச்சிப்பாறையில் இருக்கும் தேனை எடுக்க முயலும் குறவர்கள் ஏற முடியாத அளவிற்கு உயர்ந்த பொதியில் மலையினைப் போல தலைவியை அடைய முடியாது. அவள் அரிதானவள். இதனை

**“வயங்கு வெயில் ஞெமியப் பா அய், மின்னுவசிபு,**
**மயங்குதுளி பொழிந்த பானாட் கங்குல்**
**ஆராக் காமம் அடூ உநின்று அலைப்ப,**
**இறுவரை வீழ்நரின் நடுங்கி தெறுவர,**
**பாம்பு எறி கோலின் தமியை வைகி,**
**தேம்புதி கொல்லோ?”**

**(அகம்:322 1-6)**

என்பதில் பெருமழை பெய்யும் நள்ளிரவில் அடங்காக் காமம் உள்ளத்தே அலை மோத, மலை உச்சியிலிருந்து கீழே விழுந்து இறப்பார் போன்று துன்பம் உண்டாகி நடுங்கி கோலால் அடியுண்ட பாம்பினைப் போல நெஞ்சமே வேறு துணையில்லாது கிடைத்தற்கு அரியவளான தலைவியை

நினைந்து வாட்டமடையலாமா? இரவு மயக்கம் அவனது உணர்வுகளைக் குத்திக் கூறுபோடுகின்றது. தலைவியைக் காணத் தலைவன் வருவதற்கு அவர்களின் வருகைக்கு குறியீடாக பறவை ஒலி எழுப்பும் சத்தத்தைச் செய்வது வழக்கம். ஆனால் அங்கு இயல்பாக பறவை ஒலித்த சப்தம் என்று தெரியாது. அன்று இயற்கையாகவே பறவை ஒலி எழுப்ப தலைவன் வந்துவிட்டான் என தோழியும் தலைவியும் அவனைக் காண வருகின்றனர். தலைவன் இல்லாது போக இருவரும் வீடு திரும்புகின்றனர். பின்பு வரும் தலைவனுக்கு பறவையின் ஒலி கேட்க, பறவை ஒலி எழுப்புகின்றது என நினைந்து வராமல் போகின்றனர். ஏமாற்றம் அடைந்த தலைவன் வருந்திக்கொண்டு தன் நெஞ்சிடம் கூறி புலம்புவதாக அமைகின்றன.

**தோழி தலைவனை வரைவு வேண்டல்**

களவொழுக்கத்திலே தலைவியைப் புணர்ந்து செல்லும் தலைவனை விரைவில் திருமணம் செய்து கொள்ளச் சொல்வதே வரைவு கோடலாகும். தலைவனின் வரைவு நீட்டிக்கும் மனநிலையை மையப்படுத்தி வரைவு கடாவும் தோழியின் கூற்றில் களவால் தோன்றிய அலர்க்குத் தலைவனே காரணம் என்கின்றாள் தோழி. அலர் பரவுதலை மட்டும் சுட்டாமல் தலைவியின் காதலை நிறைவேற்றத் தலைவன் விரைவில் வரவு கொள்ளாமையைச் சுட்டுகின்றாள். “தலைவனின் வரைவு நீட்டிக்கும் மனப்போக்கால் தோழி களவையே குற்றமுடையதாக உணர்கின்றாள்”[8]

களவெழுக்கத்திலே தலைவியைக் காண வரும் தலைவனிடம் தலைவி இற்செறிக்கப்பட்ட செய்தியைக் கூறி விரைவில் மணந்து செல்லுமாறு அறிவுறுத்துகின்றாள் தோழி. உன் மலையிலுள்ள

குரங்குகளும், பிற விலங்குகளும் வாழை, பலாப்பழங்களை உண்டு மகிழ்வாக இருக்கின்றன. ஆனால் இங்கு தலைவியோ உன்னை நினைந்து துன்புற்றிருக்கின்றாள்.

**" பல்வேறு விலங்கும், எய்தும் நாட!**

**குறித்த இன்பம் நினக்கு எவன் அரிய?**

**வெறுத்த ஏள், வேய் புரை பணைத் தோள்,**

**நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு,**

**இவளும், இனையள் ஆயின், தந்தை**

**அருங் கடிக் காவலர் சோர் பதன் ஒற்றி,**

**கங்குல் வருதலும் உரியை; பைம் புதல்**

**வேங்கையும் ஒள் இணர் விரிந்தன;**

**நெடு வெண் திங்களும் ஊர் கொண்டன்றே."**

**(அகம்:2 9-17)**

வேங்கை மலரும் காலத்து தினைக்கதிர்கள் அறுக்கப்பட்டது. தலைவி இற்செறிக்கப் பெற்றாள். இரவு நேரத்தும் வருதல் இயலாது. விரைவில் மணம் முடித்தல் நலம். உலக உயிர்களுக்கு இன்பமளிக்கும் உன்னால், உன் மீது அன்பு கொண்ட தலைவியைப் பற்றி அறிந்து கொள்ள முடியாது இருக்கிறாயே எனக் குறிப்பால் உணர்த்துகின்றாள். கபிலர் பாடிய இப்பாடலின் மூலம் வளர்பிறையில் திருமண நாள் குறித்தல் மரபாக இருந்து வருகின்றது என்பதை உணரலாம்.

இதேபோன்று கலித்தொகைப்பாடலில்

**"இருள் உறழ் இருங்கூந்தல் இவள் மாட்டுநீ இன்ன**

**அருளினை என்பதோ இனிது – மற்று இன்னாதே,**

**ஒளிறு வேல் வலன் ஏந்தி, 'ஒருவன் பான்' என்னாது**

**களிறு இயங்கு ஆர் இடை, ஈங்குநீ வருவதை,**

**அதனால்**

**இரவின் வாரல், ஐய! விரவு வீ**

**அகல் அறை வரிக்கும் சாரல்,**

**பகலும் பெறுவை, இவள் தடமென்தோளே"**

**(கலி:49, 18-25)**

எனும் பாடலில் தோழி, தலைவனை இரவுக்குறி மறுத்தற்குக் காரணம் கொடிய விலங்குகள் உலவுகின்ற மலைச்சாரலில் தலைவி மீதுள்ள அன்பின் காரணமாக நீ இரவில் சந்திக்க வருகின்றாய். ஆனால் தலைவியோ அதனை விரும்பவில்லை, காரணம் நீ வருகிற வழியிலே வளைந்த வரிகளையுடைய புலியானது யானையைத் தாக்கச் சென்றது. யானை, புலியை வென்றது. யானை வருத்தத்தோடு நெடிய மழையிடத்தே உறங்கியது. அப்போது யானையின் கனவிலும் புலி வரக்கண்டு வெருவி எழுந்தது. அப்போது எதிரே புதிதாக மலர்ந்து நிற்கும் வேங்கை மரத்தைப் புலி என நினைத்து மரத்தைச் சிதைத்தது. சினம் தணிந்து யானை பார்த்தபோது அது புலி அல்ல வேங்கை மரம் என்பதனை உணர்ந்த யானை மிகவும் நாணம் கொண்டது. இத்தகு மலை நாட்டுத் தலைவன் நீ. நீ வரும் வழி மிகவும் கொடியது. அதுமட்டுமல்லாமல் இடி என்றும், மழை என்றும் பாராமல், அரிய ஏதம் மிக்க வழியில் தலைவியைக் காண வருகின்ற நிலைமையைக் கண்டு

தலைவி அச்சம் கொள்கின்றாள். நீ தலைவி மீது அன்புடையவன் என்பது நீ கூறும் வார்த்தையே இனியதாக உள்ளது. புலியைக் கொன்ற யானையானது கோபம் தணியாது, கனவிலும் புலி வருவதைக் கண்டு வேங்கை மரத்தை புலி என்று சிதைக்கின்ற கொடுமையான வழியில் வரும்பொழுது, உனக்கு ஏதாவது தீங்கு நேர்ந்து விடுமோ என்னும் அச்சத்தில் நாங்கள் இருக்கின்றோம். கொடுமையான மலைச் சாரலில், அதுவும் இருள் நிறைந்த இரவுப்பொழுதில் புலிகளும், யானைகளும் உலவக்கூடிய வழியில் எப்பொழுது மின்னல், இடியுடன் மழை பெய்யுமோ என்று இயற்கை நிகழ்வால் இடையூறு வரக்கூடிய பகுதியில் நீ வருவதை எண்ணித் தலைவி மிகவும் வருத்தம் கொள்கின்றாள். உனக்கு ஏதாவது நிகழ்ந்துவிட்டாள், தலைவி தாங்கிக்கொள்ளமாட்டாள். உன் மீது மிகுந்த அன்புடையவள். தலைவி மீது நீயும் மிகுந்த காதல் உடையவனாக இருப்பின் களவு வாழ்க்கைக்குப் பின் கற்பு வாழக்கையில் சிறந்த வாழ்க்கை வாழவேண்டும் என்று நினைத்தாயானால், நீ இரவில் வருவதை நிறுத்துவதே நீ அவளுக்குச் செய்யும் பேருதவியாக இருக்கும் என குறிப்பால் உணர்த்துகின்றாள்.

**படுமழை பொழிந்த பானாட் கங்குல்**

இரவுப்பொழுதில் தலைவியைக் காண வரும் தலைவனைப் பார்த்துத் தோழி

**“ நெடுமழை அடுக்கம் கண் கெட மின்னி,**
**படு மழை பொழிந்த பானாட் கங்குல்,**
**குஞ்சரம் நடுங்கத் தாக்க, கொடு வரிச்**
**செங்கண் இருள் புலி குழுமும் சாரல்”**

**(அகம்:92 1-4)**

என கூறுகின்றாள். அவன் வரும் வழியின் ஏதத்தை நினைத்துத் துடித்து வருந்துகின்றேன். மழை பொழிகின்ற நடு யாமத்தில் இருள் நிறைந்திருக்கும். இடி முழக்கத்துடன் கண்ணைப் பறிக்கும் படி மின்னல் வெட்டுகின்றது. புலி யானையைத் தாக்கிக் கொண்டு இருக்கின்றது. பெருமழை பொழிந்து அருவிகள் ஓடுகின்றது. மலைப்பக்கமாக வர வேண்டும். இத்தகு இன்னல்கள் நிறைந்த வழியைக் கடந்து எங்களைக் காண்பதற்கு நீ வர வேண்டும். இதை நினைத்துப் பார்த்தால் எங்கள் உயிர் எவ்வாறு நிலைத்திருக்கும்? துன்பம் தரும் வழியைக் கடந்து இரவில் வந்து தலைவியைப் பார்ப்பதற்குப் பதிலாக அவளைத் திருமணம் செய்து கொள்வது சிறந்தது என உணர்த்துகின்றாள். மழைக்காலத்து இரவு மனிதர்களுக்கு மட்டுமின்றி பிற உயிர்களுக்கும் துன்பத்தை தருகின்ற இரவு. பல்வேறு இன்னல்களை தரும் இரவு. குரங்குகளுமே ஏறமுடியாத உயர்ந்த மரங்கள் உடைய மலைப்பகுதியை கடந்து நீ வர வேண்டும். பாம்பினது தலை மணியாகிய விளக்கொளியில் இருண்ட கூந்தலை உடைய தலைவியோடு இன்பம் பெறுவாயாக. நீ தலைவியோடு இருக்கும் பொழுதில் அச்சம் என்பது அறியாது வீரம் நிறைந்தவனாய் மாறிவிடுவாய். வீரம் வருவதற்கு காரணமாக இருப்பவளே தலைவி தான். அவளுடைய கூந்தல் இருண்டுள்ளது. ஆனால் பாம்பின் தலைமணியின் வெளிச்சம் உனக்கு அச்சம் தராது. ஏனென்றால் உன்னோடு தலைவி இருப்பதே காரணம். உன்னோடு இருக்கும் பொழுது மலை கூட மடுவாகத் தெரிகின்றது தலைவனுக்கு, என்பது பட கூறும் தோழியைக் காணமுடிகின்றது.

**இரை நசைஇப் பரிக்கும் அரைநாட் கங்குல்**

தலைவியைத் தலைவன் வந்து மணமுடிப்பதில் ஈடுபடல் வேண்டும் எனக் கருதும் தோழி தலைவனிடம் கூறுகின்றாள்.“

**"கூனல் எண்கின் குறுநடைத் தொழுதி,**
**சிதலை செய்த செந் நிலைப் புற்றின்**
**மண் புனை நெடுங் கோடு உடைய வாங்கி,**
**இரை நசைஇப் பரிக்கும் அரைநாட் கங்குல்**
**ஈன்று அணி வயவுப் பிணப் பசித்தென, மறப் புலி**
**ஒளிறு ஏந்து மருப்பின் களிறு அட்டுக் குழுமும்**
**பனி இருஞ் சோலை, 'எமியம்' என்னாய்**
**தீங்கு செய்தனையே ஈங்கு வந்தோயே"**

**(அகம்: 112 1-8)**

எனக் கூறுகின்றாள். குறுநடை போடும் கூனல் கரடிக் கூட்டம் கரையான் கட்டிய புற்றின் கூடாரம் உடையும் படி உணவு பெறும் ஆவலின் மண்ணைப் பற்றிழுக்கும். புதிதாகக் குட்டி போட்டிருக்கும் பெண்புலி பசியோடு இருக்கிறது என்பதற்காக ஆண்புலி ஒளி வீசும் தந்தம் கொண்ட யானையைக் கொன்ற பின் தன் பெண்புலியை அழைப்பதற்காக முழங்கும். அத்தகு இருள் செறிந்த இரவுப்பொழுதில் இயல்பில்லாத அரிய வழியின் ஏதங்களை நினைந்து தோழி வருந்திக் கூறுகின்றாள். ஏதங்கள் நிறைந்த இருள் செறிந்த இரவுப்பொழுதில் வருவதே எங்களுக்கு மிகுந்த துன்பம் தருகின்றது. துன்பத்தைத் தீர்க்கின்ற நீயோ பெருந்துன்பத்தில் சிக்கிக் கொண்டாயானால் எங்களால் என்ன செய்ய முடியும்? இதற்கு ஒரு தீர்வு நீ தான் கூற முடியும். அத்தீர்வு வரைவு என்பது உனக்குத் தெரியாதா? நாங்கள் சொல்ல வேண்டுமோ. ஆதலின் இரவுப் பொழுது வருவதை விட்டுவிட்டு தலைவியை மணந்து கொள் எனத் தோழி கூறுவதன் மூலம், அவள் தலைவி மீது கொண்டுள்ள அன்பையும், அக்கறையையும் காணமுடிகின்றது.

**யாமே அன்றியும் உளர் கொல் பானாள்**

இரவுப்பொழுதில் வரும் தலைவனை நோக்கி, களிறு புலியை வென்றது. அதனால் புண் உண்டாகிய களிறு மிகுந்த வேதனையால் பெருமூச்சு விட அருகில் இருக்கும் வேங்கை மரத்தில் உள்ள பூக்கள் சிதறி விழுந்தன. வேதனையில் யானை விட்ட பெருமூச்சால் வேங்கை மலர்கள் கொல்லன் உலைக்களத்திலிருந்து தெறிக்கும் தீப்பொறி போல எழுந்து பெரிய புதரில் பரவி விழுகின்ற கொடுமையான காட்டு வழியில் நடு இரவில் நீ வருவது எமக்கு வருத்தமளிக்கிறது. மேலும் படமெடுத்தாடும் பாம்பின் தலையே துண்டாகும் படியாக இடியானது முழங்கும். அச்சம் தரக் கூடிய வழியில் தளர்ச்சியற்ற உள்ளத்துடன் வேலே துணையாக கற்கள் மிகுந்த, இருள் நிறைந்த சிறு வழியில் எதிர் வரும் துன்பம் குறித்து சிந்தனை செய்யாது நீ வருவது எமக்கு மிகுந்த வேதனையைத் தருகின்றது. இதனை

**“ யாமே அன்றியும் உளர்கொல் - பானாள்**
**உத்தி அரவின் பைத்தலை துமிய,**
**உரஉரும் உரறும் உட்குவரு நனந்தலை,**
**தவிர்வுஇல் உள்ளமொடு எ∴கு துணையாக,**
**கனைஇருள் பரந்த கல்அதர்ச் சிறுநெறி**
**தேராது வருஉம் நின்வயின்**
**ஆர்அஞர் அரும்படர் நீந்துவோரே?”**

**(அகம்:202 9-15)**

களவின்பத்தையே விரும்பும் தலைவன், இரவுக்குறியின்கண்ணே வந்து மீள்பவன். மலைச்சாரல், புண்மிக்க யானை, சினம் மிக்க புலிகள் நடமாடும் இடம், கரிய புதர் இத்தகு இருள் செறிந்த சிறுவழி

இவையெல்லாம் சிறந்தது என்று சொல்ல முடியாது. களவுக்காலத்தை விட இவைகள் தான் மிகுந்த துன்பம் தரக்கூடியவை. துன்பம் குறித்துச் சிந்தனை செய்யவில்லை நீ. ஏன்? அன்பு மிகுந்த தலைவியை நினைத்துக் கொண்டே வருவது கூட ஒரு காரணமாக இருக்கலாம். ஆனால் உன்மீது காதல் கொண்ட தலைவியும் உன்னை நினைப்பதை விட நீ வருகின்ற வழியினை நினைத்துத் துன்பப்படுகின்றாள். உனக்கு ஏதாவது கொடிய விலங்குகளால் தீங்கு நேர்ந்து விடுமோ என்று உடல் நடுங்கி உயிர்வாழ்ந்து கொண்டிருக்கின்றாள். ஒவ்வொரு நாளும் செத்துச் செத்துப் பிழைப்பது போன்றதொரு வாழ்க்கையைத் தலைவி வாழ்ந்து கொண்டிருப்பது உனக்கு எங்கே தெரியப்போகின்றது. துன்பமே துணையாகக் கொண்டு வாழ்கின்ற தலைவிக்கு இன்பம் கொண்ட வாழ்க்கை எப்பொழுது அமையும் எனக் குறிப்பால் உணர்த்துகின்ற தோழியைக் காணமுடிகின்றது.

### புயல் ஏறு உரைஇய வியல் இருள் நடுநாள்

அச்சத்தை உண்டாக்கும் நெறியின் கண் பல் விலங்கினங்கள் திரிந்து வருதலால் அவை இரவின் கண் தலைவியைக் காண வரும் தலைவனுக்குத் துன்பம் விளைவிக்கும் என்பதாகத் தோழி கூறுகின்றாள். இரவில் விலங்குகள் தலைவனுக்குத் துன்பம் விளைவித்ததாகப் பாடல் இல்லை என்றாலும் துன்பம் நேருமோ எனத் தலைவி உண்மையிலேயே புலம்புகின்றாள். ஆனால் தோழி இரவின் கண்ணே கொடிய வழியில் வருவது அவ்வளவு சிறப்பாகாது என மறுத்து விரைவில் தலைவியை மணம் முடிக்கும் படிக் குறிப்பால் கபிலர் பாடிய கீழ்க்காணும் பாடல் சுட்டத்தக்கது.

**"கிளைபா ராட்டும் கடுநடை வயக்களிறு**

**முளை தருபு ஊட்டி, வேண்டுகுளுகு அருத்த**

**வாள் நிற உருவின் ஒளிறுபு மின்னி,**

**பரூ உஉறைப் பல்துளி சிதறி, வான்நவின்று,**

**பெரு வரை நளிர்சிமை அதிர வட்டித்து,**

**புயல் ஏறு உரைஇய வியல் இருள் நடுநாள்**

**விறல் இழைப் பொழிந்த காண்புஇன் சாயல்,**

**தடைஇத் திரண்ட நின் தோள் சேர்பு அல்லதை,**

**படாஅ வாகும், எம் கண் என, நீயும்,**

**இருள் மயங்கு யாமத்து இயவுக் கெட விலங்கி"**

**(அகம்:218 1-10)**

தலைவனே! நீ எம்பால் மிகுதியாகக் காதல் கொண்டிருக்கின்றாய். அதனால் இரவு நடு யாமத்தில் வரத் தேவையில்லை. ஏனெனில் விரைந்து நடக்கும் வலிமை உள்ள ஆண்யானை, மூங்கில் முளைகளைப் பிடுங்கி பிறவற்றிற்கு உண்ணக்கொடுக்குமாறும், தழைக்கும் படி மின்னல் மின்னி, இடி முழக்கத்துடன் கூடிய மழையும் பொழிகின்றது. இப்படிப்பட்ட நள்ளிரவில் வரிப்புலிகள் நடமாடுபவர்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் வழியில் நீ வருவது சரியில்லை. உனக்கு ஏதாவது துன்பம் நேர்ந்து விடுமோ என்ற பயம் எங்களுக்கு இருக்கின்றது. களவின்பத்திலே பகலும், இரவும் என மாறி மாறி வருவது ஆண்மகனாகிய உனக்கு ஒன்றும் நேராது. பெண்ணாகிய தலைவிக்கு அலர்தூற்றும் பெண்களின் பழிச் சொற்களைக் கேட்கக் கேட்க மனம் வருந்தி உடல் மெலிவுற்று வேதனைப்படுகின்றாள். பிரிவுகள் கொண்ட

பெருமலைப் பகுதியில் வருவது அரிதென்று நினையாது எளிதென்று நீ எண்ணுகின்றாய். அதனை நினைந்து தலைவி அச்சம் கொள்கிறாள். இருவரும் வெவ்வேறு வகையில் துன்ப வாழ்க்கை வாழ்வதை விட்டுவிட்டு, இணைந்து இன்பமான வாழ்க்கை வாழ்வதே சிறப்பானது என்பதனை விரும்புவதாகக் கூறுகின்ற தோழியைக் காணமுடிகின்றது.

களவுக் காலத்தே தலைவியை இரவு நேரத்தில் சந்திக்க வரும் தலைவனுக்கு எத்தகு (ஏதங்கள்) இடையூறுகள் நிகழும் என்பதைத் தோழி கூற்றின் மூலம் உணரலாம்.

**“வான்கண் விரிந்த பகல்மருள் நிலவின்**

**சூரல் மினைஇய சாரல் ஆர்ஆற்று,**

**ஓங்கல் மிசைய வேங்கை ஒள்வீப்**

**புலிப்பொறி கடுப்பத் தோன்றலின், கயவாய்**

**இரும்பிடி இரியும் சோலைப்**

**பெருங்கல் யாணர்த்தம் சிறுகுடி யானே’’**

**(அகம்:228, 8-13)**

பகல்போன்று நிலவொளி வீசுவதால் ஊரார் அறிந்துகொள்ள வாய்ப்புகள் அதிகம். காவல் காட்டினை உடைய சாரல் பொருந்திய சுரவழியில் காவலர்கள் தலைவன் வருகையைப் பார்த்துவிட்டால் தலைவனுக்கு பெருந்துன்பமாகிவிடும். மலை மீதிருந்த வேங்கை மரத்திலுள்ள பூக்கள் பாறையில் உதிர்ந்து கிடப்பது புலிபோல் தெரிகிறது. அதனைப் பார்த்து புலியோ? என அச்சம் கொள்கின்றான். அதே போன்று பெண்யானையும், புலியோ என்று அஞ்சி நிலைக்கெட்டு ஓடுகின்றது. அதே வழியல் தலைவன் வருகின்ற போது, அந்த யானையாலும் தலைவனுக்கு ஆபத்து வருவதற்கு வாய்ப்பு உள்ளது. இத்தகு ஆபத்து நிறைந்த

இரவுப்பொழுதில் தலைவன் உன்னைக் காண வருகின்றான் என்றால், உன் மீது இருக்கும் அன்பினால் தான் என்றாலும் இத்தகு ஆபத்தெல்லாம் நேர்ந்துவிட்டால் தலைவி மிகுந்த துன்பப்படுவாள். அதனால் பகலில் வருமாறு தோழி உணர்த்துகின்றாள். இரவுப்பொழுதினால் தலைவனுக்குத் துன்பம் நேருவதை ஒரு நாளும் தலைவி தாங்கிக் கொள்ளமாட்டாள் என்பதனையும் தலைவன் மீது அவள் வைத்திருக்கும் அன்பின் வெளிப்பாட்டையும் இப்பாடல் உணர்த்துகின்றது.

**இரவழங்கு சிறுநெறி தமியை வருதி**

இரவு தரும் அச்சத்தைக் கூறி, தலைவியை மணம் முடிக்கக் கூறும் தோழி, 'களவிலே வந்து உறவாடிச் செல்லுதல் தலைவியின் உள்ளத்தை மிக வருத்தும்; நீ வரும் வழியிலுள்ள துன்பங்களை நினைத்துத் தலைவி அஞ்சுகின்றாள். ஆதலால் நீ இரவில் இனி வருதல் வேண்டாம் என்பது படக் கூறுகின்றாள்.

**" கான மான் அதர் யானையும் வழங்கும்;**
**வான மீமிசை உருமும் நனி உரறும்;**
**அரவும் புலியும் அஞ்சுதகவு உடைய**
**இரவழங்கு சிறுநெறி தமியை வருதி-**
**வரை இழி அருவிப் பாட்டொடு பிரசம்**
**முழவு சேர் நரம்பின் இம்மென இமிரும்,**
**பழ விறல் நனந்தலைப் பயமலை நாட!**
**மன்றல் வேண்டினும் பெறுகுவை"**

**(அகம்:318, 1-8)**

இது கபிலர் பாடிய பாடலாகும். நீ தலைவி மீது அருளற்றவனாக இருக்கின்றாய்; அவளோ நீ வருகின்ற கொடுமையான வழியை நினைந்து அச்சம் கொள்கின்றாள். நீ வரும் சிறிய வழியில் காட்டுமானும் யானையும் வருவதால் உன் உயிருக்கு ஊறுகள் நேருமோ எனத் தலைவி அஞ்சுகின்றாள். பாம்பு நடுங்கும் படியான இடி இடிக்கும் பொழுதில் நீ வருகின்றாய். இடியாலும், பாம்புகளாலும், புலியாலும் ஏதாவது நேர்ந்துவிடுமோ எனும் எண்ணத்துடன் தலைவி பெரிதும் கவலை கொள்கின்றாள். நீ எங்களைக் கண்டு திரும்பும் போது மூங்கில் காட்டில் பிரிந்து சென்ற உன் நாய்களை அழைக்கக் கொம்பு ஊதுவாய். அந்தக் கொம்பை ஊதினால் நீ பாதுகாப்பாக உன் ஊருக்குச் சென்று விட்டாய் என்று நாங்கள் நிம்மதியாக இருப்போம். ஆதலின் நீ இரவில் வராதே. நீ உண்மையான அன்புடையவன் என்றால் அவளை விரைந்து மணந்து கொள்வதே சிறந்தது என்று கூறுகின்றாள் தோழி. விலங்குகள் நடமாடும் சிறிய வழி, புலிகள், பாம்புகள், யானைகள் திரிகின்ற இடம், துன்பத்தையே துணையாக வைத்திருக்கும் தலைவி, அவளுடைய துன்பத்தை உணராத தலைவன், இருவேறுபட்ட மன உணர்வில் வாழுபவர்கள், இவர்களின் மன உணர்வுப் போராட்டத்திற்குக் காரணமாக இருப்பது களவொழுக்கமாகும். இருள் நிறைந்த பாதையில் தலைவியைத் தேடி வரும் தலைவன் தன் வாழ்க்கை இருளாகிப் போகுமோ எனத்துடிக்கும் தலைவி. இவ்வாறு அச்சம், துன்பம், மனவேதனை, நிம்மதியின்மை என்ற நிலையில் வாழ்க்கை ஒரு போராட்டமாகவே உள்ள நிலையைக் காணமுடிகின்றது.

### அடுபுலி வழங்கும் ஆர்இருள் நடுநாள்

களவொழுக்கத்தில் தலைவன் தலைவியைக் காணப் பகலில் வந்தால் இரவு வா என்று கூறுவர். இரவு வரும் தலைவனைப் பகலில் வா என்பர். இருகுறியானும் வராதே என்ற தலைவியும் தோழியும் கூறுவதில்லை. ஆயின் இருகுறியினும் மாற்றி, மாற்றி வருக எனத் தலைவனுக்குக் கூறுவதுண்டு.

தலைவியின் நினைவு முழுவதிலும் தலைவன் நிறைந்து நிற்கின்றான். அவளது அச்ச மனநிலையில் மிகுந்த துன்பம் நேருகின்றபோது வெறுப்புற்ற நிலையில் தலைவன் வரைவு நீட்டிப்பதனால் இருகுறியும் வரவேண்டாம் என மறுக்கின்றாள். இதில் தோழிக்கும் முக்கியப் பங்குண்டு. பகல் நேரத்தில் சந்தித்தோம். இப்பொழுது தினை அறுவடையாகிவிட்டது; இனிப் பகலிலும் சந்திக்க முடியாது; பெண் யானை, கன்றுகள் ஆகியவற்றோடு ஆண் யானை, வரும்போது புலி தாக்கும். அந்தத் தாக்குதலில் தப்பிப் பிழைக்கும் யானைக் கூட்டமும் புலியும் நடமாடும் வழியில் இரவின் நடுயாமத்து இருளில் தன்னந்தனியே நீ வருவது, பகலில் வருவதைக் காட்டிலும் கொடுமையானது. ஊரார் தூற்றும் அலருக்குக்கூட நாங்கள் அஞ்சவில்லை. களிற்றினைத் தன் இரையாகக் கொள்வதற்கு சென்ற புலி, அவ் யானைத் தப்பிச்சென்றுவிட மிகுந்த கோபத்துடன் கொல்லும் புலி உலவித் திரிகின்ற இருள் நிறைந்த நள்ளிரவுப் பொழுதில் நீ தனியாக வருவதை நினைத்துத்தான் மிகுதியாக அஞ்சுகின்றோம். தினைப் புனக் காவல் முடிந்தது: தலைவி இற்செறிக்கப்பட்டாள். இனி இருவரும் சந்திப்பதற்குரிய நிகழிடம் வேறு இல்லை. யானை புலியிடம் தப்பி தன் கூட்டத்துடன் சேர்ந்து எங்கும் செல்லாது இருப்பதைப் போல இற்செறிக்கப்பட்டாள் தலைவி. மணம் முடித்தால் மகிழ்ச்சியாக வாழலாம் நாங்கள் ஊரார் அலர் தூற்றுவர்

என்று அச்சம் கொள்ளத் தேவையில்லை. எல்லாவற்றிற்கும் ஒரே முடிவு நீ விரைவில் தலைவியை வரைந்து செல்வதே சிறந்ததாகும். இதனை,

**“----------------------------------- வயநாய்பிற்பட,**

**பகல்வரின், கல்வை அஞ்சுதும்; இகல்கொள,**

**இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்**

**பெருங்கை யானைக் கோள் பிழைத்து, இரீஇய**

**அடுபுலி வழங்கும் ஆர் இருள் நடுநாள்**

**தனியை வருதல் அதனினும் அஞ்சுதும்,**

**என் ஆ குவள் கொல் தானே? பல் நாள்**

**புணர்குறி செய்த புலர்குரல் ஏனல்**

**கிளிகடி பாடலும் ஒழிந்தனள்;**

**அளியள் தான்நின் அளிஅலது இலளே!”**

**(அகம்: 118, 5-14)**

எனும் கபிலர் பாடிய அகநானூற்றுப் பாடல் வழி அறியலாம்.

**ஏனலும் இறங்கு பொறை உயிர்த்தன பானாள்**

அச்சம் தரும் இருளுடைய யாமத்தில் தலைவன் வருவதால் தலைவனுக்கும், தலைவிக்கும் உண்டாகும் ஏதத்திற்கு அஞ்சி இரவில் வர வேண்டாம் என்றும், பகலில் தினை கொய்து புனம் அழிக்கப்பட்டமையால் அப்பொழுதிலும் வராதிருப்பதே நல்லது எனத் தோழி கூறுகின்றாள்.

**“---------------------------------- விசும்பின்**

**எய்யா வரிவில் அன்ன பைந்தார்,**

**செவ்வாய் சிறுகிளி சிதைய வாங்கி,**

**பொறை மெலிந் திட்ட புன்புறப் பெருங்குரல்**

**வளை சிறை வாரணம் கிளையொடு கவர,**

**ஏனலும் இறங்குபொறை உயிர்த்தன, பானாள்**

**நீ வந்து அளிக்குவை எனினே மால்வரை**

**மைபடு விடரகம் துழைஇ, ஒய்யென**

**அருவிதந்த அரவு உமிழ் திருமணி**

**பெருவரைச் சிறுகுடி மறுகுவிளக் குறுத்தலின்,**

**இரவும் இழந்தனள்:”**

**(அகம்:192, 3-13)**

பிரிவு துன்பத்தின் பெருநிலையாகும். அத்துன்பத்திற்குத் தலைவனும் தலைவியும் முடிவு கட்டுதல் வேண்டும். ஆயின் தலைவி மட்டும் மிகுந்த துன்பத்தின் பிடியிலிருந்து மீளாதவளாக அமைகின்றாள் பாம்பு உமிழ்ந்த மணிக் கற்களை அருவி நீர் அடித்துக் கொண்டு வந்து தெருவில் போட்டிருப்பதால் அவை ஒளி வீசுகின்றன. பிறர் உன்னைப் பார்த்து விடுவார்கள். அத்தகைய இருள் பரந்த நள்ளிரவுப் பொழுதில் தலைவன் வருதல் மிகுந்த துன்பத்தைத் தருகின்றது. பகலில் தினைப் புனத்தில் சந்திக்கலாம் என்றால் சிவந்த வாயை உடைய பச்சைக் கிளி சிதைத்துத் தின்னும் படிக் கதிர் வாங்கியுள்ளதால் தினை அறுக்கப்பட்டு அறுவடை செய்யப்பட்டுவிட்டது. யானைக் கூட்டமாக வந்து திரிவதால் பகல் நேரத்தில் அவற்றாலும் துன்பம் நேரலாம். இவ்வாறு இரு குறியாலும் தம் தலைவனுக்கு இடையூறு நேர்ந்து விடுமோ எனத் தலைவி புலம்பித் தவிக்கின்றாள். இவ்விருவருடைய துன்பமும் நீங்க வேண்டுமாயின் வரைந்து இல்லறத்தில் இனிது இருப்பதே நல்லது என நினைக்கின்ற தோழியைக் காணமுடிகின்றது.

**உரவு மழை பொழிந்த பானாட் கங்குல்**

தலைவனே இரவில் வரவேண்டாம்; சிறிய நெறி; இடி முழக்கத்துடன் கூடிய பெருமழை பொழிகின்றது. பாம்பு இறக்கும் படியாக இடி இடிக்கும் இரவுப்பொழுதில் தனியே நீ வருவதை நினைத்து, என் தலைவி எப்போதும் கண்ணீர் விடுகின்றாள். ஆதலால் இரவில் வருதல் வேண்டாம். ஆண் குரங்கு மிளகுக் கொடியின் தளிர்களைத் தின்றுவிட்டுக் காரம் தாங்காமல் கிளைக்குக் கிளை மரத்தில் தாவி பூக்களை உதிர்த்து கொட்டும். இப்படிப்பட்ட மலைச் சாரல் வழியில் நீ நண்பகல் வேளையில் வருதல் வேண்டும். அதனால் தலைவியினுடைய பலவாய துன்பமெல்லாம் தீரும்படியாக நீ பகற்பொழுதிலே வருவாயாக எனத் தோழி கூறுகின்றாள். தலைவனுக்கு ஏதேனும் ஊறு நேர்ந்து விடக்கூடாது என நினைக்கும் தோழி இருளும், மழையும் மிகுந்த இரவுப் பொழுதில் வரவேண்டாம் என உறுதியுடன் மறுக்கின்றாள். இதனை,

**"அரவு எறி உருமோடு ஒன்றிக் கால்வீழ்த்து**
**உரவு மழை பொழிந்த பானாட் கங்குல்,**
**தனியை வந்த ஆறு நினைந்து, அல்கலும்,**
**பனியொடு கலுழும் இவள் கண்ணே; அதனால்**
**கடும்பகல் வருதல் வேண்டும்."**

**(அகம்:182, 9-13)**

என்னும் கபிலர் பாடல் வழி அறியலாம்.

**புலவு நாறு புகர் நுதல் கழுவ கங்குல்**

களவுப் புணர்ச்சியிலே வந்து செல்கின்ற தலைவனைக் கண்டும் காணாதது போல் தலைவிக்குக் கூறுவாளாக அவன் கேட்கும்படித் தோழி தலைவனுக்குச் செய்தியுரைப்பாள். இரவில் ˙வரும் தலைவனை

விரைவில் வரைந்து கொள்ளுமாறு தோழி கூறுவாள். இரவு நேரத்தில் வருவது இன்னும் மிகுந்த துன்பத்தைத் தரும். களவு வெளிப்பட்டால் தலைவி இற்செறிக்கப்படுவாள், காவல்மிகும், ஊரார் அலர் தூற்றுவர்: துயர் தாங்காது: தலைவி இறந்துபடுவாள் எனப் பல காரணங்கள் கூறித் தலைவியை மணம் செய்து கொள்ளுமாறுத் தோழி கூறுவாள். இங்ஙனம் அமைந்த பல பாடல்கள் அகநானூற்றில் காணத் தக்கனவாய் உள்ளன. (அகம்:222, 248, 272, 278, 362, 370, 392)

சிறைபுறத்தே இருக்கும் தலைவனைக் காணாதவர் போல் தோழி, இரவுக் குறிக்கண் தலைவன் வருவதால் பல இடையூறுகளைச் சந்திக்க நேரும்; ஆதலால் அதனை நினைத்து நான் அஞ்சுகின்றேன் எனக் கூறித் தலைவன் வரைவு கோடலே மிகச் சிறந்தது என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றாள்.

**"இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப்**
**புலவு நாறு புகர்நுதல் கழுவ, கங்குல்**
**அருவி தந்த அணங்குடை நெடுங் கோட்டு**
**அஞ்சுவரு விடர்முகை ஆர் இருள் அகற்றி,**
**மின் ஒளிர் எ.்.கம் செல் நெறி விளங்க,"**

**(அகம்:272, 1-5)**

எனும் மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் பாடலில் தலைவியிடம் கூறுவது போல் தலைவனுக்குக் கூறுகின்றாள் தோழி. பெரிய கையை உடைய ஆண்யானை வலிமை மிக்க புலியைக் குத்திக் கொன்று புலவு நாற்றம் அடிக்கும் முகத்தைக் கழுவுவதற்காக, பெருமலைப் பிளவில் அணங்குப் பெண்கள் வாழும் அருவிக்கு நடுயாமத்தில் வருகின்றது. அந்த நடு யாமத்து இருளைப் போக்கும் ஒளியாகத் தன் கையில் இருந்த வேலை வைத்துக்கொண்டு தலைவன் தனியே வருகின்றான். அவனைப் பார்த்தும் நம் தாய்க்கு ஒரே மகிழ்ச்சி.

தலையில் கண்ணி சூடிக் கையில் வேலேந்தி வரும் அவனைப் பார்த்த நம் அன்னை முருகனே என நினைந்து புகழ்ந்து பாராட்டினாள். நிறமிக்க செந்தினையை நீரோடு கலந்து தூவி அவனை துதிக்கத் தொடங்கினாள். இரவுப் பொழுதாக இருக்கின்ற காரணத்தால் நம் அன்னைக்குத் தலைவன் நம்மைக் காண வந்துள்ளான் எனத் தெரிய வாய்ப்பில்லை. வேல் அவனுக்கு இருள் நிறைந்த பாதையில் வழிகாட்டுவது போல; தலைவனும் உன் வாழ்க்கைக்கு வழி காட்டுவான். அன்னை வணங்கும் முருகக்கடவுள் உன் வாழ்க்கைக்குத் துணையாக இருப்பார் என்பது படக் கூறுகின்றாள்.

**கணமழை பொழிந்த கான்மடி இரவு**

களவொழுக்கத்தில் தலைவன் தலைவியைத் தன்னோடு சேர்த்து வைக்குமாறு கெஞ்சுகின்றான். உன்னை அவனுக்குத் தருவதாக ஒப்புக்கொண்டேன். நீ உன்னை அவனுக்குத் தந்துவிடு. அவன் உன் நலனை பாதுகாப்பான் என்று தோழி தலைவியிடம் கூறுகின்றாள்.

**“-------------------------------------கல்லெனக்**
**கணமழை பொழிந்த கான்மடி இரவில்,**
**தினைமேய் யானை இனன் இரிந்து ஓட,**
**கல் உயர் கழுதில் சேணோன் எறிந்த**
**வல்வாயக் கவணின் கடுவெடி ஒல்லென,”**

**(அகம்:392, 11-15)**

எனும் மோசிகீரனார் பாடற் செய்தி காட்டத்தக்கது. பெருமழை பொழிந்து காடே இருண்டு கிடக்கும் நள்ளிரவில், உயர்ந்த பந்தலில் இருந்து கொண்டு காவல் காக்கும் (குறவன்) சேணோன் கவண் கல்லை வீசி எறிந்தான். அக்கல்லின் ஓசையைக் கேட்டுத் தினை வயலில் மேய்ந்த யானை கதறுகின்றது. அதனை இடியோசை எனக்

கருதி மயில் ஆடுகின்றது. மலைவாழ் உயிரினங்கள் அனைத்தும் அஞ்சுவதற்குக் காரணமான, பெரிய கற்களை உடைய மலை நாட்டுத் தலைவன் நம்மை வெறுக்கவில்லை. அன்பிற்குரிய பெண்யானையை இழந்த ஆண்யானை எதுவும் உண்ணாது உடல் மெலிந்தது போன்று, பொலிவிழந்து வாட்டமுற்று உன் உடல் மெலிந்திருந்தாலும் தலைவன் உன்னை பொன்னால் செய்த பாவை போன்றவளும், அழகுடையவளும், காதலுடையவளும், மடப்பமுடையவளும், நல்லவலுமானவள் என வர்ணிக்கின்றான். உனக்குத் துணையாக இருக்கும்படி என்னை வேண்டிக் கேட்கின்றான். அவ்வாறு வேண்டியவன் நம்மை விட்டுச் சிறிதும் நீங்க மாட்டான். இருவரையும் சேர்த்து வைத்து, பழைய அழகு நலன் மீண்டும் உனக்கு வருமாறு செய்வேன் என உறுதிமொழி கூறுகின்றாள் தோழி. உயிரினங்கள் ஒடுங்கிக்கிடக்கும் நள்ளிரவு. பிரிந்தோர் உயிரைக் கொல்லும் இரவு. அத்தகு பொழுதிலும் உன்னைக் காணவரும் தலைவன், உன் மீது கொண்ட காதலால் கொடிய விலங்குகள் வந்து தாக்கும் என்பதனைக் கூட உணராது உன்னையே நினைந்து வரும் தலைவன், ஒருபோதும் உன்னைக் கைவிட மாட்டான் என்பதற்கு இரவு பொழுதில் வரும் தலைவனின் வரவே ஒரு சான்றாக அமைகின்றது.

## முடிவுரை

யாமம் என்னும் சிறுபொழுது சாமம், நடுநிசி, நடுச் சாமம், இரவு, இராத்திரி என்று அழைக்கப்படும். இப்பொழுது குறிஞ்சி நிலத்திற்குரியது. தலைவனும் தலைவியும் காதல் வயப்பட்ட பின்பு தலைவன் தலைவியைக் காண்பதற்கு வருகின்ற பொழுதாகவே இருக்கின்றது.

இரவுப்பொழுது மிகுந்த இடர்பாடுகள் நிறைந்த பொழுதாகும். தலைவியைச் சந்திக்க வரும் முன்னரே புலி, யானை போன்ற விலங்கினங்களால் துன்பம்; பாம்பு தரும் அச்சம்: இவற்றையெல்லாம் கடந்து வந்தால் அன்னை இற்செறிப்பு எனத் தலைவி படும் துன்பம்: தலைவியைச் சந்தித்து பின்னர் பிரிந்து செல்லும் பொழுது மனஉணர்வால் துன்பம், கலக்கம், ஏக்கம் எனத் தலைவனுக்குப் பலவழியிலும் இடையூறுகள் உண்டாகின்றது.

இரவுப்பொழுது மனத்தில் நீங்காது நிலை பெற்ற காதலுறவை நினைத்து உண்டான உணர்வுப் போராட்டம் மிகுந்த வேதனை தருவதாகும்.

தலைவன் இரவுப்பொழுதில் சிறிய பாதையில் மழை பெய்கின்ற காலத்தில் வருவது தலைவிக்கு இன்னும் மிகுந்த அச்சத்தைத் தருகின்றது. பெண்களுக்குத் தலைவனே உயிர். ஆதலால் தலைவன் பிரிவைத் தலைவி தாங்காது தவிக்கும் தவிப்பும், ஒரு சேர தலைவியின் உயிரையே குடிக்குமளவிற்குப் போய்விடுகின்றது. மொத்தத்தில் அச்சம் தரும் இரவாக, கொடுமை மிகுந்த இரவாக, தலைவிக்கு அமைகின்றது.

பிரிவு என்பது ஒருவர் மீது ஒருவர் கொண்டுள்ள அன்பினை அறிந்து கொள்ளக் காரணமாக உள்ளது. உடலால் மட்டுமின்றி உள்ளத்தாலும், தாக்கத்தையும், ஏக்கத்தையும் உண்டாக்கும் பொழுதாக இரவுப்பொழுது உள்ளது. துன்பத்தை யாரிடமும் பகிர்ந்துகொள்ள முடியாத பொழுது;

வெளி உலகைக் கண்டு மன ஆறுதல் பட முடியாத இருள் நிறைந்த பொழுது. மலைப்பகுதியைக் கடந்து வருகின்ற நேரத்தில் பல்வேறு உயிரினங்களினால் இடையூறு நேருவது மட்டுமின்றி, இயற்கையினால் (காற்று, மழை, இடி, மின்னல்) வரும் இடையூறுகளையும் கடந்து தலைவியைக் காண தலைவன் வருகின்றான் என்றால், தலைவி மீது அளவு கடந்த (காதலால்) அன்பு வைத்திருப்பது புலனாகின்றது.

காதலுக்கு காலமும், இடமும் இடையூறாக இருந்தாலும், தடைகளைத் தாண்டிய அன்பை யாராலும் பிரிக்க முடியாத நிலை உருவாகின்றது. காலம் தத்துவ விசாரணையில் முக்கியப் பங்கு வகிக்கின்றது. காலமும் மனித உணர்வுகளும் இரண்டறக் கலந்தவை என்பதை மெய்ப்பிக்கின்றது.

## அடிக்குறிப்புகள்

1. தொ.இளம் (உ.ஆ), (தொல்.பொருள்:7) ப.11
2. V.R. Ramachandra Dikshitan, Studies in Tamil Literature and History, P.273
3. நா.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.11
4. சு.வே.நடராசன், இலக்கியக் காட்சிகள், ப.2
5. இரா.தண்டாயுதம், சங்கஇலக்கியம் (எட்டுத்தொகை) பக்.146-147.
6. க.ப.அறவாணன், அற்றை நாள் காதலும், வீரமும் ப.97
7. கெ.செல்லத்தாய், சங்கப் பாடல்களில் கால நிகழ்வும் காதல் வாழ்க்கையும், ப.18
8. மேலது, ப.24

## முடிவுரை

இயற்கைச் சூழலிலும், காலப் பின்னணியிலும் பண்டைய தமிழர் தம் அகவாழ்க்கைச் செய்திகளைக் கூறுவன சங்க அகப்பாடல்கள். குறித்த காலத்தில் குறித்த செயல்களை செய்தல் வேண்டும். அது முடியாத போது அதனால் ஆகும் துன்பங்களை உணரவும், அனுபவிக்கவும் வேண்டியிருக்கிறது. காதல் வாழ்க்கையில் இணைகின்ற தலைவனும், தலைவியும் பருவ நிகழ்வோடு கூடிய உணர்வுகளைக் கொண்டவர்களாகச் சங்கப் பாடல்களில் காட்டப்படுகின்றன. இல்லறக் கடமைகளை நிறைவேற்றும் நிலையில் அவர்கள் சேர்ந்து இருப்பதும், பிரிந்திருப்பதுமான சூழலுக்கு ஆட்படுத்தப்படுகின்றனர். இவர் தம் பிரிவிற்கும், கூடியிருப்பதற்குமான பருவ நிகழ்வுகள் உண்டு. சேர்ந்திருக்கவேண்டிய காலத்தில் சேராதிருத்தலும், பிரிந்து உரிய காலத்தில் சேராதிருத்தலும் அவ்விருவருக்கும் உண்டாகும் துன்ப நிகழ்வு. இத்தகைய சூழலில் அவர் தம் அன்பின் மிகுதியையும், அன்பின் பெருக்கத்தையும் சங்கப் புலவர்கள் காட்டியிருக்கின்றனர்.

அன்போடு கூடிய வாழ்க்கை, வாழ்க்கையில் வாய்மையைப் போற்றுதல், வாய்மையில் நம்பிக்கை வைத்தல் போல்வனவும் பாடல்களில் காட்டப்படுகின்றன. தலைவன், தலைவி பிரிவில் தலைவனும், தலைவியும் ஆற்றாது துன்பம் மிகுதிபடும்போது அவர்தம் துணையிருப்போராகிய தலைவியின் தோழி, தலைவனின் பாங்கன், தேர்ப்பாகன் போன்றோர் துணையாகவும், ஆற்றுவிப்போராகவும், உதவுவோராகவும் அமைகின்றனர். சங்கப் பாடல்களில் பருவ நிகழ்வுகள் தலைவன் தலைவிக்கான காதல் வாழ்க்கை நிகழ்வில் பின்னணியாக அமைந்து அவர்தம் அன்பின் உள்ளத்தையும், உணர்வுகளையும் வெளிப்படுத்துவனவாக உள்ளதை அறிய முடிகின்றது.

கார்காலம் தலைவன் தலைவி, இருவரும் சேர்ந்திருக்க வேண்டிய காலமாகும். போர்க்காரணமாகவோ, பொருள்காரணமாகவோ பிரிந்து செல்லும் தலைவன் மீண்டும் வருவதற்குரிய காலமாகும். கார்காலம் பிரிந்திருக்கும் தலைவன், தலைவியருக்குத் துன்பம் தரும் காலமாகும். சேர்ந்திருப்போருக்கு இன்பம் தரும் காலமாகும்.

தலைவனை பிரிந்திருக்கும் தலைவிக்கு கார்காலத்து மலர்களான தளவம்பூ, பிடவம்பூ, கோடல் என்னும் பச்சைப் புல், முல்லைப் பூ காயாம்பூ, வேங்கைப்பூ, கொன்றைப்பூ குந்தம்பூ, மௌவல் அறும்பு, நொச்சிபூ போன்ற மலர்களின் மலர்ச்சியும், இடியின் ஓசையும், குயிலின் குரலும், மாலைநேரமும், வாடைக்காற்றும் துன்பத்தைத் தருகின்றது.

கார்ப்பருவத்துப் பிரிவு தலைவியின் நெஞ்சில் பெருந்துன்பத்தை உண்டாக்குகின்றது. கார்காலம் பிரிந்திருக்கும் தலைவிக்கு முரண்பட்ட தன்மையில் அமைகின்றது. பிற உயிரினங்களின் மகிழ்வு; தலைவிக்கு துன்பமாகிறது. மழை பெய்வது இயற்கைக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. தலைவிக்குத் துன்பமாக அமைகின்றது.

பிற உயிரினங்களுக்கு தீங்கு நேரக்கூடாது என நினைக்கும் தலைவன், தலைவி மீது எத்தகு அன்பு உடையவனாக இருப்பான் என்பதும் நினைக்கத்தக்கது. கார்காலத்தால் நிலம் செழிப்புற்று இருப்பதுபோல், பிரிந்த தலைவன் மீண்டும் சேரும்பொழுது இல்லறத்தில் தலைவி மகிழ்ச்சியோடு இருப்பாள். இல்லறம் குளிர்ச்சி பெறும் என்பது குறிப்பால் உணர்த்தப்படும் செய்தியாகும்.

கார் வரவு என்றால் தலைவன் வரவு என்றும், காடு அழகு பெறுதல் என்பது தலைவன் வரவால் தலைவி அழகு பெறுவாள் என்ற எதார்த்த நிலையைக் காணமுடிகின்றது.

கார்காலத்தில் பெருமழை பெய்தலால் பள்ளங்களில் நீர் நிறைந்து கிடக்கின்றன. காடு அழகு பெறும்படி பூக்கள் பூத்துக் கிடக்கின்றன. விலங்கினங்கள் மகிழ்வோடுத் திரிகின்றன. காட்டு விலங்குகள் தேரின் ஓசை கேட்டு வெருண்டு ஓடாதவாறு மணியினை இழுத்துக் கட்டிவைக்குமாறு தலைவன் தேர்ப்பாகனிடம் கூறும் தன்மையின் மூலம், தலைவன் மனிதநேயமிக்கவன் என்பது புலனாகின்றது.

கார்காலம் மயில் அகவும் காலமாகவும், (தண்பெயல் பொழிந்த காலம்) குளிர்ந்த மழையைப் பொழியும் காலமாகவும், (ஈன்று நாள் உலந்த வெண்மழை) கார்காலத்தின் கடைநாளில் நிலமகள் நெஞ்சம் வருந்துமாறு இடைவிடாது மிகுதியான நீரை மழையாகப் பொழியும் காலமாகவும், (ஏறுடைப் பெருமழை) இடியுடன் கூடிய மழையைப் பொழியும் காலமாகவும், (பஞ்சியின் வெண்மழை) பஞ்சு போன்ற மேகம் தூரலாக, சாரலாக பெய்யும் காலமாகவும், மாலைப்பொழுதில் பெய்யும் மழைக்காலமாகவும், (மாதிரம் புதைப்ப மழை பொழியும் காலம்) திசைகள் மறையும்படியாக பொழியும் கார்காலமாகவும், (கமஞ்சூழ் மாமழை) நிறைந்த சூலையுடைய கருமையான மேகங்கள் மழையைப் பொழியும் காலமாகவும், (காண்தகு புறவு கார்) கண்ணுக்கு இனிமையாகக் காட்சி தரும் காலமாகவும், (தீம்பெயற் கார்) மிகுந்த ஆரவாரத்துடன் கூடிய மழையைப் பொழியும் காலமாகவும், (கார் கவின் கொண்ட காமர் காலை) மழை பெய்து முடித்து வைகறைப் பொழுதில் அழகினைச் சுமந்து வரும் காலமாகவும், (துணை தரு தண்கார்) பறவையினங்களுக்குத் துணையைத் தருகின்ற குளிர்ச்சி பொருந்திய காலமாகவும், (ஆர்பெயல் உதவிய கார்) பெருமழை பொழியும் காலமாகவும், மழையானது தொடக்க நிலையிலும், இடைப்பட்ட நிலையிலும், முடிவு நிலையிலும் பல உருவில் வந்து பிரிந்தாருக்குத் துன்பம் செய்வதாகவும், சேர்ந்திருப்போருக்கு இன்பம் தருவதாகவும் சங்கப் பாடல்கள் கார்காலம் பற்றிக் கூறுவதைக் காணமுடிகின்றது.

வரகுக்கதிர் விளைந்து விட்டதால், கார்காலத்தின் இறுதிக்காலம் வந்துவிட்டது என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

கார்காலம் நம்பிக்கையைக் கொடுத்து ஏமாற்றுகின்றது. கூதிர்காலம் உயிரைக் கொல்லுகின்ற காலமாக உள்ளது. கார்காலம் நம்பிக்கையில் ஏமாற்றத்தைத் தருகின்றது. பனிக்காலம் கூடுதல் நம்பிக்கையைக் கொடுக்கின்றது. கூதிர்காலம் நம்பிக்கைக்கும், சோர்விற்கும் இடையே ஊசலாடுகின்ற காலமாக அமைகின்றது.

தென்றல், வாடை, கொண்டல், கோடை, எனும் நான்கு வகைக்காற்றுகளில் கோடை தவிர மற்றைய மூன்றும் கூதிர்காலத்தில் வீசுவனவாகும்.

தலைவனைச் சந்திப்பதற்கான காத்திருப்பு தலைவிக்கு இன்பமாகத் தான் இருக்கின்றது. ஆனால் கூதிர்கால வாடைக்காற்றுதான் தலைவியைக் கொல்லுகிறது. வாடையால் வந்த துன்பம் தலைவிக்கு மன வருத்தத்தைத் தருகின்றதே தவிர, தலைவனை நினைத்துக் காத்திருப்பதால் தலைவி சோர்வடையவில்லை.

பனிக்காலத்தில் வயலாகிய இல்லறத்தில் கிளையாகிய உறவுகளோடு மிக்க மகிழ்ச்சியாக இருந்து, பிரிவு என்னும் மழையில் நனைந்து, குளிரின் தாக்கத்தால் நாரை போல நடுங்கிப், பொருளுக்கு முக்கியத்துவம் தரும் தலைவன், தலைவியை ஒரு பொருட்டாக நினைக்காது இருப்பது தலைவிக்கு மன வருத்தம் தருகின்றது.

உலக உயிர்களிடத்து எல்லாம் அன்பாக இருக்கக்கூடிய வாடைக்காற்று, தலைவிக்கு மட்டும் பண்பில்லாத வாடையாக அமைகின்றது.

வாடைக்காற்று, இரவு, மாலைப்பொழுது, மழை இவை நான்கும் சேர்ந்து மாறி மாறி வந்து தலைவிக்கு மிக்க துன்பம் தருகின்றது. இத்தகைய வாடைக்காற்றை கண் இல்லாத வாடை எனத் தலைவி புலம்புதலைக் காண முடிகின்றது.

கார்காலத்தில் வருவேன் என்ற தலைவன், கார்காலம் போய் பனியுடன் கூடிய வாடைக்காற்று வந்தும் தலைவன் வராத காரணத்தினால் அவன் மீது நம்பிக்கையில்லாது தலைவி இருக்கின்றாள். பிரிவு என்பது சாதலுக்கு நிகரான துன்பமாக இருப்பது தலைவியின் வாழ்வில்தான். கூதிர்ப்பருவத்தில் தலைவி அடையும் துன்பத்தைத் தலைவன் அறியவில்லை. கார்ப்பருவ வரவு தலைவன் வருவான் எனும் மகிழ்ச்சியைத் தருகின்றது. கூதிர்கால வரவு துன்பத்துடன் தலைவன் மீது கொண்ட நம்பிக்கையை இழக்கச் செய்கின்றது.

வெண்ணிறமாகப் பூத்திருக்கும் கரும்பின் பூ பனிக்காலத்தின் அடையாளமாக சுட்டப்படுகின்றது. பனிக்காலத்தில் முசுண்டைபூ செங்காந்தள்பூ, பகன்றைப்பூ, அவரைப்பூ, இண்டஞ்செடிபூ, கருவிளம்பூ, தோன்றிப்பூ, ஈங்கைப்பூ, குவளை மலர், பீர்க்கம்பூ, பிடவம்பூ, மூங்கில் பூ, கூதாளஞ் செடி, தாமரை மலர், பாகற்பூ போன்ற மலர்களின் மலர்ச்சியின் காலமாகவும், அன்றில் பறவைகள் கூடுகளில் தன் இணையுடன் உறையும்படியாக வாடைக்காற்று வீசும் காலமாகவும், நள்ளிரவு நேரத்து ஊதைக்காற்று பிரிந்தாரைப் புலம்பச் செய்யும் காலமாகவும், பயிற்றங்காய், பனைமரம், பலாமரம், வெண்குருகு, நாரை, நெற்கதிர்கள் போன்றவை தலைவன், தலைவியின் பிரிவிற்கு பின்புலமாக அமைகின்றன.

முன்பனிக்காலம் நீண்டநாள் காத்திருத்தலின் சோகத்தைத் தருவதாகும். பிரிந்த தலைவன் முன்பனிக் காலத்திலாவது வருவான் எனத் தலைவி நினைப்பது இயல்பு.

வெப்பமும், வெறுமையும் நிறைந்த காலமாக வெயில்காலம் அமைகின்றது. திரும்பிய திசையெல்லாம் கானல் நீர்பட, கருகிய மரஞ்செடி, கொடிகளைத் தலைவன் காணும்போது மனதில் ஒருவித வேதனை உண்டாகின்றது.

இளவேனிற் பருவம் குயில் கூவும் இனிய பருவமாகும். கழுகு யாமரத்தில் கூடுகட்டி குஞ்சுகளை பாதுகாக்கும் காலமாகும். நீர் வேட்கைக்காக யானை மராமரத்து பட்டையை உரித்து தாகம் தீர்த்துக்கொள்ளும் கொடுமையானக் காலமாக உள்ளது.

தளிரின்றி கிடக்கும் மரங்கள், வெப்பத்தால் பிளக்கும் நிலங்கள், வலிமையில்லாதக் கொம்புகளில் பூத்துக்கிடக்கும் முருங்கைப்பூக்கள், நீரின்றி வற்றிய பைஞ்சுனைகள், பிரிந்திருக்கும் தலைவிக்கு பின்புலமாக உள்ளன. இப்பின்புலத்தின் மூலம் தலைவியின் பிரிவுத் துயரைக் காண முடிகின்றது.

இளவேனிற் பருவத்தில் கடத்தற்கரிய பாலைநிலத்தைக் கடந்து சென்ற தலைவனை நினைத்து தலைவி வருந்துவதும், இளவேனிற் பருவம் வந்துவிட்டதே எனத் தலைவன் கலங்குவதும் இருபேரிடத்துமான துன்ப நிகழ்வாக அமைகின்றது.

வெயில்காலத்தில் காடு எவ்வாறு வெறுமையில் இருக்கிறதோ அதுபோல தலைவன் வராமையால் தலைவி வெறுமையில் இருப்பதை அறிய முடிகின்றது.

முதுவேனில் பருவத்தில் வருந்தும் உயிரினங்களும், வாடும் பயிரினங்களும், அப்புலம் விட்டே ஓடும் குடிகள் குறித்தும் கூறப்பட்டுள்ளது. சுரவழியில் பொருளீட்டத் தலைவன் செல்வதை நினைந்து ஒரு தலைவி வருந்துவதும், மற்றொரு தலைவி, தலைவன் பொருளீட்டி வருவான் என்ற நம்பிக்கையில் உறுதியாக இருப்பதும்,

கொடுமையான சுரவழியில் உன்னுடன் வருவேன் எனச் சொல்லத் துடிக்கும் தலைவியின் நிலை பற்றியப் பாடல்களும் காட்டப்படுகின்றன.

வெயில் வறட்சியும், வறுமையும் உடையதாகவும், தலைவிக்கு அவநம்பிக்கையைத் தரும் காலமாகவும் அமைகின்றது. வேனிற்காலம் வாழ்கையில் துன்ப உணர்வினைத் தருகின்றது. தாவரங்களின் வளமை; தலைவிக்கு வெறுமை; பறவைகளின் மகிழ்ச்சி; தலைவிக்கோ மன நெகிழ்ச்சி. மொத்தத்தில் தலைவி அவநம்பிக்கையில் மனம் ஆற்றாது துணையின்றித் துயரப்படுகின்ற காலமாகவே அமைகின்றது.

தலைவன் வராத காரணத்தினால், வெயில்காலத்தில் வரும் கானல் நீர் போல தலைவியின் வாழ்க்கையும் பிரிவுத் துன்பத்தால் பொய்மையாகவே இருக்கின்றது. கொடுமை, வெறுமை, அச்சம், நடுக்கம், பயம், சோகம், துன்பம், துயரம் என இவற்றின் மொத்த உருவமாக தலைவியின் வாழ்க்கை அமைகின்றது.

வயலும் வயல் சார்ந்த நிலப்பகுதியான மருதநிலம் நாகரிக வளர்ச்சிக்கு முதன்மைத் தன்மை உடையதாக அமைகின்றது. விவசாயத்தின் பொருட்டு வளமை அடைந்த நிலம் மருதநிலம். இங்கு தான் சில நேரங்களில் தவறான வாழ்க்கை முறையினைத் தலைவன் பின்பற்றுவதைக் காணமுடிகின்றது.

விடியற் காலைப்பொழுது யாவரும் அயர்ந்து தூங்கும் பொழுது. சில நேரங்களில் தவறுகள் நிகழ்வதற்குரிய பொழுதாகவும் அமைகின்றது. பரத்தையிடம் சென்றவன் விடியற் காலைப்பொழுதில் தம் இல்லம் நோக்கி வரும்பொழுது தலைவன், தலைவியரின் ஊடல் நிகழ்வுக்குக் காரணமான பொழுதாக பகற்பொழுது (விடியல்) அமைகின்றது.

வைகறைப்பொழுது, மக்கள் அனைவரும் இரவில் ஓய்வெடுத்து, அடுத்த நாள் பொழுதிற்கு தயாராகும் மகிழ்ச்சியான பொழுதாகும். ஆனால் தலைவிக்கு அப்பொழுது மிகுந்த துன்பம் தரும் பொழுதாக உள்ளது.

விடியற்காலையில் பரத்தையுடன் இருப்பது, யாரும் அறியாப் பொழுதாக நினைக்கின்ற தலைவன், பரத்தையோடு புனலாடச் செல்லும் பொழுதாக விடியற்காலைப் பொழுது உள்ளது.

தலைவனுடன் செல்லும் போது வெப்பம் மிக்க நண்பகல் பொழுது கூட தலைவிக்கு குளிர்ச்சியாகத் தெரிகின்றது.

மாலைப்பொழுது என்பது மனித உயிர்கள் மட்டுமின்றி பிற உயிரினங்களும் தன் செயலைச் செய்து முடித்து ஓய்வு எடுக்கப் போகும் இரவுப்பொழுதின் தொடக்கமாகும். காலைப்பொழுது கடமையின் ஆரம்பம். மாலைப்பொழுது கடமை முடிந்து இல்லறத்தில் இனிதாக இருக்கும் பொழுது.

மாலைப்பொழுது தலைவிக்கு மயக்கத்தைத் தருகின்றது. ஒவ்வொரு உயிரினமும் தத்தம் கடமைகளை முடித்துவிட்டு வீடு நோக்கி வருகின்ற பொழுது வினைமேற் சென்ற தலைவன் மட்டும் இன்னும் வரவில்லையே? எனத் தலைவியைக் கவலை கொள்ளச் செய்யும் பொழுதாக அமைகின்றது.

மாலைப்பொழுது தலைவனுடன் சேர்ந்து இருக்கும் தலைவிக்கு இனிமை தரும் பொழுதாக உள்ளது. பிரிந்திருக்கும் தலைவிக்கு துணிவைத் தராதப் பொழுதாக அமைந்துள்ளது.

சங்க இலக்கிய அகப்பாடல்களில் தலைவன், தலைவியரின் துன்பத்தை மிகுவிக்கும் மாலைப்பொழுது, (நனைநகு மாலை) அரும்புகள் மலரக்கூடிய பொழுதாகவும், (புன்கண் மாலை) மிகுந்த ஓயாத துன்பம்

தரும் பொழுதாகவும், (புல்லென் மாலை) பொழிவிழந்து இருக்கும் பொழுதாகவும், (புலம்பு கொள் மாலை) தலைவியைப் புலம்பச் செய்கின்ற பொழுதாகவும், (எல்லென் மாலை) சூரியன் மறைந்து பொழிவிழந்து இருக்கும் பொழுதாகவும், (பழங்கண் மாலை) அறுந்துன்பம் தரக்கூடிய மாலைப்பொழுது பிரிந்திருக்கும் தலைவிக்கு பெருந்துயரம் தரும் பொழுதாக அமைகின்றது.

அச்சம் தரக்கூடிய இரவுப்பொழுது. கொடூரமான விலங்குகள் (பாம்பு, சிங்கம், புலி, கரடி, யானை, காட்டுப்பன்றி, நரி, நாய், குரங்கு) உலவுகின்ற பொழுது. தலைவன் செல்லுகின்ற வழி தெரியாத இரவுப் பொழுது. பிற பெண்களால் தலைவி பழிச்சொல்லுக்கு ஆளாகக்கூடிய பொழுதாக அமைகின்றது. தலைவன் வரும் வழியில் அச்சம் தருகின்ற, பிற உயிரினங்களால் தலைவனுக்கு ஏதேனும் ஏதம் நிகழ்ந்திடுமோ என தலைவி அச்சம் கொள்ளும் இரவுப்பொழுதாக உள்ளது.

மழைக்காலத்து இரவுப்பொழுது தலைவனுக்கு வழி தெரியாத மயக்கத்தைத் தருகின்ற இரவுப்பொழுதாக உள்ளது.

இருள் நிறைந்த பாதையில் தலைவியைத் தேடி வரும் தலைவன். தன் வாழ்க்கை இருளாகி போகுமோ? எனத் துடிக்கும் தலைவி. இவ்வாறு அச்சம், துன்பம், மனவேதனை, நிம்மதியின்மை என்ற நிலையில் வாழ்க்கை ஒரு போராட்டமாகவே உள்ள நிலையைக் காணமுடிகின்றது.

களவின்பத்திலேயே பகலும், இரவும் என மாறி மாறி வருவது ஆண்மகனாகிய தலைவனுக்கு ஒன்றும் நேராது. பெண்ணாகிய தலைவிக்கு அலர்தூற்றும் பெண்களின் பழிச்சொற்கள் வேதனையைத் தருகின்றது. இருவரும் வெவ்வேறு வகையில் துன்ப வாழ்க்கை வாழ்வதை விட்டுவிட்டு இணைந்து இன்பமான வாழ்க்கை வாழ்வதே சிறப்பானது என்று தோழி விரும்புவதைக் காணமுடிகின்றது.

மொத்தத்தில் அச்சம் தரும் இரவாக, பாம்பின் வலிமை அறியும் இரவாக, மன்னுயிர் மடிந்த இரவாக, துளி துளியாய் மழை பொழிந்த இரவாக, மின்னல் மின்னி இடியும் பெருமழை பெய்யும் இரவாக, விலங்குகளும் பறவைகளும் இரை தேடச் செல்லும் இரவாக, கொடுமை மிகுந்த இரவாக, ஆற்றாமை மிகுந்த இரவாக, பிரிந்தாரைக் கொல்லும் இரவாக அமைகிறது. உடலால் மட்டுமின்றி உள்ளத்தாலும் தாக்கத்தையும், ஏக்கத்தையும் உண்டாக்கும் பொழுதாக இரவுப்பொழுது உள்ளது.

உயிரினங்கள் ஒடுங்கிக் கிடக்கும் நள்ளிரவு. பிரிந்தோர் உயிரைக் கொல்லும் இரவு. இத்தகுபொழுதிலும் தலைவியைக் காணவரும் தலைவன், தலைவி மீது கொண்ட காதலால் கொடிய விலங்குகள் வந்து தாக்கும் என்பதனை உணராது, தலைவியையே நினைந்து வரும் தலைவன், ஒரு போதும் தலைவியை கைவிட மாட்டான் என்பதற்கு இரவுப்பொழுதில் தலைவன் வரவே ஒரு சான்றாக அமைகின்றது.

இரவுப்பொழுது காதலுக்கு உரம் சேர்க்கிறது. தலைவனுக்கு வீரத்தைத் தருகின்றது. இரவுத்தனிமை உளவியல் நிலையில் பின்னடைவை ஏற்படத்தவில்லை; மாறாக காதலன்பை வளர்க்கிறது என்பது புலனாகின்றது.

மொத்தத்தில் எல்லாப் பருவங்களும் தலைவன், தலைவி இருவருக்கும் அதிகமாக துன்பம் தரும் பொழுதாகவே அமைகின்றது என்பதனை உணர முடிகின்றது.

## துணை நூற்பட்டியல்

### துணைமை ஆதாரங்கள்


1. அறவாணன். க.ப : அற்றை நாள் காதலும் வீரமும் பாரிநிலையம், சென்னை – 1978

2. இராகவையங்கார். மு : தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி, மு.ரா.நாராயண ஐயங்கார் மானாமதுரை – 1960

3. இராசா. கி : இலக்கிய வகைமை ஒப்பாய்வு, பார்த்திபன் பதிப்பகம் மதுரை – 1997

4. இராசமாணிக்கனார். மா : இலக்கிய ஓவியங்கள், பாரிநிலையம், சென்னை – 1979

5. இராமகிருட்டிணன். ஆ : அகத்திணை மாந்தர்- ஓர் ஆய்வு சர்வோதய இலக்கிய பண்ணை மதுரை – 1969

6. இளம்பூரணர், (உ.ஆ) : தொல்காப்பியம், பொருளதிகாரம் கழக வெளியீடு, சென்னை – 1969

7. கலியாண சுந்தரம், தெ : சங்க அகப்பாடல்களில் உணர்வுப் போராட்டம், வாணி பதிப்பகம், கோவை – 1992

8. ஜமாலன், : மொழியும் நிலமும், புதுமலர் பதிப்பகம், 176/10 வைகை தெரு, ஈரோடு – 2003

9. சரளா ராசகோபாலன் : சங்க இலக்கியம் (அகம்)
ஒலிப்பதிப்பகம்,
சென்னை – 1988

10. சாம்பசிவனார். சு : தமிழா இதோ உன் புதையல்,
நாவலர் புத்தக நிலையம்,
மதுரை – 1998

11. சிதம்பரநாதன். அ : முன்பனிக் காலம்,
பழனியப்பா பிரதர்ஸ்
மதுரை – 1998

12. சுப்பு ரெட்டியார். நா : அகத்திணைக் கொள்கைகள்,
பாரி நிலையம்,
சென்னை – 1998

13. தண்டாயுதம். இரா : சங்க இலக்கியம்(எட்டுத்தொகை)
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை – 1978

14. தமிழண்ணல் : சங்கமரபு,
(கு.வெ.பாலசுப்பிரமணியன்,
தமிழாக்கம்)
வெளியீடு சந்தாமணி பதிப்பகம்,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை – 2009

15. திருவள்ளுவர் : திருக்குறள்
(புலவர் நாக சண்முகம் (மூ.உ),
குமரன் பதிப்பகம்
சென்னை – 1999

16. பானுநூர்மைதீன். வா.சா : பழந்தமிழ் அகப்பாடல்களில்
நிலமும் பொழுதும்,
பர்வீன் பதிப்பகம்,
திருச்சி – 1993

17. பாஸ்கரதாஸ். ஈகோ : மானிட மதிப்புகள்,
கழக வெளியீடு
சென்னை – 1997

18. மணிவேல். மு : தமிழ் இலக்கிய அகப்பொருள் மரபுகள்
செல்லப்பா பதிப்பகம்,
மதுரை – 2009

19. மாதையன். பே : அகத்திணைக் கோட்பாடும், சங்க அகக்கவிதை மரவும்,
பாவை பப்ளிகேஷன்ஸ்,
சென்னை – 2009

20. மாணிக்கனார். வ.சுப : தமிழ்க் காதல்,
பாரி நிலையம்,
சென்னை – 1962

21. மாணிக்கவாசகன். ஞா : சிலப்பதிகாரம்
உமா பதிப்பகம்,
சென்னை – 2005

22. மாயாண்டி. இரா : சங்க இலக்கியத்தில் கற்பனை,
எழிலகம்,
சென்னை – 1980

23. முத்துக் கண்ணப்பன்.தி : சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம்
அவ்வை அகம்,
சென்னை – 1978

24. வரதராசன். மு : பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை,
பாரி நிலையம்,
சென்னை – 1979

25. வரதராசன். மு : ஓவச் செய்தி,
பாரி நிலையம்,
சென்னை – 1983

26. வெள்ளை வாரணம். க : தொல்காப்பியம், பொருளதிகாரம்
நச்சினார்க்கினியர் உரை,
கழகப் பதிப்பு
மதுரை – 1961

**ஆய்வுக் கட்டுரைகள்**

27. கணேசையர், சி : சிறுபொழுது
செந்தமிழ்ச் செல்வி
சிலம்பு – 26
மதுரை – 1927

28. செல்வராசு, அ : ஆண் ஆளுமையில்
பெண் கற்பு,
எழில் பதிப்பகம்,
திருச்சி – 2003

29. நடராசன், தி : வையை முதல் மலர்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 1974

30. விஸ்வநாத சாஸ்திரி,கே.எஸ் : செந்தமிழ்ச் செல்வி
சிலம்பு – 32
மதுரை – 1935

31. வீரபாகுப்பிள்ளை, சி : செந்தமிழ்ச் செல்வி
சிலம்பு – 29
மதுரை – 1931

**எம்.ஃ.பில் பட்ட ஆய்வேடு**

32. சித்ராதேவி, மு : சுற்றுச்சூழல் நோக்கில்
அகநானூறு,
மதுரை காமராசர் பல்கலைக்
கழகம், மதுரை – 2014

**முனைவர் பட்ட (பி.ஹெச்.டி) ஆய்வேடு**

33. ஆனி லெட்பாமி. வி : சங்க அகப்பாடல்களின் அடிக்கருத்துக்கள், மதுரை காமராசர் பல்கலைக் கழகம் மதுரை – 1992

34. காளிமுத்து. கா : தொல்காப்பிய இலக்கியக் கொள்கைகளும்,குறுந்தொகையும் மதுரை காமராசர் பல்கலைக் கழகம் மதுரை – 1981

35. செல்லத்தாய். கெ : சங்கப்பாடல்களில் காலநிகழ்வும் காதல் வாழ்க்கையும், மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை – 2006

**சொற்பொழிவு நூல்கள்**

36. அகநானூற்றுச் சொற்பொழிவுகள் : திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை – 1969

37. குறுந்தொகைச் சொற்பொழிவுகள் : கழக வெளியீடு சென்னை – 1957

38. நற்றிணைச் சொற்பொழிவுகள் : கழக வெளியீடு சென்னை – 1957

**அகராதிகள்**

39. இன்னாசி. சூ : சதுரகராதி ஆராய்ச்சி மதுரை காமராசர் பல்கலைக் கழகம் மதுரை – 1976

40. க்ரியா : க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி சென்னை – 2000

41. கதிர்வேற்பிள்ளை : தமிழ்ப் பேரகராதி, சாரதா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு – 2003

42. கழகப்புலவர் குழுவினர் (தொ.ஆ) : கழகத்தமிழ் அகராதி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் திருநெல்வேலி – 1985

43. குமாரசுவாமிப்பிள்ளை.ஆ (தொ.ஆ) : இலக்கியச் சொல்லகராதி சந்தியா பதிப்பகம், சென்னை மறுபதிப்பு – 2009

44. சச்சிதானந்தன் : மேலைஇலக்கியச் சொல்லகராதி மாக்மில்லன் இந்தியன் பிரஸ் முதற்பதிப்பு – 1993

45. சிங்காரவேலு முதலியார்(பதி) : ஆக்ஸ்போர்டு அகராதி ஆசிய கல்வி நிறுவனம், புதுதில்லி – 1983

46. …………………… கழக தமிழ் அகராதி கழக வெளியீடு சென்னை – 1974

47. Burrow. T : Drawidian Etmymological Dictionary Oxford University Press London – 1966

48. …………………….. Tamil Lexicon Universit of Madras – 1931


**நிகண்டுகள்**


49. சொக்கலிங்கம், க : ஆசிரிய நிகண்டு, தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின் சரசுவதி மஹால் நூல் நிலையம் சென்னை – 1975

50. சேந்தன் திவாகரன் : திவாகர நிகண்டு
கழக வெளியீடு,
சென்னை – 1958

51. பிங்கல முனிவர் : பிங்கல நிகண்டு,
கழக வெளியீடு
சென்னை – 1968

**கலைக் களஞ்சியங்கள்**

52 பெரியசாமித்துாரன், ம.பா : கலைக் களஞ்சியம்,
தொகுதி எட்டு,
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னை – 1961

53. பரிமணம்,அ.மா.(ப.ஆ) : வாழ்வியற் களஞ்சியம்,
தொகுதி நான்கு
தமிழ் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் - 2003

54. ------------------------------ : தமிழிசைக் கலைக் களஞ்சியம்
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னை – 1968

55. ------------------------------ : வாழ்வியற் களஞ்சியம்,
தொகுதி ஆறு
தமிழ் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் - 2003

56. David Crystal : The Cambridge Encyclopedia
Cambridge University Press
England – 1994

**ஆங்கில நூல்கள்**

57. Akalkar, V.V : Social Psychology
Asia Publishing Company,
Bombay – 1960

58. Arthur Schopenhouar : The world as will and idea,
Rout ledge and kegan Paul Ltd,
London – 1948

59. Barry Peter : Peter Barry, Beginning, Theory Viva Books. New Delhi – 2010

60. Betrand Russell : Marriage and Morals Unwin Books, London – 1972

61. George Hart : The Poems of Ancient Tamil Their Milieu and their Sanskrit Coundterparts, Berkeley, University of California Press 1975

62. Kailasapathy, K : Tamil Heroic Poetry Oxford at the Clarendon Press London – 1968

63. Kamil Zvelebil : Tamil Poetry 2000 Yerar ago, New Orient Bi-Monthly, Tamil Culture, Volume – 10 Chennai – 1960

64. Martha Ann selby : The Circle of Six Season's A Selection from Old Tamil, Prakrit and Sanskri Poetry, Penguin Books – 2003

65. Ramanujam, A.K : The Interior Landscape Love poems fromk a classical Tamil Antholoigy, Bloominglon Indiana University Press – 1967

66. Sirinivasa Aiyengar, M : Tamil Studies or Essas on the History of the Tamil People, Landugage, Religion and Literature Guardian Press – 1914

67. Sivaraja Pillai, K.N : The Chronology of Early Tamils University of Madras – 1932

68. Takanobu Takakashi : Tamil Love Poetry and Poetics Leiden, E.J. Brill – 1955

69. Thaninayagam Xaviers : Landscape and Poetry, Asia Publishing House New Delhi – 1966

## பின்னிணைப்பு
## காலம் குறித்தப் பாடல்கள்

**1) கார்காலம் (அகம்)**

**தலைவி கூற்று** : 23, 58, 72, 74, 139, 184, 194, 217, 314, 364 **(10)**

**தலைவன் கூற்று**

நெஞ்சிற்கு கூறல் : 24, 43, 84, 164, 174, 214

தேர்ப்பாகனிடம் கூறல்: 34, 54, 64, 94, 114, 124, 134, 144, 154, 204, 224, 234, 244, 334, 374

**(21)**

**தோழி கூற்று** : 4, 42, 73, 85, 104, 132, 184, 323, 394 **(9)**

**2) பனிக்காலம் (அகம்)**

**தலைவி கூற்று** : 58, 163, 183, 205, 217, 235, 243, 255, 264, 273, 294, 378 **(12)**

**தலைவன் கூற்று**

நெஞ்சிற்கு கூறல் : 24, 163, 258, 337, 339 **(5)**

**தோழி கூற்று** : 13, 60, 78, 96, 125, 178, 305, 357 **(8)**

(கலி) : 31 **(1)**

**3) வெயில்காலம் (அகம்)**

**தலைவி கூற்று** : 1, 11, 31, 37, 45, 97, 101,135, 185, 187, 229, 241, 293, 333, 341,355, 389, 391, 395 **(19)**

**தலைவன் கூற்று**

| | | |
|---|---|---|
| நெஞ்சிற்கு கூறல் : | 5, 21, 41, 51, 77, 121, 169, 225, 257, 261, 287, 327, 335, 343, 351, 353, 377, 381 | **(18)** |
| **தோழி கூற்று** : | 25, 37, 69, 91, 101. 173, 187, 201, 211, 213, 233, 237, 277, 285, 293, 295, 393, 399 | **(18)** |
| **செவிலி-நற்றாய் கூற்று** | 63, 105, 153, 189, 219, 397 | **(6)** |
| **(கலி) :** | 7, 10, 20, 26, 27, 28, 29, 30, 31, 32, 33, 35. 36 | **(13)** |

**4) பகற்பொழுது (அகம்)**

| | | |
|---|---|---|
| **தலைவி கூற்று** : | 36, 74, 126, 139, 157, 183, 194, 196, 290, 303 | **(10)** |
| **தலைவன் கூற்று :** | 24, 41, 57, 86, 87, 124, 224, 245, 257, 287, 289, 304, 374 | **(13)** |
| **தோழி கூற்று** : | 18, 37, 42, 85, 100, 107, 150, 156, 160, 178, 226, 228, 229, 244, 308, 370, 386 | **(17)** |

**5) மாலைப்பொழுது (அகம்)**

| | | |
|---|---|---|
| **தலைவி கூற்று** : | 40, 74, 183, 235, 264, 298, 303, 325, 364, 367, 378 | **(11)** |
| **(கலி) :** | 118 | **(1)** |

**தலைவன் கூற்று :**

நெஞ்சிற்கு கூறல் : 47, 77, 169, 199, 237, 239, 289, 297, 365, 373

தேர்ப்பாகனிடம் கூறல் 9, 54, 64, 114, 124, 204, 234 **(17)**

**தோழி கூற்று** : 71, 104, 148, 150, 184, 259, 301, 360 **(8)**

**6) இரவுப்பொழுது (அகம்)**

**தலைவி கூற்று** : 8, 22, 26, 58, 72, 102, 128, 138, 252, 260, 328 **(11)**

**தலைவன் கூற்று :** 57, 62, 94, 142, 152, 162, 198, 258, 322 **(9)**

**தோழி கூற்று** : 2, 18, 22, 38, 49, 50, 68, 72, 80, 92, 112, 118, 158, 168, 182, 188, 192, 202, 218, 222, 228, 240, 248, 272, 278, 312, 318, 360, 362, 370, 392 **(31)**

# சங்க அக இலக்கியங்களில்
# பருவங்களும் மாந்தர் செயல்களும்

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திற்கான முனைவர் (பிஎச்.டி)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**மு.சித்ரா தேவி** எம்.ஏ., எம்.எட்., எம்.பில்.,

பதிவு எண்: P 4194

ஆய்வு நெறியாளர்

முனைவர் **கெ.செல்லத்தாய்**, எம்.ஏ. எம்.பில்., பிஎச்.டி

துறைத் தலைவர் & இணைப் பேராசிரியர்






## தமிழியற்புலம்

## மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

(ஆற்றல்சார் பல்கலைக் கழகம்)

மதுரை - 625 021


மார்ச் - 2020

**முனைவர் கெ. செல்லத்தாய்** எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி
துறைத் தலைவர் & இணைப் பேராசிரியர்
எஸ்.பி.கே. கல்லூரி
அருப்புக்கோட்டை- 626 101.

## ஆய்வு நெறியாளர் சான்றிதழ்

மதுரை காமராசர் பல்கலைக் கழக தமிழ்த்துறையில் பகுதி நேர ஆய்வாளராக மதுரை காமராசர் பல்கலைக் கழத்தில் முனைவர் பட்ட ஆய்விற்காக **"சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்"** எனும் தலைப்பில் தன்னியலாக ஆய்வு செய்து ஆய்வேட்டினை அளித்துள்ளார். இந்த ஆய்வேடு இதற்கு முன்பு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்று சான்றளிக்கிறேன்.

**ஆய்வு நெறியாளர் கையொப்பம்**

**(முனைவர் கெ.செல்லத்தாய்)**

**இடம் : மதுரை**

**நாள் :**

**திருமதி. மு.சித்ரா தேவி எம்.ஏ., எம்.எட்., எம்.பில்.,**
பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை-625 021.

## ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்"** எனும் தலைப்பில் முனைவர் பட்டம் பெறுவதற்காக மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெற்ற இந்த ஆய்வேடு சொந்த முயற்சியில் உருவாக்கப்பெற்றதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப்பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

**ஆய்வாளர் கையொப்பம்**

**(மு.சித்ரா தேவி)**

**இடம் : மதுரை**
**நாள் :**

## நன்றியுரை

**"சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்"** எனும் பொருண்மையில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு அனுமதி அளித்த மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணை வேந்தர் மற்றும் ஆட்சி குழுவினர் அனைவருக்கும் என் நன்றியை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் கல்விப் பணிக்கும் ஆய்வுப் பணிக்கும் வாய்ப்பு வழங்கிய மதுரை காமராசர் பல்கலைக்கழக உறுப்புக் கல்லூரிக்கு என்றென்றும் நன்றியுடையேன்.

தமிழாய்வுத் துறையில் ஆய்வை மேற்கொள்ள வாய்ப்பளித்த கல்லூரி மேனாள் முதல்வர் முனைவர் **வெ.மகேந்திரன்** அவர்களுக்கும், இந்நாள் முதல்வர் முனைவர் **ம.முத்துக்குமார்** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வின் தொடக்கம் முதல் நிறைவு வரை அனைத்துப் பணிகளிலும் இன்முகத்தோடும் மன மகிழ்ச்சியோடும், விந்தோம்பல் பண்போடும் என்னை வழி நடத்தியதோடு என்னுடைய பல்வேறு செயல்பாடுகளுக்கு உறுதுணையாக இருந்திடும் என் ஆய்வு நெறியாளர் எஸ்.பி.கே.கல்லூரி தமிழ்த்துறை தலைவர் பேராசிரியர் முனைவர் **கெ.செல்லத்தாய்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

ஆய்வை குறித்த காலத்தில் நன்கு முடிக்க ஆர்வம் கொடுத்த பேராசிரியர் முனைவர் **து.வெள்ளைச்சாமி** அவர்களுக்கும், என் உடன்பிறவா சகோதரர்கள் **ரா.குருநாதன்,** முனைவர் **ஆ.முனியாண்டி** அவர்களுக்கும், என் நண்பர்கள் பேரா.முனைவர்.**வீ.முருகானந்தம்,** முனைவர் **மணி** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

நட்பு என்ற முறையில் தோளோடு தோள் கொடுத்து உதவிய தோழிகள் **பேரா.காயத்ரி, பேரா.அனீஸ்ரீ, பேரா.செல்வி, பேரா.முருகஜோதி, பேரா.முத்துமாரி, பேரா.ராஜலட்சுமி** அவர்களுக்கும், என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கல்விப் பணியிலும் ஆய்வுப் பணியிலும் நான் ஈடுபட முழுமுதற் காரணமாக விளங்கிய எனது தந்தையார் திருமிகு.**சி.முருகன்** (த.மி.வா) அவர்களுக்கும், தாயார் திருமதி. **தங்கமணி** அவர்களுக்கும், எனது இரண்டாவது பெற்றோரான மாமா மூத்த வழக்கறிஞர் திருமிகு.**க.பால்ராஜ் பி.ஏ.,பி.எல்.,** அவர்களுக்கும், அத்தை திருமதி.**பா.முனியம்மாள் பி.எஸ்.சி.,** அவர்களுக்கும் திருமிகு.**க.ராமகிருஷ்ணன்** -திருமதி.**ரா.மாரியம்மாள்** அவர்களுக்கும் எனது உடன்பிறந்த சகோதரர் **மு.மணிகண்டராஜா பி.இ** அவர்களுக்கும், அவரது துணைவியார் **ம.உமாமகேஸ்வரி பி.பார்ம்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

என் வாழ்வின் உயர்வுக்கு உற்ற துணையாய், முனைவர் பட்ட ஆய்வில் முனைந்து செயல்பட வைத்து, இவ்வாய்வுப் பணியில் ஈடுபட்ட காலங்களில் ஏற்பட்ட இன்னல்களில் என்னோடு உறுதுணையாக இருந்து என் வளர்ச்சிக்குப் பெரும்பங்கு வகித்து எல்லாவகையிலும் என்னுடன் பங்கேற்று உதவி வருகிற என் கணவர் திரு. **க.பா.ராஜேஷ் கண்ணன் எம்.ஏ., பி.எல்.**, அவர்களுக்கும் எனது அன்புக்கண்மணிகள் **கரிஷ்மா ராஜேஷ், பா.ரா.ஹரிகரபாலன், மு.அமுதரசி** ஆகியோர்களுக்கும் என் உள்ளார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எனது ஆய்விற்குத் தேவையான நூல்களைத் தேடி எடுத்துத் தந்துதவிய **பேரா.முனைவர் ம.பெரியசாமி** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களைக் கொடுத்துதவிய மதுரை காமராசர் பல்கலைக் கழக நூலகம், மற்றும் பல்வேறு நூலகத்திற்க்கும் அதில் பணியாற்றி வருகிற அனைத்து நூலகர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

எனது ஆய்வேட்டினைச் சிறப்பாக கணினியில் தட்டச்சு செய்து கொடுத்த சாத்துார் **கே.பி.ஆர் கணினி உலக** நிறுவனத்தார்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

(மு.சித்ரா தேவி)
(ஆய்வாளர்)

**சுருக்கக் குறியீட்டு விளக்கம்**

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| இளம் | - | இளம்பூரணர் |
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| உ.வே.சா | - | உ.வே.சாமிநாதையர் |
| கலி | - | கலித்தொகை |
| தொல் | - | தொல்காப்பியம் |
| தொ. ஆ | - | தொகுப்பு ஆசிரியர் |
| நச் | - | நச்சினார்க்கினியர் |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| பேரா | - | பேராசிரியர் |
| பொருள் | - | பொருளதிகாரம் |
| மு.நூ | - | முற்காட்டிய நூல் |
| மொ.பெ.ஆ | - | மொழி பெயர்ப்பு ஆசிரியர் |
| வ.எண் | - | வரிசை எண் |
| N | - | Number |
| P | - | Page |
| PP | - | Pages |

## உள்ளுரை

# முன்னுரை

## ஆய்வுப் பொருள்

**“சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்”** என்னும் பொருளில் இவ்ஆய்வு அமைகின்றது. இவ்ஆய்வு, சங்கத்தொகை நூல்களான அகநானூறு, கலித்தொகை ஆகியவற்றில் அமைந்த பாடல்களின் உள்ளடக்கச் செய்திகளையும், அடிக் கருத்துக்களையும் காலப் பின்னணியில் விளக்கம் செய்வதாக அமைகின்றது. மேலும் அப்பாடல்களில் அமைந்த முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் ஆகிய இம்மூன்றும் இவ் ஆய்வில் ஒப்பு நோக்கப்படுகின்றன.

## ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியங்கள் மனித வாழ்வின் பல்வேறு தளங்களையும், சூழல்களையும் எடுத்துக்காட்டும் காலக் கண்ணாடியாக விளங்குகின்றன. ஐந்திணை ஒழுக்கங்களையும், பண்டையக் காலப் பண்பாட்டுச் சிறப்புக்களையும் பல அரிய வாழ்வியல் மெய்மைச் சிந்தனைகளையும் விளக்குகின்றன. தமிழ் மக்களின் நாகரிகம் பற்றி அறிய விரும்புவோருக்குச் சான்றாதாரமாக, செய்தி ஊற்றாக அமைவது சங்க இலக்கியங்கள் ஆகும். பழந்தமிழரின் வாழ்வில் இயற்கை பின்னிப் பிணைந்துள்ளன. சங்க இலக்கியத்தின் எச்சமாக இயற்கையை இன்று போற்றுதல் ஒவ்வொரு தனிமனிதனின் கடமை ஆகும். சங்க இலக்கியங்கள் வழி அறியலாகும் பருவங்களையும், அப்பருவங்களில் தமிழர் தம் களவு, கற்பு ஆகிய அகத்திணை ஒழுக்கங்களை இத்தொகை நூல்கள் வெளிப்படுத்துகின்றன. பருவநிகழ்வுகள் காதலர்களின் ஒழுக்க நிகழ்வுகளுக்கும், உணர்வுகளுக்கும், பின்புலமாக அமைகின்றமையையும் இந்நூற்பாடல்கள் புலப்படுத்துகின்றன. அவற்றை எடுத்துக்காட்டி விளக்குவதே இவ்ஆய்வு நோக்கமாகக் கொண்டுள்ளது.

**ஆய்வு தலைப்பு**

**“சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்”** என்பதே ஆய்வுத் தலைப்பாக அமைகின்றது.

**கருதுகோள்**

சங்க இலக்கிய நூல்களான அகநானூறு, கலித்தொகையில் பண்டையத் தமிழ் மக்களின் காதல், வீரம் சார்ந்த நிகழ்வுகளையும், பருவ நிகழ்வுகளையும், பருவ நிகழ்வுகளை பின்புலமாக கொண்டு வாழ்ந்த சங்க கால மக்களின் வாழ்க்கை முறைகளையும், சமுதாய நிகழ்வுகளையும் உள்ளடக்கமாகக் கொண்டு அமைந்துள்ளன. அவற்றை நுணுகி ஆராய்ந்து கண்டறிந்து புலப்படுத்துவது இவ் ஆய்வின் கருதுகோள் ஆகும்.

**ஆய்வு அணுகுமுறைகள்**

இலக்கியங்களை ஆய்வு செய்யப் பல்வேறு அணுகுமுறைகளை ஆய்வாளர்கள் பயன்படுத்துவதுண்டு. இவ்ஆய்வு உள்ளடக்கப் பகுப்புமுறைத் திறனாய்வாக (Content Analysis) அமைகின்றது. இவ் ஆய்வில் விளக்க முறைத் திறனாய்வும் (Descriptive Criticisn), பகுப்புமுறைத் திறனாய்வும்(Analytical Criticism) பின்பற்றப்பட்டுள்ளன. தேவையான இடங்களில் உளவியல் அணுகுமுறையும் (Psychological Approach), ஒப்பியல் அணுகுமுறையும் (Comparative Approach) பின்பற்றப்பட்டுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள்**

அறிஞர் வ.சு.ப மாணிக்கம் தம் ‘தமிழ்க் காதல்’ நூலில் சங்க அகப்பாடல்கள் அனைத்தையும் ஒரு சேர நோக்கித் தமிழ் அகமரபுகளை

விளக்கம் செய்திருக்கிறார். அறிஞர்கள் சிலர் சங்க அகநூற்பாடல்களைத் தனித்தும், அகத்திணைகளின் அடிப்படையில் சங்கப்பாடல்களைத் தொகுத்தும், அப்பாடல்களில் காணலாகும் முதல், கரு, உரிப்பொருள்களை ஆராய்ந்திருக்கின்றனர். தொல்காப்பியப் பொருளதிகார இலக்கியக் கொள்கைகளின் அடிப்படையில் சங்க அகப்பாடல்களின் தொகை நூல்களைச் சிலர் ஆராய்ந்திருக்கின்றனர். 'பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை' தொடர்பான அறிஞர் மு.வரதராசன் மற்றும் அறிஞர் தனிநாயக அடிகளார் ஆகியோரின் நூல்களும், 'சங்க இலக்கியத்தில் மரபும் திறனும்' குறித்த அறிஞர் தமிழண்ணல் அவர்களின் நூலும் சங்க இலக்கிய ஆய்வில் சிறந்தனவாகக் குறிக்கத்தக்கன. சங்க இலக்கியத்தில் நிலம் பற்றியும், காலம் பற்றியும் 'பழந்தமிழ் அகப்பாடல்களில் நிலமும் பொழுதும்' தொடர்பாக பானு நூர்மைதீன் அவர்களால் எழுதப்பட்ட நூல்கள் மற்றும் 'சங்கப் பாடல்களில் கால நிகழ்வும் காதல் வாழ்க்கையும்' என்னும் முனைவர் பட்ட ஆய்வும், வழிகாட்டுதலாக இன்னும் சில நூல்களும், ஆய்வேடுகளும் எடுத்துக்கொள்ளபட்டது.

## ஆய்வு எல்லை

எட்டுத் தொகை அகநூல்களில் குறிப்பிடத்தக்க நூலான **"அகநானூறு, கலித்தொகை"** மட்டுமே ஆய்வு எல்லைக்கு உட்படுத்தப்படுகின்றது.

## முதன்மைச் சான்று

எட்டுத்தொகை அகநூல்களான அகநானூறு, கலித்தொகையில் கடவுள் வாழ்த்து நீங்கலாக (549) ஐநூற்று நாற்பத்து ஒன்பது பாடல்கள் முதன்மை ஆதாரமாக அமைகின்றன.

**துணைமைச் சான்று**

இவ்ஆய்வு தொடர்பான ஆய்வேடுகள், திறனாய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், சொற்பொழிவுகள், விளக்கவுரை நூல்கள், இலக்கிய வரலாற்று நூல்கள், அகராதிகள், கலைக் களஞ்சியங்கள், ஆராய்ச்சிக் குறிப்புகள், அறிஞர்களின் ஆராய்ச்சி முன்னுரைகள் ஆகியன இவ்ஆய்விற்குத் துணைமை ஆதாரங்களாகக் அமைகின்றன.

**ஆய்வின் அமைப்பும் பகுப்பும்**

**“சங்க அகஇலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்”** என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு முன்னுரை மற்றும் முடிவுரை நீங்கலாகக் கீழ்க்காணும் ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டு ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

ஆய்வு முன்னுரை

1. கார்காலமும் மாந்தர்கள் நிலையும்
2. பனிக்காலமும் மாந்தர்கள் நிலையும்
3. வெயில்காலமும் மாந்தர்கள் நிலையும்
4. பகற்பொழுதும் மாந்தர்கள் நிலையும்
5. மாலைப்பொழுதும் மாந்தர்கள் நிலையும்
6. இரவுப்பொழுதும் மாந்தர்கள் நிலையும்

ஆய்வு முடிவுரை

**“ஆய்வு முன்னுரையில்”** ஆய்வுப் பொருள், ஆய்வு நோக்கம், ஆய்வு தலைப்பு, கருதுகோள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லை, முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள், ஆய்வின் அமைப்பும் மற்றும் பகுப்புகள் குறித்து விளக்குவதாக அமைக்கப்பட்டுள்ளன.

**“கார்காலமும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் முதலாம் இயலில் கார்கால நிகழ்வு, தலைவன் தலைவியர் சேர்ந்திருத்தலின் மகிழ்வு, கார்காலத்தில் தலைவியின் பிரிவாற்றாமை, மயில் அகவும் கார்காலம், தண் பெயல் பொழிந்த காலம், கார் பயம் பொழிந்த நீர்திகழ் காலை, ஈன்று நாள் உலந்த வாலா வெண்மழை, ஏறுடைப் பெருமழை, தலைவி தன்னைத்தானே ஆற்றவித்தல், பஞ்சியின் வெண்மழை, பெய்து புறந் தந்த பொங்கல் வெண்மழை, தலைவியைத் தோழி ஆற்றுவித்தல், தலைவனின் பாசறைப் புலம்பல், பாசறைக்கண் மாலைப்பொழுதில் மழை, கமஞ்சூல் மாமழை, காண்தகு புறவு கார், தீம்பெயற் கார், படு மலைப்பொழிவு, கார்கவின் கொண்ட காமர் காலை, தேர்ப்பாகனுக்குத் தலைவன் தன் ஆற்றாமை கூறுதல், தேரை விரைந்து செலுத்த வேண்டுதல், தன் வரவைத் தலைவிக்குக் கூறச் சொல்லுதல், கார் கண்டு தேரைச் செலுத்தச் சொல்லுதல், தேர்ப்பாகன் ஆற்றுவித்தல், துணை தரு தண் கார், ஆர்பெயல் உதவிய கார் என்ற நிலைகளில் அகநானூறு, கலித்தொகை பாடல்களில் காணலாகும் கார்கால நிகழ்வுச் செய்திகள் விரிவாகவும் விளக்கமாகவும் ஆராயப்பெற்றுள்ளன.

**“பனிக்காலமும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் இரண்டாம் இயலில், பனிக்கால நிகழ்வும், அந்நிகழ்வில் தலைவன், தலைவியர் நிலை, தலைவியின் ஆற்றாமை, பனிகடி கொண்ட பண்புஇல் வாடை, கடிதுவந்து இறுத்த கண்இல் வாடை, அறன் இன்று அலைக்கும் ஆனா வாடை, கோடைப் பூளையின் வாடை, தலைவன் நெஞ்சிற்குக் கூறிப் பிரிவு விலக்கல், புலம்போடு வந்த பொழுது கொள் வாடை, தளிமழை பொழிந்த தண்வரல் வாடை, தலைவன் பிரிவை அறியும் தலைவியின் நிலை, தலைவனின் பாசறைப் புலம்பல், தலைவன் வரைவு நீடித்த காலத்து தலைவியின் நிலை, சிதர் சினை தூங்கும் அற்சிரம், புலம் புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம், வடந்தை தூக்கும் வருபனி அற்சிரம், வயங்கு கதிர் கரந்த வாடை வைகறை, வாடை தூக்கும் வருபனி

அற்சிரம், தோழி ஆற்றுவித்தல், தோழி, தலைவன் வரைவுரைத்தல் ஆகியன குறித்த செய்திகளும் எடுத்துக்காட்டப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

**“வெயில்காலமும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் மூன்றாம் இயலில் இளவேனில் இயல்பு, அழல் போன்ற வெங்கதிர், நெருப்பு எனச் சிவந்த உருப்பு, அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில், பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிறு, பகல் செய் பல்கதிர்ப் பருதி, தெறுகதிர் ஈரம் நைத்த நீர்அறு நனந்தலை, தலைவனைத் தோழி செலவழுங்குவித்தல், தலைவியைத் தலைவன் உடன்மறுத்துச் செல்லுதல், தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுதல், வேனில் நீடிய வேய் உயர் நனந்தலை, வேனில் நீடிய வான் உயர் வழிநாள், அலங்கு கதிர் வேய்ந்த அழல் திகழ் நனந்தலை, வேனிற் பாதிரிக் கூனி மாமலர், ஒருதனி நெடுவீழ் உதைத்த கோடை, கடுவெயில் திருகிய வேனில் வெங்காட்டு, அழல்கான்று திரிதரும் அலங்கு கதிர், தோழி ஆற்றுவித்தல், விளங்கு பகல் உதவிய பல்கதிர் ஞாயிறு, காடுகவின் அழியும் கோடை, குயில் குரல் கற்ற வேனில், பருவங் கண்டு ஆற்றாதிருத்தல், தலைவனைத் தோழி இயற்பழித்தல், தலைவி ஆற்றியிருத்தல், நற்றாய் புலம்பல், முகை தலை திறந்த வேனிற், தெறுகதிர் உலைஇய வேனில் வெங்காட்டு, அழல் எறி கோடை, தலைவன் வரவினைத் தலைவிக்குக் கூறுதல் குறித்த செய்திகள் எடுத்துக்காட்டப்பட்டு விளக்கப்படுகின்றன.

**“பகற்பொழுதும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் நான்காம் இயலில் வைகறை, நண்பகல், விடியல், எற்பாடு பொழுதுகளில் காதலர் நிலை விளக்கப்படுகின்றது. தோழி தலைவனுக்கு வாயில் மறுத்தல், தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுதல். தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறுதலர், தலைவனை வரைவு கோடல், தோழி உடன்போக்கு மறுத்தல், பரத்தமைப் பரிவு, தலைவியின் ஆற்றாமை; தோழி செலவழுங்குவித்தல், தலைவியை இற்செறித்தல், உடன்போக்கு, தலைவியின் ஆற்றாமை,

தோழி ஆற்றுவித்தல், தலைவன் வரவு கூறுதல் ; தலைவன் வரைவு நீட்டித்தல், தலைவி தன் நெஞ்சிற்குக் கூறுதல், தோழி ஆற்றுவித்தல், தலைவன் புலம்பல் குறித்ததான வைகறை, காலை, நண்பகல், எற்பாடு என நான்கு பொழுதுகளில் நிகழும் காதலர்தம் ஒழுக்கம் இவ்இயலில் எடுத்துக்காட்டி விளக்கப்பட்டுள்ளது.

**“மாலைப்பொழுதும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் ஐந்தாம் இயலில், மாலைப்பொழுதின் துன்பம், புன் கண் மாலை, ஒரு வழித்தணத்த காலத்தில் தலைவியின் ஆற்றாமை, பகற்குறி, இரவுக்குறி மறுத்தல், வரைவு நீட்டித்த காலத்து வருத்தம், வன்பொறை எதிரழிந்து கூறுதல், செலவுக் குறிப்பறிந்து தலைவி கூறுதல், தலைவன் நெஞ்சொடு கிளத்தல், நனை நகு மாலை, புலம்பு கொள் மாலை, எல்லை போகிய புல்லென் மாலை, பழங் கண் மாலை, உடன்வருவென் என்ற தலைவிக்குத் தலைவன் கூறுதல் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல், பருவ வரவு கண்ட தலைவியின் ஆற்றாமை, வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுதல் ஆகிய செய்திகள் விரிவாக விளக்கப்படுகின்றன.

**“இரவுப்பொழுதும் மாந்தர்கள் நிலையும்”** என்னும் ஆறாம் இயலில், தலைவனைப் பகலில் வரக் கூறுதல், தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறுதல், தலைவன் சிறப்புறத்தானாகத் தலைவி கூறுதல், துன்பம் தரும் யாமம், தொழில் மழை பொழிந்த கானாட் கங்குல், வான் எனப்பூத்த பானாட் கங்குல், வான் உமிழ் நடுநாள், மயங்குதுளி பொழிந்த பானாட் கங்குல், படுமழை பொழிந்த பானாட் கங்குல், இரை நசைஇப் பிரிக்கும் அரைநாட் கங்குல், யாமே அன்றியும் உள் கொல் பானாள், புயல் ஏறு உரைஇய வியல் இருள் நடுநாள், அடுபுலி வழங்கும் ஆர்இருள் நடுநாள், ஏனலும் இறங்கு பொறை உயிர்த்தன பானாள், உரவு மழை பொழிந்த பானாட் கங்குல், கணமழை

பொழிந்த கான்மடி இரவு, முன்னிலைப் புறமொழி, இருகுறி மறுத்தல், தோழி தலைவனை வரைவு வேண்டல், தலைவி தலைவனை வரைவு கடாதல், தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்குதல், தோழி செலவழுங்குவித்தல், தலைவன் பிரிவைத் தோழி கூறுதல், தலைவியின் ஆற்றாமை, பாம்பு மதன் அழியும் பானாட் கங்குல், மன் உயிர் மடிந்த பானாட் கங்குல், துளி தலைக்கொண்ட நளிபெயல் நடுநாள், தோழி ஆற்றுவித்தல், தலைவன் வரவுரைத்தல் ஆகிய செய்திகள் விளக்கமாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

**“முடிவுரையில்” “சங்க அக இலக்கியங்களில் பருவங்களும் மாந்தர் செயல்களும்”** என்னும் பொருண்மையில் அமைந்த இவ்ஆய்வின் கருதுகோளை மெய்ப்பிக்கும் வகையில் இயல்கள் தோறும் தொகுக்கப்பெற்ற ஆய்வு முடிவுகள் முடிவுரை பகுதியில் வகுத்தும், தொகுத்தும் தருவதோடு, தொடர்ந்து மேற்கொள்ளப்பட வேண்டிய பிற ஆய்வாளருக்கான களம் சுட்டி அமைகின்றது.

**துணை நூற்பட்டில்**

துணை நூற்பட்டியலில் ஆய்வுக்குத் துணையாக அமைந்த முதன்மை, துணைமை ஆதார நூல்கள், கட்டுரைகள், அகராதிகள், நிகண்டுகள், கலைக்களஞ்சியங்கள், ஆங்கில நூல்கள் ஆகியவை அகரவரிசைப்படி தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்பு**

இவ் ஆய்வோடு தொடர்புபட்ட பின்னிணைப்பில் அகநானூறு மற்றும் கலித்தொகை நூல்களில் அமைந்த காலம், பொழுது தொடர்புபட்ட பாடல்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.